412

சாம்பா

# செந்தமிழ்ச் சோலை

பத்தாம் வகுப்பு



TB
031(10)
N66
!46357.

சாம்பா

# செந்தமிழ்ச் சோலை

## பத்தாம் வகுப்பு

412
167

தொகுப்பாசிரியர்கள்:

V. அருணாசலம்

தலைமைத் தமிழாசிரியர், P. S. உயர்நிலைப்பள்ளி, மயிலாப்பூர்.

வித்துவான் N. T. சேக்ஸ்பியர்

தமிழாசிரியர்

மேலை நெல்லை உயர்நிலைப்பள்ளி, நல்லூர், நெல்லை மாவட்டம்.

சாம்பா பப்ளிஷிங் கம்பெனி

12, பிரான்சிஸ் ஜோசப் தெரு, சென்னை–1

பதிப்புரிமை] 1966 [விலை ரூ. 2·50

# முகவுரை

இத்தொகுப்பு நூல் பத்தாம் வகுப்புக்கு உரியது. இஃது அண்மையில் (31—8—1966) வெளியான பாட இயலை உளங்கொண்டு அமைக்கப்பெற்றது.

செய்யுட் பகுதிக்கு உரிய நூலின் பெயர் விளக்கம்—நூலாசிரியர் வரலாறு—அருஞ்சொற்பொருள்—கேள்விகள்—பயிற்சி என்பன செய்யுட் பகுதியின் இறுதியில் சேர்க்கப்பெற்றுள்ளன. உரைப் பகுதிக்குரிய அருஞ்சொற்பொருள்—கேள்விகள்–பயிற்சி என்பன ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் சேர்க்கப் பெற்றுள்ளன.

பள்ளி நூலகத்து நூல்களைப் பயன்படுத்திப் பாடத் தொடர்பான பொருள்களைப்பற்றிக் கட்டுரை எழுதும் பயிற்சியும் ஆங்காங்குத் தரப்பெற்றுள்ளன. சொற்களைச் சேர்த்துச் சொற்றொடர்களாக்கவும் சொற்றொடர்களைச் சொற்களாகப் பிரிக்கவும் போதிய பயிற்சிகளும் ஆங்காங்குத் தரப்பெற்றுள்ளன.

பிள்ளைகள் இப்பயிற்சிகளை ஊக்கத்துடன் செய்வராயின், அவர்கட்கு இலக்கண அடிப்படை நன்கு அமையும். பண்பட்ட பேராசிரியர்களின் கட்டுரைகள் பிள்ளைகளின் தமிழ் நடையை வளப்படுத்த வல்லவை.

செய்யுட் பகுதியில் தங்கள் பாக்களைச் சேர்த்துக்கொள்ளவும் உரைப் பகுதியில் தங்கள் கட்டுரைகளைச் சேர்த்துக்கொள்ளவும் இசைவளித்த பெருமக்களுக்கு எங்கள் உளமார்ந்த நன்றி உரியது.

தொகுப்பாசிரியர்கள்

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

## உரைப் பகுதி

## மனப்பாடம் செய்யத்தகும் செய்யுட் பகுதிகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | மொழி வாழ்த்து | | |
| 2. | திருக்குறள் முழுமையும் | குறட்பாக்கள் | 50 |
| 3. | சிலப்பதிகாரம் | வரிகள் | 52–58 |
| 4. | கம்பராமாயணம் | செய்யுட்கள் | 12, 13 |
| 5. | இரட்சணிய யாத்திரிகம் | செய்யுட்கள் | 4, 5, 6, 10 |
| 6. | சீருப்புராணம் | ,, | 16, 17 |
| 7. | பாரத வெண்பா | ,, | 9–14 |
| 8. | புறநானூறு | ,, | 1, 2 |
| 9. | வருணனை—நிலாத்தோற்றம் | செய்யுள் | 1 |
| 10. | வழிபாட்டுப் பாடல்கள் | ,, | 1–4 |

## நாட்டு வணக்கம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே

காயே தவ ஜய காதா

ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

—இரவீந்திரநாத தாகூர்

## தமிழாக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்து

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும் [கிறுய்.
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்

திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;

இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
அவை நின் ஆசியை வேண்டுகின்றன;

நின் புகழைப் பாடுகின்றன;
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு

**வெற்றி! வெற்றி! வெற்றி!**

## உறுதி மொழி

எனது தாய்நாடு இந்தியா. இந்தியர் அனைவரும் என் உடன் பிறந்தவர்.

என் தாய்த்திருநாட்டை நான் உளமார நேசிக்கிறேன்; வளமும் வேறுபாடும் நிறைந்த அதன் மரபினை எண்ணி இறும்பூதடைகின்றேன்; அதன் புகழுக்கேற்பத் தகுதியுடைய நன்மகனாய் விளங்க நான் என்றும் முயல்வேன்.

அன்புடன் என்னை ஈன்ற அன்னையார், ஆருயிர்த் தந்தையார், ஆசிரியப் பெருந்தகையார், ஆன்ற முதியோர் ஆகிய அனைவரையும் வணங்குவேன். மாண்புடை அன்னவர் அனைவரையும் நன்னயம் துலங்க நடத்துவேன்.

எனது நாட்டிற்கும், என் மக்களுக்கும் என் வந்தனை என்றும் உரியது. என் நாட்டவர் வாழ்வின் நலமும் வளமுமே என் போற்றரிய இன்பம் என்று உளம் பூரிப்பேன்.

# செய்யுட் பகுதி

## I. வாழ்த்து

### 1. கடவுள் வாழ்த்து

ஆத்தி சூடி இளம்பிறை யணிந்து
மோனத் திருக்கும் முழுவெண் மேனியான்
கருநிறங் கொண்டுபாற் கடல்மிசைக் கிடப்போன்
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்
ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்
உருவகத் தாலே உணர்ந்துண ராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே அதனியல் ஒளியுறும் அறிவாம்
அதனிலே கண்டார் அல்லலை அகற்றினர்
அதனருள் வாழ்த்தி அமரவாழ் வெய்துவோம்.

—பாரதியார்

### 2. மொழி வாழ்த்து

தேனினும் இனியநற் செந்தமிழ் மொழியே
தென்னாடு விளங்குறத் திகழுந்தென் மொழியே
ஊனினும் ஒளிர்வுறும் ஒண்டமிழ் மொழியே
உணர்வினுக் குணர்வதாய் ஒளிர்தமிழ் மொழியே
வானினும் ஓங்கிய வண்டமிழ் மொழியே
மாந்தருக் கிருகண் வயங்குநன் மொழியே
தரணியில் சிறப்புறுந் தனித்தமிழ் மொழியே
தழைத்தினி தோங்குவாய் தண்டமிழ் மொழியே.

—கா. நமச்சிவாய முதலியார்

## 3. நாட்டு வாழ்த்து

படையாமல் உண்ணாத தமிழ்நாடு வாழ்க
பகையாரும் எண்ணாத தமிழ்நாடு வாழ்க
அடையாத துன்பங்கள் அவைவந்த போதும்
அநியாயம் எண்ணாத தமிழ்நாடு வாழ்க
கொல்லாமை உயர்வென்னும் தமிழ்நாடு வாழ்க
கொடைவள்ளல் பலர்நின்ற தமிழ்நாடு வாழ்க
இல்லாமை அறியாத தமிழ்நாடு வாழ்க
இரவாமை அறமென்னும் தமிழ்நாடு வாழ்க.

—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை

# II. அறவுரை

## 1. திருக்குறள்

**1. கடவுள் வாழ்த்து**

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார். 1

**2. வான் சிறப்பு**

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லாம் மழை. 2

**3. நீத்தார் பெருமை**

உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. 3

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 4

**4. அறன் வலியுறுத்தல்**

மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற. 5

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. 6

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். 7

**5. வாழ்க்கைத்துணை நலம்**

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில். 8

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 9

**6. அன்புடைமை**

என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம். 10

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு. 11

7. செய்ந்நன்றி யறிதல்

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். 12

கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும். 13

8. அடக்கமுடைமை

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து. 14

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 15

9. பயனில சொல்லாமை

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். 16

10. ஈகை

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ லுமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். 17

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். 18

சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை. 19

11. வாய்மை

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன். 20

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற. 21

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. 22

**12. கல்வி**

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 23

**13. கேள்வி**

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். 24

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. 25

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென். 26

**14. வலியறிதல்**

பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். 27

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும். 28

**15. தெரிந்து தெளிதல்**

காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும். 29

தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும். 30

**16. செங்கோன்மை**

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. 31

இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். 32

**17. கொடுங்கோன்மை**

வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு. 33

18. வெருவந்த செய்யாமை

கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர். 34

19. இடுக்கணழியாமை

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். 35

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன். 36

20. சொல்வன்மை

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. 37

21. நாடு

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. 38

22. படைச்செருக்கு

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு. 39

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. 40

23. நட்பு

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும். 41

24. பெரியாரைப் பிழையாமை

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னுந்
தகைமாண்ட தக்கார் செறின். 42

25. மானம்

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. 43

**26.** கள்ளுண்ணுமை

துஞ்சினர் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். 44

**27.** பெருமை

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 45

**28.** உட்பகை

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 46

**29.** சான்ருண்மை

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்ருண்மை மேற்கொள் பவர்க்கு. 47

**30.** பண்புடைமை

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். 48

**31.** குடிசெயல்வகை

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல். 49

**32** உழவு

உழவினர் மைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. 50

—திருவள்ளுவர்

## 2. இன்னிலை

முப்பொருளுண்மையறிக

முப்பொரு ளுண்மை தெளிவா னருஞ்சீலன்
முப்பொரு ளுண்மை யுடையா னருமுனிவன்
முப்பொரு ளுண்மை மடுப்பா னிறையாங்கு
முப்பொரு ளுண்மைக் கிறை. 1

### செல்வமும் வறுமையும்

மெய்வலியுஞ் சென்னிலையும் வாழ்நாளுந் தூவொழுக்கு
மெய்யா வளிக்கும் வெறுக்கையிலார்—வையத்துப்
பல்கிளையும் வாடப் பணையணைதோள் சேய்திரங்க
வொல்குயிர் நீத் தாரு நரகு. 2

### செல்வத்தைச் சேர்த்திடுக

உடைமையரு தீட்ட லுறுதுணையாம் யாண்டும்
உடைமையராச் சென்றக்கா லூரெல்லாஞ் சுற்றம்
உடைமைக்கோ லின்றங்குச் சென்றக்காற் சுற்றம்
உடையவரும் வேறு படும். 3

### பிறவியை நீக்குவான்

தூயசொல் லாட்டுந் துணிவறிவுந் துன்பங்கள்
தோயக் கலங்காத் துணைவலியும்—பூயல்
படுக்குந் திருவத்த னுரே பறிப்பர்
அடுக்கு மடிச்சேரா வாறு. 4

### அறத்தை அணியாகக் கொள்வார்

கழிவிரக்கங் கொள்ளார் கதழ்வாளார் வேர்த்துப்
பழிமுறுகக் கோடார் பயன்பேர்த்—தழிமுதலை
யில்லங்கொண் டாக்கா ரிடும்பைத் தளைதணப்பர்
நல்லறனை நாளணிகொள் வார். 5

## 3. பழமொழி

### அறிவுடைமை

ஆயிரவ ரானும் அறிவிலார் தொக்கக்கால்
மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கலார்
பாயிருள் நீக்கும் மதியம்போல் பன்மீனும்
காய்கலா வாகும் நிலா. 1

### கல்வி

உரைமுடிவு காணுன் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்
சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும். 2

### சான்றோர் இயல்பு

முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்—சொல்லின்
நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப
அறிமடமும் சான்றோர்க் கணி. 3

### கீழ்மக்கள் இயல்பு

பெரியார்க்குச் செய்யும் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்து விடுதல்—பொறிவண்டு
பூமேல் இசைமுரலும் ஊர அதுவன்றோ
நாய்மேல் தவிசிடு மாறு. 4

### 'புலித்தலையை நாய் மோத்தல் இல்

நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ—வாடி
வலித்துத் திரங்கித் கிடந்தே விடினும்
புலித்தலையை நாய்மோத்தல் இல். 5

### நன்றியில் செல்வம்

வழங்கலும் துய்த்தலும் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப அதுவன்றோ,
நாய்பெற்ற தெங்கம் பழம். 6

### ஈகை

சிறிய பொருள்கொடுத்துச் செய்த வினையால்
பெரிய பொருள்கருது வாரே—விரிபூ
விராஅம் புனலூர வேண்டயிரை விட்டு
வராஅல் வாங்கு பவர். 7

### அறஞ் செய்தல்

மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை
ஆய்வின்றிச் செய்யாதார் பின்னை வழிநினைந்து
நோய்காண் பொழுதின் அறஞ்செய்வார்க் காணுமை
நாய்காணின் கற்காணு வாறு. 8

—முன்றுறையரையனார்

# III. தொடர்நிலைச் செய்யுள்

## 1. சிலப்பதிகாரம்

### அடைக்கலக்காதை

#### பாடப்பகுதிக்குரிய கதைச் சுருக்கம்

மாதவியின் கூட்டுறவால் வறுமையுற்ற கோவலன் கண்ணகியின் காற்சிலம்புகளுள் ஒன்றை விற்று மதுரையில் தங்கி வாணிகம் செய்ய விரும்பிக் கண்ணகியோடு பூம்புகாரை விட்டு மதுரை நோக்கி நடந்தான். வழியில் கவுந்தியடிகள் என்ற சமண சமயப் பெண் துறவியார் அவ்விருவரோடும் சேர்ந்து மதுரைக்குச் சென்றனர்; வையை யாற்றைக் கடந்தனர்; மதுரை நகரத்துக் கோட்டைக்கு வெளியிலிருந்த சமணர் தவப்பள்ளியில் தங்கினர். கோவலன் மட்டும் கோட்டையுட் புகுந்து நகரைக் கண்டு மீண்டான்.

அப்போது **மாடலன்** என்ற மறையவன் அத்தவப்பள்ளிக்கு வந்தான். அவன் சோழ நாட்டினன்; கோவலன் வரலாற்றை நன்கறிந்தவன்; அவனது கொடைத்தன்மையை நேரிற்கண்டவன்; ஆதலால் செல்வ வளத்தில் பிறந்து வளர்ந்த கோவலன் பிழைப்புக் கருதி வேற்று நாட்டுக்கு வந்ததைக் குறித்து வருந்தினன். கோவலன், தனக்கு மன்னனால் தீங்கு நேருவது போலவும், தன் மனைவி பொறுத்தற்கரிய துன்பம் அடைவது போலவும், தானும் தன் மனைவியும் துறக்கம் எய்துவது போலவும், மாதவி தன் மகளான மணிமேகலையைப் பௌத்த பிக்குணி ஆக்குவது போலவும் நள்ளிரவு யாமத்துக் கனவு கண்டதாகக் கூறினன்.

கவுந்தியடிகளும் மாடலனும் அன்று சூரியன் மறைவதற்குள் கண்ணகியுடன் மதுரை நகருள் புகும்படி வற்புறுத்தினர்; மதுரையில் இருந்த வணிகரைக் கண்டு அவர்தம் உதவியால் பிழைக்கும்படி அறிவுரையும் கூறினர்.

அவ்வமயம் இயக்கி என்ற தேவதைக்குப் பாற்சோறு படைக்க வந்த **மாதரி** என்ற ஆயர் முதுமகள் கவுந்தியடிகளைக் கண்டு பணிந்தாள். அப்பெண்மணி சிறந்த ஒழுக்கமுடையவள். அதனால் அடிகள், கோவலன் வணிகரைக் கண்டு வருமளவும் கண்ணகியைப் பாதுகாக்கும்படி மாதரிக்கு அறிவுறுத்தினர்; அவளை நீராட்டி வேண்டும் உதவிகளைச் செய்யும்படி வேண்டினர்; கண்ணகியின் கற்பின் சிறப்பைப் பாராட்டினர். மாதரி மிக்க மகிழ்ச்சியுடன் கண்ணகியை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டாள்.

மாடலன் வினா

இம்மைச் செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்தித்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது
விருத்தகோ பால நீயென வினவக்

கோவலன் கண்ட கனவு

கோவலன் கூறுமோர் குறுமகன் றன்னால்
காவல் வேந்தன் கடிநகர் தன்னில்
நாறைங் கூந்தல் நடுங்குதுய ரெய்தக்
கூறைகோட் பட்டுக் கோட்டுமா வூரவும்
அணித்தகு புரிகுழ லாயிழை தன்னொடும்
பிணிப்பறுத் தோர்தம் பெற்றி யெய்தவும்
மாமலர் வாளி வறுநிலத் தெறிந்து
காமக் கடவுள் கையற் றேங்க
அணிதிகழ் போதி யறவோன் றன்முன்
மணிமே கலையை மாதவி யளிப்பவும்
நனவு போல நள்ளிருள் யாமத்துக்
கனவு கண்டேன் கடிதீங் குறுமென

கவுந்தி அடிகளும் மாடலனும் கூறுதல்

அறத்துறை மாக்கட் கல்ல திந்தப்
புறச்சிறை யிருக்கை பொருந்தா தாகலின்
அரைசர் பின்னோர் அகநகர் மருங்கினின்
உரையிற் கொள்வரிங் கொழிகநின் இருப்புக்
காதலி தன்னொடு கதிர்செல் வதன்முன்
மாட மதுரை மாநகர் புகுகென
மாதவத் தாட்டியும் மாமறை முதல்வனும்
கோவலன் றனக்குக் கூறுங் காலை

மாதரி வருகை

அறம்புரி நெஞ்சின் அறவோர் பல்கிய
புறஞ்சிறை மூதூர்ப் பூங்கண் இயக்கிக்குப்
பான்மடை கொடுத்துப் பண்பிற் பெயர்வோள்
ஆயர் முதுமகள் மாதரி என்போள்
காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்

## கவுந்தி அடிகள் மாதரியிடம் கண்ணகியை அடைக்கலப்படுத்துதல்

ஆகாத் தோம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை
தீதிலள் முதுமகள் செவ்வியள் அளியள்
மாதரி தன்னுடன் மடந்தையை இருத்துதற்
கேதம் இன்றென எண்ணின ளாகி
மாதரி கேளிம் மடந்தைதன் கணவன்
தாதையைக் கேட்கில் தன்குல வாணர்
அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்
உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவும்
இடைக்குல மடந்தைக் கடைக்கலந் தந்தேன்
மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனந் தீட்டித்
தேமென் கூந்தற் சின்மலர் பெய்து
தூமடி உடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமும் காவலும் ஆயிழை தனக்குத்
தாயும் நீயே யாகித் தாங்கீங்
கென்னொடு போந்த விளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி
இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக்கடம் பூண்டவித் தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தர் கொற்றம் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்தநா டென்னும்
அத்தகு நல்லுரை அறியா யோநீ
தவத்தோர் அடைக்கலம் தான்சிறி தாயினும்
மிகப்பே ரின்பம் தருமது கேளாய்.

—இளங்கோவடிகள்

# 2. மணிமேகலை

## பாத்திரம் பெற்ற காதை

### பாடப்பகுதிக்குரிய கதைச்சுருக்கம்

மணிமேகலை கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்தவள். கோவலன் மதுரையிற் கொலையுண்ட பின்பு மாதவி தன் மகளான மணிமேலையைத் தவவொழுக்கத்தில் ஈடுபடுத்த விரும்பினள். மணிமேகலா தெய்வம் என்பது ஓர் இரவு அவள் உறங்குகையில் அவளைத் தூக்கிச் சென்று, மணிபல்லவம் என்னும் தீவில் விட்டு மறைந்தது. அங்கு இருந்த புத்த பீடிகையைக் கண்டு அவள் பயன்பெறல் வேண்டும் என்பது அத் தெய்வத்தின் விருப்பம்.

மணிமேகலை மறுநாட் காலையில் எழுந்து புத்தபீடிகையைக் கண்டு தொழுதாள்; தன் பழம் பிறப்பை உணர்ந்தாள்; மணிமேகலா தெய்வம் மீண்டு வந்து தன்னை உணர்த்தி, வேற்றுருக் கொள்ளவும், பசியின்றி இருக்கவும், வானத்திற் பறக்கவும் உதவும் மூன்று மந்திரங்களை உபதேசித்து அகன்றது. பின்பு மணிமேகலை அங்கிருந்த மணற் குன்றுகள் முதலியவற்றைப் பார்த்துக்கொண்டு வந்தாள்.

அப்பொழுது அத்தீவைக் காத்துவந்த தீவதிலகை என்ற தெய்வ மங்கை அவளைச் சந்தித்தாள்; அவளது வரலாற்றைக் கேட்டறிந் தாள்; தன் வரலாற்றை எடுத்துக் கூறினள்; அங்கிருந்த புத்தபீடிகை யின் சிறப்பையும் உரைத்தாள். பின்பு அவள் மணிமேகலையை நோக்கி, "நீ அறம் கேட்பதற்கு உரியவள். இங்குள்ள புத்தபீடிகையின் முன்பு காணப்படும் கோமுகி என்னும் பொய்கையைப்பார். அமுதசுரபி என்பது எடுக்க எடுக்க உணவு வற்றாத நிலையைத் தரும் தெய்விகப் பாத்திரம். அஃது ஆண்டுக்கு ஒருநாள் இப்பொய்கையிலிருந்து வெளிப்படும். அந்நாள் இந்நாள். அப்பொழுது இப்பொழுது. அஃது இப்பொழுது உன் கைக்கு வரலாம்," என்றாள்.

மணிமேகலை புத்தபீடிகையைத் தொழுதாள்; அப்பொய்கையின் எதிரில் சென்று நின்றாள். அப்பொழுது அத்தெய்விகப் பாத்திரம் அப் பொய்கையிலிருந்து வெளிப்பட்டு அவள் கையில் வந்து தங்கியது. மணிமேகலை அத்தெய்விகச் செயலைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சி அடைந்தாள்.

#### தீவதிலகையின் வினா

மணிமே கலாதெய்வம் நீங்கிய பின்னர்
மணிபல் லவத்திடை மணிமே கலைதான்
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்
தண்மலர்ப் பொய்கையும் தாழ்ந்தனள் நோக்கிக்

காவதந் திரியக் கடவுட் கோலத்துத்
தீவ தீலகை செவ்வனந் தோன்றிக்
கலங்கவிழ் மகளிரின் வந்தீங் கெய்திய
இலங்குதொடி நல்லாய் யார்நீ என்றலும்

### மணிமேகலையின் விடை

எப்பிறப் பகத்துள் யார்நீ என்றது
பொற்கொடி யன்னாய் பொருந்திக் கேளாய்
போய பிறவியில் பூமியங் கிழவன்
இராகுலன் மனையான் இலக்குமி யென்பேர்
ஆய பிறவியில் ஆடலங் கணிகை
மாதவி யீன்ற மணிமே கலையான்
என்பெயர்த் தெய்வம் ஈங்கெனைக் கொணரவிம்
மன்பெரும் பீடிகை என்பிறப் புணர்ந்தேன்
ஈங்கென் வரவிதீங் கெய்திய பயனிது

### மணிமேகலையின் வினா

பூங்கொடி யன்னாய் யார்நீ யென்றலும்

### தீவதிலகையின் விடை

ஆயிழை தன்பிறப் பறிந்தமை யறிந்த
தீவ திலகை செவ்வனம் உரைக்கும்
ஈங்கிதன் அயலகத் திரத்தின தீவத்
தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை
அறவியங் கிழவோன் அடியிணை யாகிய
பிறவி என்னும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய் ஆங்குள தாதலின்
தொழுதுவலங் கொண்டு வந்தேன் ஈங்குப்
பழுதில் காட்சியிந் நன்மணிப் பீடிகை
தேவர்கோன் ஏவலிற் காவல் பூண்டேன்
தீவ திலகை என்பெய ரிதுகேள்

### தீவதிலகை பீடிகையின் சிறப்புரைத்தல்

தரும தலைவன் தலைமையின் உரைத்த
பெருமைசால் நல்லறம் பிறழா நோன்பினர்
கண்டுகை தொழுவோர் கண்டதற் பின்னர்ப்

பண்டைப் பிறவியர் ஆகுவர் பைந்தொடி
அரியர் உலகத் தாங்கவர்க் கறமொழி
உரிய துலகத் தொருதலை யாக
ஆங்ஙன மாகிய அணியிழை இதுகேள்

**தீவதிலகை அமுதசுரபியைப்பற்றிக் கூறுதல்**

ஈங்கிப் பெரும்பெயர்ப் பீடிகை முன்னது
மாமலர்க் குவளையும் நெய்தலும் மயங்கிய
கோமுகி என்னும் கொழுநீ ரிலஞ்சி
இருதிள வேனிலில் எரிகதி ரிடபத்
தொருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்
மீனத் திடைநிலை மீனத் தகவையின்
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்
ஆபுத் திரன்கை யமுத சுரபியெனும்
மாபெரும் பாத்திரம் மடக்கொடி கேளாய்
அந்நா ளிந்நாள் அப்பொழு திப்பொழுது
நின்னாங்கு வருவது போலும் நேரிழை
ஆங்கதிற் பெய்த ஆருயிர் மருந்து
வாங்குநர் கையகம் வருத்துதல் அல்லது
தான்தொலை வில்லாத் தகைமைய தாகும்
நறுமலர்க் கோதை நின்னூ ராங்கண்
அறவணன் தன்பாற் கேட்குவை யிதன்றிறம்
என்றவள் உரைத்தலும் இளங்கொடி விரும்பி

**மணிமேகலை அமுதசுரபியைப் பெறுதல்**

மன்பெரும் பீடிகை தொழுதனள் வணங்கித்
தீவ திலகை தன்னொடுங் கூடிக்
கோமுகி வலஞ்செய்து கொள்கையின் நிற்றலும்
எழுந்துவலம் புரிந்த இளங்கொடி செங்கையில்
தொழுந்தகை மரபிற் பாத்திரம் புகுதலும்
பாத்திரம் பெற்ற பைந்தொடி மடவாள்
மாத்திரை யின்றி மனமகிழ் வெய்தினள் *

—மதுரைக் கூலவாணிகன் சாத்தனார்

* வரிகளின் எண்ணிக்கையைக் கருதி 'எய்தி' என்னும் வினையெச்சம் முற்றாக்கி முடிக்கப்பெற்றது.

# 3. பெரிய புராணம்

## இளையான்குடி மாற நாயனார் புராணம்

### பாடப்பகுதிக்குரிய கதைச்சுருக்கம்

மாறனார் என்ற சிவனடியார் இளையான்குடி என்ற ஊரில் வாழ்ந்தார். அவர் வேளாளர்; மிக்க செல்வர். அவர் நாடோறும் சிவனடியாரை வரவேற்று உண்பிக்கும் கடமையிற் சிறந்தவர்; அதனில் எல்லையற்ற இன்பத்தைக் கண்டவர். அவர் மனைவியார் அவரது சொற்படி நடக்கும் சிறப்புடையவர். அவர் செல்வம் இல்லாத பொழுதும் சிவனடியாரை உண்பிக்கும் கடப்பாட்டில் தவறார் என்பதை உணர்த்த விரும்பிய சிவபெருமான், அவரது செல்வ வளத்தைச் சுருங்கச் செய்தார்.

செல்வம் சுருங்கினும் நாயனாரது விருந்தோம்பும் பண்பு சுருங்கவில்லை. அவர் ஒரு நாள் தமது வயலில் நெல் விதைகளை விதைத்துவிட்டு வீடு வந்தார். அன்று இரவு சிவபெருமான் வயது முதிர்ந்த சிவனடியாராக வேடம்பூண்டு மழையில் நனைந்துகொண்டு மாறனார் வீட்டிற்கு வந்தார். மாறனார் அவரை மகிழ்ச்சியோடு வரவேற்றார்; அவரது உடலிலிருந்த ஈரத்தைப் போக்கினார்; பின்பு அடியாரை ஓய்வு கொள்ளச் செய்து தம் மனைவியாரை அடைந்தார்; "இன்று வீட்டில் நமக்கு உணவு இல்லை. ஆயினும் வந்துள்ள அடியவரை உண்பிப்பது எப்படி?" என்று வினவினார். மனைவியார், "நமக்கு இனிக் கடன் கொடுப்பவர் இல்லை. பொழுதும் கடந்துவிட்டது. நாம் இன்று பகலில் வயலில் விதைத்த செந்நெல்லை வாரிக்கொண்டுவரின், அதனைக் குற்றி உணவாக்கலாம்," என்று கூறினார். உடனே மாறனார் மிக்க மகிழ்ச்சியோடு அஞ்சத்தக்க அந்நள்ளிரவு இருளில் வயலுக்குச் சென்றார்; அன்று பகலில் விதைத்த நெல்மணிகளை வாரிக்கொண்டு வீடுவந்து சேர்ந்தார்.

அடுப்பு எரிக்க விறகு இல்லை. அதனால் நாயனார் தம் வீட்டுக் கூரையில் இடப்பெற்றிருந்த அலகினை அறுத்தெடுத்தார். அம்மையார் நெல்மணிகளை வறுத்தார்; பின்பு அவற்றை அரிசியாக்கினார்; பின்னர் அவற்றை அடிசில் ஆக்கினார்; "கறிக்கு என் செய்வது!" என்று ஏங்கினார். நாயனார், தமது வீட்டுக் கொல்லையில் தாமாக முளைத்த கீரை வகைகளைப் பறித்து வந்தார். அம்மையார் அவற்றை வேறு வேறு கறிகளாகச் சமைத்தார்.

நாயனார், உறங்கிக்கொண்டிருந்த சிவனடியாரிடம் சென்று அமுது செய்ய வரும்படி வேண்டினார். அப்பொழுது சிவனடியார் சோதியாய்க் காட்சி வழங்கினார். அதனைக் கண்டு நாயனாரும் அம்மையாரும் திகைத்து நின்றனர். அப்பொழுது சிவபெருமான் உமாதேவியாருடன் இடபவாகனத்தில் காட்சி தந்து, "அன்பனே, அடியார்களுக்கு

ஆர்வத்துடன் உணவளித்துவந்த நீயும் நின் மனைவியும் எமது பேருலகத்தை அடைந்து இன்பத்தை நுகருவீர்களாக,'' என்று அருள் செய்தார்.

[**இளையான்குடி** என்ற ஊரில் **மாறனார்** எனற வேளாளர் வாழ்ந்தார். அவர் சிறந்த சிவனடியார்; மிக்க செல்வர். அவர் நாடோறும் சிவனடியாரை உண்பிக்கும் சிறந்த பணியில் ஈடுபட்டார். அவர் மனைவியார் அவரது விருப்பப்படி நடப்பதையே தம் கடமையாகக் கொண்டவர்.]

**மாறனார் அடியவர்களை உபசரித்து உண்பித்தல்**

ஆர மென்பு புனைந்த வையர்த
மன்ப ரென்பதொர் தன்மையா
னேர வந்தவர் யாவ ராயினும்
நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள்
குவித்து நின்று செவிப்புலத்
தீர மென்மது ரப்ப தம்பரி
வெய்த முன்னுரை செய்தபின் 1

கொண்டு வந்து மனைப்பு குந்து
குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலி னாத னத்திடை
வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு
சுவைத்தி றத்தன வொப்பிலா
வண்டர் நாயகர் தொண்ட ரிச்சையி
னமுது செய்ய வளித்துளார். 2

[இங்ஙனம் இவர் சிவனடியாரை உபசரித்து உண்பித்துவந்தமை தம் செல்வச் செழிப்பினால் மட்டுமன்று, வறுமையிலும் இங்ஙனம் செய்ய வல்லவர் என்பதைச் சிவபெருமான் உலகத்தவர்க்கு அறிவிக்க விரும்பி, அவரது செல்வ வளத்தைச் சுருங்கச் செய்தார்.]

**வளம் சுருங்கியும் மனம் சுருங்காமை**

இன்ன வாறு வளஞ்சு ருங்கவு
மெம்பி ரானிளை யான்குடி
மன்னன் மாறன் மனஞ்சு ருங்குத
லின்றி யுள்ளன மாறியும்

தன்னை மாறி யிறுக்க வுள்ள
கடன்க டக்கன கொண்டுபின்
முன்னை மாறில் திருப்ப ணிக்கண்
முதிர்ந்த கொள்கைய ராயினர். 3

இறைவன் தவவேடத்தொடு வருதல்

மற்ற வர்செயல் இன்ன தன்மைய
தாக மாலய ஞனவக்
கொற்ற வேனமு மன்ன முந்தெரி
யாத கொள்கைய ராயினர்
பெற்ற மூர்வது மின்றி நீடிய
பேதை யாளுட னின்றியோர்
நற்ற வத்தவர் வேட மேகொடு
ஞால முய்ந்திட நண்ணினர். 4

விருந்தினரை எதிர்கொள்ளல்

மாரிக் காலத் திரவினில் வைகியோர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்ல மடைத்தபின் பண்புற
வேரித் தாரான் விருந்தெதிர் கொண்டார். 5

மாறனர் மனைவியாருடன் யோசித்தல்

ஈர மேனியை நீக்கி யிடங்கொடுத்
தார வின்னமு தூட்டுதற் காசையாற்
றூர மாதரை நோக்கித் தபோதனர்
தீர வேபசித் தார்செய்வ தென்னென்று 6

நமக்கு முன்பிங் குணவிலை யாயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாமின் னடிசிற் றகவுற
அமைக்கு மாறெங்ங னேயணங் கேயென 7

மனைவியாரின் மறுமொழி

மாது கூறுவண் மற்றென் றுங் காண்கிலேன்
ஏதி லாரு மினித்தரு வாரில்லை
போதும் வைகிற்றுப் போமிடம் வேறிலை
தீது செய்வினை யேற்கென் செயலென்று. 8

### உணவு படைக்க மனைவியார் வழிகூறல்

செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்ல னீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலு மாகுமற்
றல்ல தொன்றறி யேனென் றயர்வுற 9

### மாறனார் மகிழ்ச்சி

மற்ற மாற்ற மனைவியார் கூறமுன்
பெற்ற செல்வ மெனப்பெரி துண்மகிழ்ந்
துற்ற காதலி னாலொருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத் தொடங்குவார். 10

### உலகெலாம் இருள்

பெருகு வானம் பிறங்க மழைபொழிந்
தருகு நாப்ப ணறிவருங் கங்குறான்
கருகு மையிரு ளின்கணங் கட்டுவிட்
டுருகு கின்றது போன்ற துலகெலாம். 11

### நள்ளிரவில் பேரிருள்

எண்ணு மிவ்வுல கத்தவர் யாவருந்
துண்ணெ னும்படி தோன்றமுன் றோன்றிடில்
வண்ண நீடிய மைக்குழம் பாமென்று
நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து 12

### மாறனார் நெல்கொணரச் செல்லல்

உள்ள மன்புகொண் டுக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் துக்குறி யின்வழிப்
புள்ளு றங்கும் வயல்புகப் போயினார்
வள்ள லாரிளை யான்குடி மாறனார். 13

### மாறனார் நெல்முளைகளுடன் மீளல்

காலி னாற்றட விச்சென்று கைகளாற்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரி யிடாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச் சுமந்தொல்லை மீண்டனர். 14

### அடுப்பெரிக்க அலக்கினை அறுத்தல்

வந்தபின் மனைவி யாரும்
வாய்தலி னின்று வாங்கி
சிந்தையில் விரும்பி நீரிற்
சேற்றினை யலம்பி யூற்றி
வெந்தழ லடுப்பின் மாட்ட
விறகில்லை யென்ன மேலோர்
அந்தமில் மனையி னீடு
மலக்கினை யறுத்து வீழ்த்தார். 15

### இன்னடிசில் ஆக்கியமை

முறித்ததை யடுப்பின் மாட்டி
முளைவித்துப் பதமுன் கொள்ள
வறுத்தபின் னரிசி யாக்கி
வாக்கிய வுலையிற் பெய்து
வெறுப்பிலின் னடிசி லாக்கி
மேம்படு கற்பின் மிக்கார்
கறிக்கினி யென்செய் கோமென்
றிறைஞ்சினார் கணவ னாரை. 16

### இளந்தளிர் பறித்துக் கறிக்கு நல்கல்

வழிவரு மிளைப்பி னோடும்
வருத்திய பசியி னாலே
யழிவுறு மைய னென்னு
மன்பினிற் பொலிந்து சென்று
குழிநிரம் பாத புன்செய்க்
குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார் போலப்
பறித்தவை கறிக்கு நல்க 17

### கறியமுது ஆக்கல்

மனைவியார் கொழுநர் தந்த
மனமகிழ் கறிக ளாய்ந்து
புனலிடைக் கழுவித் தக்க
புனிதபாத் திரத்துக் கைம்மை

வினையினல் வேறு வேறு
கறியமு தாக்கிப் பண்டை
நினைவினற் குறையை நேர்ந்து
திருவமு தமைத்து நின்று 18

அடியாரைத் துயிலுணர்த்தல்

கணவனர் தம்மை நோக்கிக்
கறியமு தான காட்டி
யிணையிலா தவரை யீண்ட
வமுதுசெய் விப்போ மென்ன
உணர்வின லுணர வொண்ண
ஒருவரை யுணர்த்த வேண்டி
யணையமுன் சென்று நின்றங்
கவர்துயி லகற்ற லுற்றர். 19

சிவனடியார் சோதியாய்த் தோன்றல்

அழுந்திய விடரு ணீங்கி
யடியனே னுய்ய வென்பால்
எழுந்தருள் பெரியோ யீண்ட
அமுதுசெய் தருள்க வென்று
தொழும்பன ருரைத்த போதிற்
சோதியாய் எழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாரும்
தொண்டருந் திகைத்து நின்றர். 20

சிவபெருமான் காட்சியளித்தல்

மாலயற் கரிய நாதன்
வடிவொரு சோதி யாகச்
சாலவே மயங்கு வார்க்குச்
சங்கரன் தான்ம கிழ்ந்தே
யேலவார் குழலா டன்னே
டிடபவா கனனய்த் தோன்றிச்
சீலமார் பூசை செய்த
திருத்தொண்டர் தம்மை நோக்கி 21

மாறனாருக்கு அருள்புரிதல்

அன்பனே யன்பர் பூசை
யளித்தநீ யணங்கி னோடும்
என்பெரு முலக மெய்தி
இருநிதிக் கிழவன் றானே
முன்பெரு நிதிய மேந்தி
மொழிவழி யேவல் கேட்ப
இன்பமார்ந் திருக்க வென்றே
அருள்செய்தா னெவர்க்கு மிக்கான். 22

—சேக்கிழார்

## 4. கம்பராமாயணம்

### அயோத்தியா காண்டம்—கங்கைப் படலம்

### பாடப்பகுதிக்குரிய கதைச்சுருக்கம்

காடு செல்லப் புறப்பட்ட இராமனும் இலக்குவனும் சீதையும் கங்கைக் கரையை அடைந்தனர்; அங்கு இருந்த ஆசிரமத்தில் தங்கினர். அப்பொழுது அக்கரையிலிருந்த சிருங்கபேரபுரத்திற்கு அரசனாகிய குகன் என்பவன் இராமன் வந்துள்ளதைக் கேள்வியுற்றான்; காணிக்கைப் பொருள்களுடன் தன் வீரர் புடைசூழ இராமனைக் காண வந்தான்; தனது வரவை இலக்குவன் வாயிலாக அறிவித்து இராமனது இசைவைப் பெற்றுத் தான் மாத்திரம் ஆசிரமத்துட் புகுந்து இராமனைக் கண்டு பணிந்தான்.

குகன் தான் கொண்டுவந்த காணிக்கைப் பொருள்களை ஏற்கும்படி இராமனை வேண்டினான். இராமன், "காணிக்கைப் பொருள்களைப் பெற்றாற்போல மகிழ்ந்தேன். நீ உன் சுற்றத்தோடு ஊருக்குச்சென்று, நாளை யாம் கங்கையைக் கடக்க நாவாய் கொணர்க," என்றான். குகன் இராமனைப் பிரிந்து செல்ல வருந்தினான். அவனது அன்புக்குக் கட்டுப்பட்ட இராமன், அன்றிரவு தன்னோடு தங்க இசைவு தந்தான். குகன் அன்றிரவு இலக்குவனைப் போலவே இராமனைத்'தன் சேனையோடு காவல் புரிந்தான்.

மறுநாட் காலையில் இராமன் குகனை நோக்கி, "விரைவில் நாவாய் கொணர்க," என்றான். அதுகேட்ட குகன் மிகவும் வருந்தி, "யான் நினக்கு வேண்டும் குற்றேவல்கள் செய்வேன். நீ கழிக்கவேண்டும் நாட்களை இங்குக் கழிக்க வேண்டுகிறேன்," என்று வேண்டினான். இராமன் அவனை நோக்கி, "யான் பல புண்ணிய ஆறுகளில் நீராடிப்

புனிதரை வழிபடல் வேண்டும்; இவற்றை முடித்துக்கொண்டு சில நாட்களில் வருவேன்; உன் உறவை மறவேன். நாங்கள் மூவரும் உன் உறவினர்,'' என்று அன்போடு கூறினன்.

### இலக்குவன் குகனது வருகையை இராமனுக்குத் தெரிவித்தல்

நிற்றியீண் டென்று புக்கு
நெடியவற் றொழுது தம்பி
கொற்றவ நின்னைக் காணக்
குறுகின னிமிர்ந்த கூட்டச்
சுற்றமுந் தானு முள்ளந்
தூயவன் றாயி னல்லான்
எற்றுநீர்க் கங்கை நாவாய்க்
கிறைகுக னொருவ னென்றான். 1

### குகன் இராமனைக்கண்டு வணங்கல்

அண்ணலும் விரும்பி யென்பா
லழைத்திநீ யவனை யென்றான்
பண்ணவன் வருக வென்னப்
பரிவினன் விரைவிற் புக்கான்
கண்ணனைக் கண்ணி னோக்கிக்
களித்தன னிருண்ட குஞ்சி
மண்ணுறப் பணிந்து மேனி
வளைத்துவாய் புதைத்து நின்றான். 2

### காணிக்கைப்பொருளை ஏற்குமாறு குகன் வேண்டல்

இருத்தியீண் டென்ன லோடு
மிருந்தில னெல்லை நீத்த
அருத்தியன் றேனு மீனு
மமுதினுக் கமைவ தாகத்
திருத்தினன் கொணர்ந்தே னென்கொ
றிருவுள மென்ன வீரன்
விருத்தமா தவரை நோக்கி
முறுவலன் விளம்ப லுற்றான். 3

### இராமன் மறுமொழி

அரியதா முவப்ப வுள்ளத்
தன்பினு லமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த வென்ரு
லமிழ்தினுஞ் சீர்த்த'வன்றே
பரிவினிற் றழீஇய வென்னிற்
பவித்திர மெம்ம னேர்க்கும்
உரியன வினிதி னமு
முண்டனெ மன்றே வென்ருன். 4

சிங்கவே றனைய வீரன்
பின்னருஞ் செப்பு வான்யாம்
இங்குறைந் தெறிநீர்க் கங்கை
யேறுது நாளை யாணர்ப்
பொங்குநின் சுற்றத் தோடும்
போயுவந் தினிதுன் னூரிற்
றங்கிநீ நாவா யோடுஞ்
சாருதி விடிய லென்ருன். 5

### குகன் வேண்டுகோள்

கார்குலா நிறத்தான் கூறக்
காதல னுணர்த்து வானிப்
பார்குலாஞ் செல்வ நின்னை
யிங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன்யா
னின்னலி னிருக்கை நோக்கித்
தீர்கிலே னைய
செய்குவெ னடிமை யென்ருன். 6

### இராமன் அனுமதித்தருளல்

கோதைவிற் குரிசி லன்னுன்
கூறிய கொள்கை கேட்டான்
சீதையை நோக்கித் தம்பி
திருமுக நோக்கித் தீராக்

காதல னுகு மென்று
கருணையின் மலர்ந்த கண்ணன்
யாதினு மினிய நண்ப
விருத்தியீண் டெம்மொ டென்ருன். 7

குகன் இராமனையும் சீதையையும்
காத்துநிற்றல்

அடிதொழு துவகை தூண்ட
வழைத்தன னுழி யன்ன
துடியுடைச் சேனை வெள்ளம்
பள்ளியைச் சுற்ற வேவி
வடிசிலை பிடித்து வாளும்
வீக்கிவா யம்பு பற்றி
இடியுடை மேக மென்ன
விணையடி யேத்தி நின்ருன். 8

மாலைவாய் நியமஞ் செய்து
மரபுளி யியற்றி வைகல்
வேலைவா யமுதன் னுளும்
வீரனும் விரித்த நாணல்
மாலைவாய்ப் பாரின் பாயல்
வைகினர் வரிவி லேந்திக்
காலைவா யளவுந் தம்பி
யிமைப்பிலன் காத்து நின்ருன். 9

இலக்குவன் காவல்

மற்றவ னிறைஞ்சி யேக
மாமலர்த் தவிசு நீங்காப்
பொற்ருெடி யோடு மையன்
றுயிறரும் புன்மை நோக்கி
இற்றதோர் நெஞ்ச னுகி
யிருகணீ ரருவி சோர
உற்றவோ வியம தென்ன
வொருசிலை யதனி னின்ருன். 10

### இரவு முழுமையும் குகன் காவல் புரிதல்

தும்பியின் குழாத்திற் சுற்றுஞ்
சுற்றத்தன் றெடுத்த வில்லன்
வெம்பிவெந் தழியா நின்ற
நெஞ்சினன் விழித்த கண்ணன்
தம்பிநின் றனை நோக்கித்
தலைமகன் றன்மை நோக்கி
அம்பியின் றலைவன் கண்ணீ
ரருவிசோர் குன்றி னின்றான். 11

### கதிரவன் எழுதல்

துறக்கமே முதல வாய
தூயன யாவை யேனும்
மறக்குமா நினைய லம்மா
வரம்பில தோற்ற மாக்கள்
இறக்குமா றிதுவென் பான்போன்
முன்னை நா ளிறந்தான் பின்னாள்
பிறக்குமா றிதுவென் பான்போற்
பிறந்தனன் பிறவா வெய்யோன். 12

### தாமரை மலர்தல்

செஞ்செவே சேற்றிற் றோன்றுந்
தாமரை தேரிற் றோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி
நோக்கிய விரிந்த வேறோர்
அஞ்சன நாயி றன்ன
வையனை நோக்கிச் செய்ய
வஞ்சிவாழ் வதன மென்னுந்
தாமரை மலர்ந்த வன்றே. 13

### தம்மூரிலேயே வாழுமாறு குகன் இராமனை வேண்டுதல்

பொய்ம்முறை யலராவெம் புகலிடம் வனமேயால்
கொய்ம்முறை யுறுதாராய் குறைவிலெம் வலியேமால்
செய்ம்முறை குற்றேவல் செய்குது மடியோமை
இம்முறை யுறவென்னா வினிதிரு நெடிதெம்மூர். 14

தேனுள திணையுண்டா றேவரு நுகர்தற்காம்
ஊனுள துணைநாயே முயிருள விளையாடக்
கானுள புனலாடக் கங்கையு முளதன்றே
நானுள தனையும்நீ யினிதிரு நடவெம்பால். 15

தோலுள துகில்போலுஞ் சுவையுள தொடர்மஞ்சம்
போலுள பரண்வைகப் புரையுள கடிதோடும்
காலுள சிலைபூணுங் கையுள கலிவானின்
மேலுள பொருளேனும் விரைவொடு கொணர்வேமால். 16

ஐயிரு பத்தோடைந் தாயிர ருளராணை
செய்குநர் சிலைவேடர் தேவரின் வலியாரால்
உய்குது மடியேமெங் குடிலிடை யொருநாணீ
வைகுதி யெனின்மேலோர் வாழ்விலை பிறிதென்றான். 17

இராமன் மறுமொழி

அண்ணலு மதுகேளா வகநிறை யருண்மிக்கான்
வெண்ணிற நகைசெய்தான் வீரநின் னுழையாமப்
புண்ணிய நதியாடிப் புனிதரை வழிபாடுற்
றெண்ணிய சிலநாளிற் குறுகுது மினிதென்றான். 18

குகன் தன்னையும் உடனழைத்தேகுமாறு வேண்டுதல்

நெறியிடு நெறிவல்லே னேடினென் வழுவாமல்
நறியன கனிகாயும் நறவிவை தரவல்லேன்
உறைவிட மமைவிப்பே னொருநொடி வரையும்மைப்
பிறிகிலெ னுடனேகப் பெறுகுவெ னெனினாயேன். 19

கல்லுவென் மலையேனுங் கவலையின் முதல்யாவுஞ்
செல்லுவெ னெறிதூரஞ் செறிபுன றரவல்லேன்
வில்லின முளெனென்றும் வெருவலெ னொருபோதும்
மல்லினு முயர்தோளாய் மலரடி பிரியேனால். 20

திருவுள மெனின்மற்றென் சேனையு முடனேகொண்
டொருவலெ னொருபோது முறைகுவெ னுளரானார்
மருவல ரெனின்முன்னே மாய்குவென் வசையில்லேன்
பொருவரு மணிமார்பா போதுவெ னுடனென்றான். 21

**இராமன் குகனிடம் தோழமை பாராட்டுதல்**

அன்னவ னுரைகேளா வமலனு முரைநேர்வான்
என்னுயி ரனையாய்நீ யிளவலு னிளையானிந்
நன்னுத லவணின்கே ணளிர்கட னிலமெல்லாம்
உன்னுடை யதுநானுன் றொழிலுரி மையினுள்ளேன். 22

—கம்பர்

# 5. இரட்சணிய யாத்திரிகம்

## இரட்சணிய சரிதப் படலம்

## சிலுவைப்பாடு

### பாடப்பகுதிக்குரிய கதைச்சுருக்கம்

கெட்ட யூதர்களும் போர்ச் சேவகர்களும் கடவுளை இழித்துப் பேசினர்; சொல்லத்தகாத தீய சொற்களைச் சொல்லினர்; இயேசு நாதர்க்குப் பல தீமைகளைச் செய்தனர். இயேசுநாதர் அவை அனைத்தையும் பொறுத்துக்கொண்டார். அக்கீழ் மக்கள் அவர்மீது இருந்த சிவப்பு ஆடையை நீக்கி, அவர் முன்பு தரித்திருந்த உடுப்பையே உடுத்தினர்; பரிகாசமான பல சொற்களைச் சொல்லிச் சிலுவையை அவர்மீது வைத்து எருசலேம் நகரத்தார் அழும்படி அவரைக் கட்டிக் கொண்டு சென்றனர். அச்சிலுவை மிக்க சுமையுள்ளது. ஆயினும் இயேசுநாதர் அதனைத் தம் தலையில் தாங்கிக் கல்வாரி மலையை நோக்கிச் சென்றார்.

இயேசுநாதரின் கைகள் சோர்ந்தன; வாய் உலர்ந்தது; கண்கள் இருண்டன; காதுகள் அடைபட்டன. மிக்க கனமான சிலுவையைச் சுமந்தமையால் அவரது உடல்,வருந்தியது; நெடுந்தொலைவு நடந்தமையால் அவருடைய திருவடிகள் களைத்தன. அவர் நடக்க இயலாது தடுமாற்றத்துடன் தெருவில் நடந்து வந்த கொடிய காட்சியை எருசலேம் நகரத்தார் பார்த்தனர்.

அந்நகரத்துப் பெண்மணிகள் தெருவின் இரண்டு பக்கங்களிலும் வந்து கூடினர்; "பெண்களுள் ஆசீர்வதிக்கப்பட்ட மரியாளின் திருக்குமாரனுக்கா இக்கதி ஏற்பட்டது?" என்று கூறி மன வேதனையுடன் வாய்விட்டு அழுதனர். நகரத்து மக்களுட் சிலர், "செந்தாமரை மலர்போல ஒளி வீசும் இயேசுநாதரது திருமுகம் வாடி அழகு குறைந்தது என்ன பரிதாபம்!" என்று கூறி வருந்தினர்; வேறு சிலர், "அழியாத அருள் என்னும் தேனை வெளிப்படுத்தும் மலரை ஒத்த இயேசுநாதரின் கண்கள் மனக்கவலை நிறைந்தனவாய் ஒளியற்றுப் போயினவே!" என்று கூறி வருந்தினர்.

இவ்வாறு பெண்களும் ஆண்களும் பிள்ளைகளும் பலவாறு கூறி இரங்கி வருந்தினர். இயேசுநாதரின் மாணுக்கர்கள் தங்களை எரிக்கும் நெருப்புப்போன்ற துயரத்தால் மெலிந்து மறைவாக (இயேசு நாதருக்குப் பின் சென்ற கூட்டத்துள்) சென்றனர். இயேசுப் பெருமானைத் தம் திருக்குமாரனைப் பெற்ற மரியம்மையாரும் நெருப்பில் இடப்பெற்ற மலர்மாலையைப் போல வாடி உயிர் தளர்ந்து அக் கூட்டத்துள் சென்ருர்.

இவ்வாறு அனைவரும் வருந்தி அழுது துன்புறக் கொடிய மனம் படைத்த கொலையாளிகள் இயேசுநாதரை, அவரது உயிரை வாங்குவதற்குக் கொலைக்களத்திற்குக் கொண்டு சென்றனர்; கொலைக்களத்தில் இயேசுநாதரைச் சிலுவை மரத்தோடு சேர்த்தனர்; அவருடைய இரண்டு கைகளிலும் இரண்டு பாதங்களிலும் இருப்பு ஆணிகளை அடித்தனர்; பின்பு அவர் அறையப்பட்ட சிலுவையை நிலத்தில் குழி தோண்டி நிறுத்தினர்; அவருக்கு இரண்டு பக்கங்களிலும் திருடர் இருவரை அச்சிலுவையில் அறைந்தனர்.

இயேசுநாதர் அத்துன்ப நிலையிலும் அருள் உள்ளம் உடையவராய், "எந்தையே, இவர்கள் தாம் செய்வது இன்னது என்பதை அறியாதவர்கள். ஆதலால் இவர்கள் குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும்," என்று இறைவனை வேண்டினர்.

### ஈசன் பொறுமை

பொல்லாத யூதர்களும் போர்ச்சேவ கர்குழுவும்
வல்லானை யெள்ளிப்பு றக்கணித்து வாய்மதமாய்ச்
சொல்லாத நிந்தைமொழி சொல்லித்து ணிந்தியற்றும்
பொல்லாங்கை யெல்லாம்நம் மீசன்பொ றுத்திருந்தார். 1

### இயேசுநாதர் சிலுவையைச் சுமத்தல்

செவ்வங்கி யைக்களைந்து தேவர்பிரான் முன்றரித்த
அவ்வங்கி யைத்தரித்தே யாகடியம் பல்பேசித்
தெவ்வர்கு முமிச்சி லுவைத னைச்சுமத்திக்
கவ்வைந கர்கலுழக் கட்டிக்கொ டுபோனுர். 2

### நகரமக்கள் காணுதல்

கையயர்ந்து வாய்புலர்ந்து கண்ணிருண்டு காதடைத்து
வெய்யசி லுவைசு மந்தலசி மெய்வருந்தித்

துய்யதி ருவடிகள் சோர்ந்துநடை தள்ளாடி
அய்யன்ம றுகூடு வரக்கண்டா ரணிநகரார். 3

### மக்கள் புலம்புதல்

மாதருக்கு ளாசிபெற்ற மங்கலையா மன்னைமரி
காதலனுக் கோவிக்க திநேர்ந்த தென்றுமன
வேதனைப்பட் டாற்ருது மெல்லியலார் தாங்குழுமி
வீதியி ருமருங்கு மொய்த்தார்வாய் விட்டழுது. 4

செந்தாம ரைபோற்றி கழுந்தி ருவதனம்
அந்தோவ தங்கிய முகுகுடி போயதென்பார்
நந்தாக்க ருணை ந ருத்துளிக்குங் கண்மலர்கள்
சிந்தாகு லம்பொதிந்து தேசிழந்து விட்டதென்பார். 5

பெண்டிரெலா மழுதரற்றப் பிள்ளைகளெ லாங்கதறக்
கண்டுகேட் டவரிரங்கிக் கரைந்துருகிக் கருத்தழிய
மண்டுதுய ரெனுந்தீயால் வயிறெரியக் கடிநகரம்
பண்டெரிவீழ்ந் தழிசோதோம் பதிபோலப் பதைத்தேங்க 6

### சீடர்களும் தாயும் அழுதல்

குழனூலிற் பிரியாத குருத்துவமா ரருட்சீடர்
அழலனைய துயர்நலிய வழுதுகரந் துடன் செல்லப்
பழுதறுமெய்ப் பரம்பொருளை மகவாக்கொள் பசுந்தோகை
தழலிடுபூங் கொடியேபோற் சாம்பியுயிர் தளர்ந்தேக. 7

### பரமனைக் கொலைக்களத்தில் கொண்டுசேர்த்தல்

இப்பரிசு பெருந்துக்கக் குறிமல்கி யெவ்வுயிருஞ்
செப்பரிய துயருழப்பச் செருசலையைப் புறம்போக்கி
ஒப்பரிய முதுமூலத் தொருபொருளைக் கொண்டுய்த்தார்
மெப்படுவன் மனக்கொலைஞர் வதைபுரிவான் கொலைக்களத்தில் 8

### குருசுமிசை நடுநிற்றல்

மற்றிரண்டு திருடரையும் வலப்புறத்து மிடப்புறத்துஞ்
செற்றமொடு குருசேற்றிக் கொலைமாக்கள் செயலொழிய
சொற்றமறைத் திருவசனந் துலக்கமுறச் சுருதிமுதல்
குற்றவா ளிகளோடு நடுநின்ருர் குருசுமிசை. 9

**அருள்வள்ளலின் அருண்மொழி**

**தன்னரிய திருமேனி சதைப்புண்டு தவிப்பெய்திப்
பன்னரிய பலபாடு படும்போதும் பரிந்தெந்தாய்
இன்னதென வறிகில்லார் தாஞ்செய்வ திவர்பிழையை
மன்னியுமென் றெழிற்கனிவாய் மலர்ந்தார்நம் மருள்வள்ளல்.** 10

—H. A. கிருஷ்ண பிள்ளை

# 6. சீருப்புராணம்

## கபுகாபுப் படலம்

### பாடப்பகுதிக்குரிய கதைச்சுருக்கம்

**கபுகாபு** என்பவர் முகமது நபியை அணுகி இசுலாம் சமயத்தைத் தழுவ விரும்பினுர். நபிநாயகம் அவரது வரலாற்றை அறிய விரும்பினுர். அப்பொழுது கபுகாபு என்பவர் தமது வரலாற்றைப் பெருமானுரிடம் கூறினுர். அவர் கூறியதன் சுருக்கத்தைக் கீழேகாண்க.

கபுகாபு என்பவர் நுண்ணறிவிற் சிறந்த யூதர்களும் போற்றக் கூடியவரும் நபிநாயகர்க்கு முற்பட்ட மறைகளில் தேர்ந்தவருமாகிய பண்டிதர் ஒருவருக்குப் புதல்வர். பெற்ருேர்தம் தவத்தாற் பிறந்த மகனுர் ஆதலின் கபுகாபு மிக்க அன்புடன் வளர்க்கப்பட்டார்; பிள்ளைப் பருவத்தில் வேதநூல்கள் பலவற்றைக் கற்றுத்தேர்ந்தார்.

அவர் ஒருநாள் தமது இல்லத்துப் பேழையொன்றில் **பொற் செப்பு** ஒன்றைக் கண்டார்; அதனைத் திறந்தார்; அதனுள் முத்திரையிடப் பெற்ற **கடிதம்** ஒன்று இருப்பதைக் கண்டார்; தம் தந்தையாரை அணுகி அக்கடிதம்பற்றி வினவினுர். தந்தையார், "அக்கடிதம் மறைதேர்ந்த பெரியவர்களால் எழுதப்பெற்றது. எதிர்காலத்தில் இசுலாத்தைத் தோற்றுவிக்கப்போகும் முகமது நபியின் பிறப்பைப் பற்றி ஆராய்ந்து ஒரு வரலாறு அக்கடிதத்தில் எழுதப்பட்டுள்ளது. நீ அதனைத் தொடலாகாது," என்ருர்.

ஒருநாள் அப்பண்டிதர் குடிவெறியில் மயங்கியிருந்தார். கபுகாபு அதுவே தக்க சமயம் என்றெண்ணி, அக்கடிதத்தைப் பிரித்துப்பார்த்தார். அதனில் '**முகமது**' என்னும் பெயர் எழுதப் பெற்றிருந்தது. கபுகாபு அக்கடிதத்தைப் பார்த்துக்கொண்டிருந்த போது, அக்கடிதத்தில் **பேரொளி** ஒன்று தோற்றம் அளித்தது. திடீரென்று தோன்றிய அப்பேரொளியைக் கண்ட கபுகாபு தம்மையே மறந்து, "முகமது, முகமது" என்று அச்சொல்லைப் பலமுறை செபிக்கத் தொடங்கினுர். தம் மகனுரது குரலைக்கேட்ட தாயார் அங்கு ஓடிவந்தார்; தம் மகனுர் ஒரே பெயரைப் பலமுறை கூறுவதைக்

கேட்டு, அவருக்கு என்ன நேர்ந்ததோ என்று கவலைகொண்டார். தந்தையாரும் அங்கு வந்து கண்ணீர் வடித்துக்கொண்டு நின்ருர். கபுகாபு தமக்குத் தீமை ஒன்றும் நேரவில்லை என்று கூறி அவர்களை அமைதிப்படுத்திஞர்; "தந்தையார் நற்செய்திகளையும் அறிவு நெறி களையும் தம் மைந்தருக்குக் கூறவேண்டுமே தவிர மறைத்தலாகாது," என்று அவர்களையும் உடனிருந்தவரையும் நோக்கிக் கூறிஞர்.

### கபுகாபுவின் தந்தையார்

வானவ ரேவல் பூண
மானிட வடிவாய் வந்த
தானவ அரசு செய்யத்
தவமுயன் றழகு பெற்ற
கோனகர் மதீனத் துற்ற
ஜூதெர்கள் குழூஉக்கொண் டேத்து
மீனமின் மறைகள் வல்ல
பண்டித னெந்தை மன்னே. 1

### பிறப்பும் பெயரிடுதலும்

எந்தையு மாயும் பன்ன
ளியற்றிய தவத்தால் வந்த
சந்ததி யென்ன வேறு
தனையரில் லாது நாளும்
புந்தியி னுவகை கூரப்
போற்றிநற் புராணந் தேர்ந்து
நந்தலில் கபுகா பென்னு
நாமமு நவின்றிட் டாரால். 2

### பிள்ளை வளர்ப்பு

உத்தமர் செல்வம் போன்று
முளத்தணு மாசொன் றில்லாப்
பத்தியர் தவமே போன்றும்
பகரரும் விசும்பிற் றேன்றுஞ்
சித்திர மதியம் போன்றுஞ்
செவ்விய ரிருவ ராவி
வைத்ததோ ருடம்பு போன்று
நாட்குநாள் வளர்த்திட் டாரால். 3

### கல்வி கற்றல்

பேதமை யகற்றிப் புந்திப்
 பெருக்கெடுத் தொழுகல் செய்யும்
வேதவா சகம்பு ராண
 காவிய விதிக ளியாவு
மோதென வோது வித்தென்
 னுளத்தினுக் கியைந்த தாகப்
போதரச் செய்து நின்றார்
 பொருவிலா வண்ணத் தன்றே. 4

### கற்ற நூல்கள்

முன்னவ ரோதும் வேத
 மூன்றினுந் தெரிந்த நூல்கள்
பன்னெறி ஞான நூல்க
 ளினையன பலவுந் தொக்க
மின்னவிர் பேழை நூற்றின்
 மேலுமுண் டருங்காப் பின்றி
யென்னுளம் பொருந்து நூன்மற்
 றெவையவை தெருள்வன் மன்னே. 5

### கபுகாபு பொற்செப்பைக் காணல்

அன்னவிற் பேழை யுட்க
 ணறையினு டகத்தின் வாய்ந்த
மின்னவிர் கிரணச் செப்பொன்
 றிருந்தமென் விரலாற் றீண்டி
யென்னிதென் றறிவோ மென்ன
 வெடுப்பமுத் திரைக டம்மாற்
பின்னரும் வைத்து மீண்டே
 தோவெனப் பேதுற் றேனால். 6

### மைந்தர் தந்தையாரை வினவுதல்

சிந்தையி னையந் தோன்றித்
 தெளிவிலா தெம்மான் பாலின்
வந்துதாள் வழுத்தி யில்லின்
 வயங்குபொற் பேழை யின்க

ணெந்தையே யிருப்ப தென்னென்
றியம்பினே னியம்ப லோடுஞ்
சந்ததி யென்னக் கூவி
யன்போடு சாற்று வானல். 7

தந்தையார் விடைகூறல்

சொல்லிய கனகச் செப்பிற்
சுடர்மணித் தொகுதி யேனு
மெல்லையி னிதிய மேனு
மிழைபல வேனு மியாது
மொல்லைநீ யறியா வண்ண
மொளித்ததென் றெள்ளல் வேண்டா
மல்லலம் புவியிற் செய்த
தவத்தினல் வந்த மைந்த. 8

மாயமுங் கபடும் பொய்யு
மறையெனத் திரட்டி முன்னு
ளாயதே வதத்தின் மார்க்கத்
தறத்தினை வழுக்கிப் பேசுந்
தீயவ னொருவன் தோன்றித்
தீனெனு மதமுண் டாகக்
காய்கதி ரவனைப் போற்பிற்
காலத்தில் வருவ னென்றே. 9

அன்னவ னெறியான் மாந்தர்க்
கடுபகை பெரிதுண் டாகு
மென்னமுற் பெரியோ ராய்ந்த
வியன்மறை யதனுட் கண்டு
பன்னிநிச் சயித்துப் பேரும்
புள்ளியும் பரிவிற் றீட்டும்
பொன்னின்முத் திரைநீ தீண்ட
லன்றெனப் புகழ்ந்து சொன்னன். 10

**மைந்தர் பொற்செப்பில் இருந்த கடிதத்தைத் திறத்தல்**

வெறியினுற் றந்தை வைகும்
வேளையி லீன்ரு டானு
மறிகிலா வண்ணம் புக்கி
யறைதிறந் தரும்பொற் செப்பைக்
குறியொடு மெடுத்து வல்லே
கொண்டொரு புறத்திற் சார்ந்து
செறியுமுத் திரையை நீக்கி
நோக்கினன் சிறப்ப மன்னே. 11

**கடிதத்தில் ஒளி தோன்றுதல்**

விரித்ததை நோக்கும் போழ்தின்
விறனபி முகம்ம தென்னத்
திருத்திய பெயரும் வீறுஞ்
சிறப்புமெய்ப் புதுமைப் பேறுங்
கருத்துறத் தெளிய வாசித்
தனன்கடு தாசின் கண்ணே
யொருத்தருந் தெரியா வண்ண
மொளியொன்று பிறந்த தன்றே. 12

**தாயாரின் பதற்றம்**

தீனெனும் பெரும்பே ராசை
மயக்கத்தாற் சிந்தை நேர்ந்து
வானவர் பரவும் வண்மை
முகம்மதே முகம்ம தேயென்
ருனநுந் திருநா மத்தை
யடிக்கடி யுரையா நின்றே
னேனிவன் புலம்புற் ருனென்
றேங்கியாய் பதறி வந்தாள். 13

**தாயாரின் கவலை**

ஏதெனு மறியே னிங்ங
னிருந்தனன் புலம்பு கொண்டான்
மாதவ முடையீர் பித்தோ
வஞ்சனைத் தொழிலோ சூழ்ந்த

தீதெவை குறிப்பு நோக்கிச்
செப்புமென் றினைய கூறி
வாதையிற் பதைத்துச் சோர்ந்து
கண்ணினீர் வடித்து நின்ருள். 14

கபுகாபு முகமது நபியிடம் கூறுதல்

எனக்குமுன் னிருந்து தாதை
யிருகணீ ரொழுகப் பார்த்தின்
றுனக்குறும் வரலா றென்னே
டுரையென வுரைப்பப் பின்னர்
கனக்கருங் கவிகை வள்ளல்
நும்பெயர் கருத்து ணட்டி
மனைக்கணி னிருந்தோர்க் கெல்லாந்
தெரிதர வகுக்க லுற்றேன். 15

கபுகாபு தம் மனையில் இருந்தவரை நோக்கிக் கூறல்

அரியபொன் மணிபூ ணுடை
யாதியா மற்று முள்ள
பொருள்பல வெனினு மியார்க்கும்
வழங்குதல் பொதுமை யன்றே
வொருதிரு மொழியால் வாழு
முலகென்று லதனைத் தோன்று
திருள்பட மறைத்தல் கல்லாப்
புல்லர்க்கு மிழிவ தாமால். 16

போதமுந் தரும நேர்ந்த
புந்தியும் புகழின் பேறும்
வேதமுங் கலையும் ஞான
விளக்கமு மனுவி னூலுங்
காதலிற் பயந்த மைந்தர்
கருத்தினிற் சிறப்பச் செய்தல்
தாதையர் கடனே யன்றிக்
கரப்பது தகைமைத் தன்றே. 17

—உமறுப்புலவர்

# 7. பாரத வெண்பா

## கண்ணன் தூது

### முன் கதைச் சுருக்கம்

[**கண்ணன்** பாண்டவர்க்கு உறவினன். அவன் அவர்களுக்குப் பல உதவிகளையும் செய்தவன். பாண்டவர் துரியோதனன் ஆணைப்படி பன்னிரண்டு ஆண்டுகள் காட்டில் வாழ்ந்தனர்; ஒரு வருடம் உருமாறி வாழ்ந்தனர்; பின்பு தமக்கு உரிய நாட்டைத் தருமாறு துரியோதனனை வேண்டினர். அவன் நாட்டைத் தர மறுத்தான்; போர் புரிந்து நாட்டைப் பெற்றுக்கொள்ளலாம் என்று கூறினான். ஆயினும் இறுதியாகக் கண்ணனைத் தூது அனுப்பிச் சமாதான முறையிலேயே நாட்டைப் பெறத் தருமபுத்திரன் விரும்பினான். ஆதலால் கண்ணன் பாண்டவர்பொருட்டுத் துரியோதனனிடம் தூது சென்றான். துரியோதனன் மிகவும் கொடியவன். அவன் கண்ணனையே கொல்ல முயன்றான்; பாண்டவருடன் போர் புரிவதே முடிவு என்று கூறிவிட்டான்.

**கன்னன்** குந்திதேவி பெற்ற முதல் மகன். குந்திதேவி கன்னன் பிறந்த உடனே அவனை ஒரு பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டாள். அவன் சிறந்த போர் வீரனாகித் துரியோதனனுக்கு உற்ற நண்பனானான்; அருச்சுனனுக்குக் கொடிய பகைவனாக மாறினான்; போரில் அருச்சுனனைக் கொல்ல உறுதி கொண்டான். கன்னன் சிறந்த கொடையாளி. அதனால் குந்திதேவி அவனை மிகவும் மதித்தாள்.]

### பாடப்பகுதிக்குரிய கதைச் சுருக்கம்

கண்ணன் கன்னனது பிறப்பை அறிந்தவன். அவன் கன்னனைப் பாண்டவர் பக்கம் சேர்க்க விரும்பினான்; அதனால் குந்திதேவிக்கு உண்மையை உணர்த்தி, அவளைக் கொண்டு கன்னனது மனத்தை மாற்ற விரும்பினான். ஆதலால் அப்பெருமான் குந்திதேவியிடம் சென்றான்; அவள் பெற்ற முதல் மகனே கன்னன் என்பதை விளக்கினான். அவன் அவளை நோக்கி, "கன்னன் பாண்டவர் பக்கம் சேர இசையாவிடின், அவன் அருச்சுனனைக் கொல்வதற்கே வைத்திருக்கும் கொடிய பாம்புக் கணையை ஒரு முறைமட்டுமே அருச்சுனன்மீது ஏவுமாறு ஒரு வரத்தைக் கேட்டுப் பெற்றுக்கொள்," என்று கூறினான்.

கன்னன் தன் மைந்தன் என்பதை அறிந்த குந்திதேவி, தாய் அன்பினால் கண்ணீர் விட்டாள்; கன்னனது மாளிகைக்குச் சென்றாள். வாயிற்காவலர் அவளது வரவைக் கன்னனிடம் கூறினர். கன்னன் மிக்க மகிழ்ச்சியோடு அவளை வரவேற்றான். குந்திதேவி தான் அவனுக்குத் தாய் என்பதை மெய்ப்பித்தாள்; பாண்டவர் ஏவல் செய்யும் நிலையில் அரசனாக விளங்கும்படி அவனை வேண்டினாள்.

கன்னன் தன் தாயை உருக்கத்துடன் பார்த்துக் கீழ் வருமாறு கூறினான் :

“ அம்மையே, நீ எனக்குத் தாய் என்பதை இதுவரையிலும் கூற வில்லையே! போர் நிகழுவது உறுதி என்பது தெரிந்தபின்பு இச் செய்தியை உரைத்துப் பயன் யாது? யான் இன்னவர் மகன் என்பது தெரியாத நிலையில் தேர்ப்பாகனால் வளர்க்கப்பெற்றேன்; துரியோ தனன் என்னை அங்க நாட்டுக்கு அரசனாக்கினான்; மன்னர் பலர் என்னை வணங்கும்படி எனக்கு ஏற்றத்தை அளித்தான்; என் எச்சிலை என் னோடு இனிதாக உண்டான். அவன் எனக்குச் செய்த உதவியை உலகம் நன்கறியும். நல்லவர்கள், ஒருவர் தமக்குச் செய்த உதவியை மறப்பார்களா?

“ ஒருநாள் அவன் இல்லாதபொழுது அந்தப்புரத்தில் நானும் அவன் மாதேவியும் சூதாடினோம். அப்பொழுது துரியோதனன் என் பின்புறமாக வந்தான். அவன் வந்ததைக் கண்ட மாதேவி எழுந்து நின்றாள். அவள் ஆட்டத்தை முடிக்காமல் எழுந்துபோக முயன்றாள் என்று தவறாக எண்ணிய நான், அவளை இருக்குமாறு தூண்ட, அவளது பூந்துகிலைப் பற்றினேன். அவ்வளவில் அவளது மேகலாபர ணம் அறுந்தது. அதில் இருந்த மணிகள் சிதறின. அவ்வமயம் அரவக்கொடியோன் நகை முகத்துடன் என் எதிரில் வந்து நின்றான். அவனைக்கண்டு என் மனம் பலவாறு எண்ணி வருந்தியது. மாதேவி என்ன நேருமோ என்று அஞ்சினாள். ஆயின், துரியோ தனன் என்னையோ, அவளையோ கோபிக்கவில்லை. அவன் என்னை அன்போடு பார்த்து, “ சிந்திக்கிடக்கும் இம்மணிகளை நான் எடுக்க லாமா? அல்லது கோக்கலாமா? உனது கட்டளை யாது?” என்று கேட் டான். அவன் என்மீது கொண்டுள்ள பெருமதிப்பிற்கு இந்த ஒரு நிகழ்ச்சியே ஏற்ற சான்றாகும் அன்றோ?

“ இத்தகைய நண்பன் பொருட்டு, இனி நடைபெறும் போரில் பாண்டவரை எதிர்த்து நின்று என் உயிரைத் தியாகம் செய்வதே எனது கடமையாகும்.”

### கன்னனிடம் வரம்பெறுமாறு கண்ணன் குந்திதேவியை ஏவுதல்

இந்திரன் போக வெழிற்குந் தியையழைத்துச்
சுந்தரத்தோண் மாயோனுஞ் சொல்லுவான்—மைந்தனெனு
மங்கர்கோன் பாற்சென் றரவிருகா லெய்யாமன்
மங்கைநீ வேண்டாய் வரம். 1

குந்திதேவி கன்னன் மாளிகைக்குச் செல்லல்

விண்ணவர்கோன் வேல்கொடுத்துப் போக வியன்குந்தி
மண்ணகத்தை யாள்வான் வரம்வேண்டித்—திண்ணம்
வரங்கொள்வா னங்கர்கோன் மாளிகைவாய்ச் சென்ரு
டருங்கண்ணீர் முன்சோரத் தான். 2

குந்திதேவி வாயிற் காவலரிடம் கூறுதல்

அண்டத் தலர்கதிரோன் புத்திரனு யாடரவத்
துண்டத் துகிற்கொடியோன் ரேழனுமா—யெண்டிசையும்
வண்மையான் மிக்குயர்ந்த மன்னவனுக் கென்வரவு
திண்மையாற் சென்றறியச் செப்பு. 3

வாயிற் காவலர் குந்திதேவியின் வரவைக்
கன்னனிடம் கூறுதல்

கண்டத்தி லிட்ட கலிங்கத்தாள் கால்வருந்த
மண்ட நடந்து மனம்வாடிக்—கொண்டனிகர்
கையானே யுன்றன் கடைத்தலைநின் ருளென்ருர்
மெய்யானைக் கண்டு விரைந்து. 4

சந்தார் திரடோட் டருமற்குந் தம்பியர்க்குங்
கொந்தார் விசயற்குங் கோமாதா—வந்தா
டிருமக டான்புல்குந் திண்ணியபொற் ருேளாய்
வருமாறு செப்பாய் மகிழ்ந்து. 5

கன்னன் யோசனையோடு எழுதல்

மன்னர் குருநாடர் மாதாவின் றென்பக்க
லென்ன வெழுந்தருளி வந்தாராற்—சென்னி
செருப்படுதோ ளார்பணிந்த சேவடியைக் காண
வொருப்படுவோ மென்ரு னெழுந்து. 6

கன்னன் குந்திதேவியை வரவேற்றல்

வருக வரவிடுமின் வந்தென்னைக் காண
வொருதனிக்கோ யிற்புறத்தே யென்று—திருவனைய
குந்திதனைக் காண வெதிரெழுந்து கைதொழுதான்
முந்தியவள் காண்பதற்கு முன். 7

[குந்திதேவி தான் அவனுக்குத் தாய் என்பதை மெய்ப்பித்தாள்; பாண்டவர் ஏவல் செய்ய அரசனாக இருக்குமாறு கன்னனை வேண்டினான்.]

**கன்னனது உணர்ச்சியுரை**

ஆவி யனையார்க ளைவர்க்கு முன்னோன்றன்
மேவி யனைய வினையேனைப்—பாவியேன்
முன்செய்த தீவினையான் முன்புரையா தின்றுரைத்தீ
ரென்செய்வேன் சொல்லீ ரினி. 8

இன்னா னெனவறியா வென்னை முடிகவித்து
மன்னர் வணங்க வரசியற்றிப்—பின்னையுந்
தன்னெச்சி லுண்ணாத் தகைமையான் றானுண்டா
னென்னெச்சி லென்றோ டினிது. 9

கொன்னவிலுந் தேர்ப்பாக னென்று குலம்பேசி
யென்னைப் பலரு மிகழ்ந்துரைப்பப்—பின்னையுந்தா
னென்னெச்சி லென்றோடு முண்டானை யெங்ஙனே
யுன்னச் சிழப்பே னுரை. 10

மருவார்வண் டாரான் மணிமுடியான் செய்த
வருடா னறியாதா ரில்லை—தெருளா
வழிகொடா வாறே யடுகளிற்றாற் காகிற்
பழிகடாஞ் சாலப் பல. 11

மதமா மழகளிற்றான் மற்றெனக்குச் செய்த
வுதவி யுலகறியு மன்றே—யுதவிதனை
நன்றுசெய்தோர் தங்களுக்கு நானிலத்தி னல்லோர்கள்
குன்றுவதோ செய்ந்நன்றி கூறு. 12

பன்மணிகள் சிந்திப் பரந்து கிடந்ததுகண்
டின்மணிக் கென்புகுந்த தென்னுமை—னன்மணியைக்
கோக்கோ பொறுக்கவோ வென்றானுக் கென்னுயிரைப்
போக்கா தொழிவேனோ புக்கு. 13

மைத்தடங்கண் மாதேவி வார்துகிலை யான்பிடிக்க
வற்று விழுந்த வருமணிகள்—மற்றவற்றைக்
கோக்கேனோ வென்றுரைத்த கொற்றவற்கெ னாருயிரைப்
போக்கேனோ வெஞ்சமத்துப் புக்கு. 14

—பெருந்தேவனார்

# 8. மனோன்மணீயம்

## நான்காம் அங்கம்—முதற்களம்

### முன் கதைச்சுருக்கம்

முன்னொரு காலத்தில் சீவகன் என்ற பாண்டியன் மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டிய நாட்டை ஆட்சிபுரிந்துவந்தான். அவன் களங்கமற்ற உள்ளத்தினன். அவன் அமைச்சன் குடிலன் என்பவன். அவன் வஞ்சகன். அவன் அரசனுக்கு மிகவும் உண்மையுடையவன் போல நடித்து அவனைத் தன்வயப்படுத்திக்கொண்டான்; அரசனைத் தன் விருப்பம்போல் ஆட்டிப்படைத்தான்; திருநெல்வேலியைத் தலைநகராகக் கொள்ளச் செய்தான்.

சீவகன் மகளான மனோன்மணி என்பவள் ஊழ்வினை வசத்தால் சேர வேந்தனான புருடோத்தமன் என்பவனைக் கனவிற்கண்டு அவன் மீது காதல் கொண்டாள். அதனைக் குறிப்பால் உணர்ந்த அரச குருவான சுந்தரமுனிவர் அரசனுக்கு அறிவித்தார்; சேரனது கருத்தை நன்கு உணர்ந்து திருமணத்தை எளிதில் முடிக்க வல்லவன் நடராசன் என்ற இளைஞனே என்று கூறினர். மன்னன் குடிலனது கருத்தை அறிய விரும்பினன். குடிலன் வஞ்சகன் ஆதலால் மனோன்மணியைத் தன் மகனான பலதேவனுக்கு மணமுடிக்க விரும்பினன். ஆயினும், அதனைக் கூருமல், பெண்வீட்டார் மணம்பேசிப் போதல் இழிவு என்றும், சேர வேந்தன் மனநிலையை அறிவதற்குப் பழைய சில விவாதங்களை மேற்கொண்டு ஒரு தூது அனுப்புதல் நலம் என்றும் கூறினன். அரசன் குடிலன் மகனான பலதேவனையே தூதனாக அனுப்பினன். பாண்டியனுக்கும் சேரனுக்கும் போரை உண்டாக்கிப் பாண்டியனைப் போரில் மடியச் செய்யவேண்டும், தான் சேரனுடன் நட்புக்கொண்டு பாண்டிய நாட்டைக் கைப்பற்றி ஆளவேண்டும் என்று குடிலன் திட்டம் தீட்டினன்.

சேர வேந்தன் மனோன்மணியைக் கனவில் கண்டு அவள்பால் காதல் கொண்டான்; ஆயினும், அவள் இன்னவள் என்பதை அறியாது தவித்தான். அந்நிலையில் பலதேவன் அவனிடம் சென்று, தன் தந்தை கற்பித்தபடி, சேரனுக்குச் சினம் பொங்குமாறு ஏதேதோ பேசினன். சேரன் சினங்கொண்டு பாண்டிய நாட்டின்மீது படையெடுத்தான். பாண்டியனும் போருக்கு ஆயத்தமானன்.

### பாடப் பகுதியின் கதைச்சுருக்கம்

போர்க்களத்தில் காலை வேளையில் குடிலன் மகனான பலதேவன் படைகளை அணிவகுத்துக்கொண்டிருந்தான். குடிலன் தனியே

ஓரிடத்தில் நின்று அரசனை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். அப்பொழுது அவன் கீழ்வருமாறு தன்னுள் பேசிக்கொண்டான் :

"ஒருவன் கொண்ட பேராசையால் உலகத்தில் கடல்போல அளப்பரிய துன்பம் உண்டாகிறது. இன்று இப்போர்க்களத்தில் நிற்கும் வீரருள் இறப்பவர் தொகையைக் கணக்கிடல் முடியுமா? நீர்நிலையில் ஒரு கல்லைப் போட்டால், அது விழுந்த இடத்தில் வட்டமாக அலைகள் தோன்றிப் பெரியனவாகிப் பெரியனவாகிக் கரையில் வந்து மோதுதல் இயற்கை. அவைபோல இவ்வீரரது இறப்பு, இவர்தம் மனைவி, மக்கள், பெற்றூர், உற்றூர், நண்பர் முதலியவரிடம் பரவிப் பெருந்துயரை உண்டாக்குகிறது. சீச்சீ! இஃதென்னே, இந்த எண்ணங்கள் ஏன் உண்டாகின்றன? அரசனுக்காக இறக்க வேண்டுவது இவர்தம் கடமையாகும். இவர்கள் பல ஆண்டுகளாக அரசனது சோற்றைத்தின்று சாதித்தது யாது? செஞ்சோற்றுக் கடனைத் தீர்க்க வேண்டுவது இவர்தம் கடமையன்ருே? மேலும், பலபேர் துன்புற்ருல்தான் ஒருவன் சுகமடையலாம். இஃது உலக இயற்கை. ஆதலால் நாம் இவர்களுக்காக இரக்கப்படுவதன் பயன் யாது? நிலத்தை உழுபவர், ஆடை நெய்பவர், பல்லக்குச் சுமப்பவர் முதலியவர் அவ்வத் தொழில்களால் துன்பம் அடைவதால் அவ்வத் தொழில்களை வெறுத்து உலகில் வாழாது ஓடுவரோ? ஒவ்வொருவரும் அவரவர் நன்மையையே நாடுவர். கொக்கு வாய்க்காலில் மௌனமாக நின்றுகொண்டு மீன் வரும் அளவும் பொறுமையோடு காத்துக்கொண்டு இருக்கும். அதுபோல அறிவுடையவர் தக்க காலமும் இடமும் அமையும் வரையில் பொறுமையோடு காத்திருப்பர்; எண்ணித்துணிவர்; துணிந்தபின்பு அதனைச் செய்து முடிப்பர். கோழையர் என்றும் இன்பம் பெறுர்."

**இடம் : படைபயில்களம்** **காலம் : காலை**

[பலதேவன் படையணி வகுக்க, குடிலன் அரசனை எதிர்பார்த்தொருபுறம் நிற்க]

**குடிலன் :**

பருதியு மெழுந்தது பொருதலும் வந்தது
[தனி மொழி] [பெருமூச்செறிந்து]
கருதுதற் கென்னுள காணுதும் ஆஆ
ஒருவன தாசைப் பெருக்கா லுலகில்
வருதுயர் கடலிற் பெரிதே வானின்
எழுந்தவிவ் விரவி விழுந்திடு முன்னர்
ஈண்டணி வகுக்குமிக் காண்டகு மிளைஞரில்
மாண்டிடு மவர்தொகை மதிப்பார் யாரே

மாண்டிட லன்றே வலிது மடுவுள்
இட்டகல் லாலெழும் வட்டமாம் விரிதிரை
வரவரப் பெரியதாய்க் கரைவரை வரல்போல்
நின்றவிவ் வீரரை யொன்றிய மனைவியர்
உற்ருர் பெற்ருர் நட்டா ரென்றிப்
படியே பரவுமே படியெலாந் துயரம்—(சற்று நிற்க)
என்னை யென்மதி யிங்ஙன மடிக்கடி
யென்னையு மெடுத்தெறிந் தேகுதல் சீச்சீ
மன்னவர்க் காக மாள்வ திவர்கடன்
மன்னவ னென்போன் மதியில் வலியோன்
அன்றியும் பலநா ளாகநம் அன்னந்
தின்றிங் கிருந்திவர் செய்ததென் அவர்தம்
உடன்பா டிதுவே கடம்பா டாற்றுங்
காலம் விடுவதார் மேலு மியல்பாப்
பலபெயர் துக்கப் பட்டா லன்றி
யுலகி லெவரே யொருசுக மணவார்
இயல்பிது வாயி னிரங்க லென்பயன்
வயலுழு முழவோர் வருத்தமும் குனிந்திருந்
தாடை நெய்வோர் பீடையும் வாகனந்
தாங்குவோர் தமக்குள தீங்கும் நோக்கி
யுலகிடை வாழா தோடுவ ரோபிறர்
அலகிலா மானிடர் யாவரு மவரவர்
நலமே யாண்டும் நாடுவர் மதிவலோர்
களத்தொடு காலமுங் கண்டுமீ னுண்ணக்
குளக்கரை யிருக்குங் கொக்கென அடங்கிச்
சம்பவஞ் சங்கதி யென்பவை நோக்கி
யிருப்பர் நலம்வரிற் பொருக்கெனக் கொள்வர்
நண்ணு ரிதுபோல் நலமிலா ஐயம்
எண்ணுர் துணிந்தபின் பண்ணுர் தாமதம்
ஏழைய ரலரோ இரங்குவ ரிங்ஙனம்
கோழையர் எங்ஙனங் கூடுவார் இன்பம்.

—பேராசிரியர் பெ. சுந்தரம்பிள்ளை

# IV. பல்சுவை

## 1. புறநானூறு

### கல்வியின் சிறப்பு

உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே. 1

—பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்

### செல்வத்துப் பயனே ஈதல்

தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே. 2

—மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்

## 2. வருணனை

### (1) காலைப்பொழுது

பூசுரர்தம் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப—வாசம்
அலர்ந்ததேங் கோதையாள் ஆய்துயரத் தோடு
புலர்ந்ததே அற்றைப் பொழுது.

—புகழேந்திப் புலவர்

### (2) நிலாத்தோற்றம்

கானெலா மலர்ந்த முல்லை
　　ககனமீ தெழுந்த தென்ன
வானெலாம் வயங்கு தாரை
　　நிரைநிரை மலர்ந்து தோன்ற
வேனிலான் விழவின் வைத்த
　　வெள்ளிவெண் கும்ப மென்னத்
தூநிலா மதியம் வந்து
　　குணதிசைத் தோன்றிற் றம்மா.

—வில்லிபுத்தூரார்

### (3) நெற்பயிர்

உருத்திட்ப முருக்காலை தலைநிறீஇ யுற்றதற்பின்
தருக்கற்று நனிவணங்கிப் பழுத்தகதிர்த் தடஞ்சாலி
பெருக்கத்து வேண்டுமாற் பெரும்பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டுமுயர் வெனுமொழியின் சுவைதேற்றும்.

—சிவஞான முனிவர்

## 3. சீட்டுக்கவி

மின்னுமாளிகை அநந்தை யாதிபதி
　　சந்த்ர வாணமகி பாலன்முன்
வீரராகவன் விடுக்கு மோலைதன்
　　விருப்பினுல் வலிய வேயழைத்
துன்னுகாவிய மதிற்பெ ருத்ததொரு
　　கோவை யோதுகென வோதினன்
ஓதிமாச வொருமூன்று போகியொரு
　　நாலு மாசமள வாகவும்
இன்னமுந்தனது செவியி லேறவில
　　என்னில் என்ன வுலகெண்ணுமோ
இராச ராசர்திறை கொள்ளு மென்கவிதை
　　இங்கு வந்து குறையாகுமோ

தன்னையென் சொலுவர் என்னையென் சொலுவர்
தான்தமிழ்க் குமணன் அல்லவோ
தன்புகழ்க்குமிது நீதியோ கடிது
தானின் னேவருதல் வேணுமே.

—அந்தகக்கவி வீரராகவ முதலியார்

## 4. இரட்டுறமொழிதல்

### கலைசைச் சிலேடை வெண்பா

ஆவலுடன் பாவலரு மாறுகால் வண்டினமுங்
காவலரைச் சூழுங் கலைசையே—மேவும்
அரிவையம் பாகத்தா னரனொருமூன் றெய்தோன்
அரிவையம் பாகத்தா னகம். 1

மண்டமர்செய் யுங்களமும் வண்கரும்பை மள்ளருஞ்சேர்
கண்டகரச் சாடும் கலைசையே—தொண்டர்
கணிச்சித் திருக்கையான் காதரத்தைத் தீர்க்குங்
கணிச்சித் திருக்கையான் காப்பு. 2

—தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர்

## 5. சிற்றிலக்கியம்

### அழகர் கிள்ளைவிடுதூது

#### கிளியின் பெருமை

1 கார்கொண்ட மேனிக் கடவுள் பெயர்கொண்டு
நீர்கொண்ட பாய னிறங்கொண்டு—சீர்கொண்ட
2 வையம் படைக்கு மதனையுமேற் கொண்டின்பம்
செய்யுங் கிளியரசே செப்பக்கேள்—வையமெலாம்
3 வேளாண்மை யென்னும் விளைவுக்கு நின்வார்த்தை
கேளா தவரார்காண் கிள்ளையே—நாளும்
4 மலைத்திடு மாரனெற்றை வண்டிலுமில் லாமற்
செலுத்தியகாற் றேரைமுழுத் தேராய்ப்—பெலத்திமுத்துக்
5 கொண்டுதிரி பச்சைக் குதிரா யுனக்கெதிரோ
பண்டுதிரி வெய்யோன் பரியேழும்—கண்ட

6 செகமுழுது நீஞான தீபமுநீ யென்று
சுகமுனியே சொல்லாரோ சொல்லாய்—வகைவகையாய்
7 எவ்வண்ண மாய்ப்பறக்கு மெப்பறவை யாயினுமுன்
ஐவ்வண்ணத் துள்ளே யடங்குமே—மெய்வண்ணம்
8 பார்க்கும் பொழுதிலுனைப் பார்ப்பதியென் பாரென்றோ
மூக்குச் சிவந்தாய் மொழிந்திடாய்—நாக்குத்
9 தடுமாறு வோரையெல்லாந் தள்ளுவரே யுன்னை
விடுவா ரொருவருண்டோ விள்ளாய்—அடுபோர்
10 மறந்தரு சீவகனுர் மங்கையரிற் றத்தை
சிறந்ததுநின் பேர்படைத்த சீரே—பிறந்தவர்
11 ஆரும் பறவைகளுக் கச்சுதன்பே ருஞ்சிவன்றன்
பேரும் பகர்ந்தாற் பிழையன்றோ—நேர்பெறுவி
12 வேகி யொருகூடு விட்டுமறு கூடடையும்
யோகி யுனக்குவமை யுண்டோகாண்.

—பலபட்டடைச் சொக்கநாதபிள்ளை

## 6. வழிபாட்டுப் பாடல்கள்

### (1) சிவபெருமான்

பானினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

—மாணிக்கவாசகர்

### (2) திருமால்

அருமறை முதல்வனை ஆழி மாயனைக்
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்
திருமகள் தலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்.

## (3) இயேசுநாதர்

உலக முய்ய வொளிவீசி
உதித்த தெய்வச் சேய்போற்றி
மலையி லெழுந்து மாசில்லா
மறையைப் பொழிந்த மழைபோற்றி
சிலுவை யறைந்தா ரிடத்துமருள்
செய்த பொறுமை நிலைபோற்றி
அலகில் பாவர் கொழுகொம்பாம்
அன்பு கிறிஸ்துன் அடிபோற்றி.

—திரு. வி. கலியாணசுந்தரனர்

## (4) மகமது நபி

அரபிய நாட்டிற் றேன்றி
ஆண்டவன் ஒருவன் என்னும்
மரபினை வாழச் செய்த
மகமது நபியே போற்றி
தரையினில் பொதுமை மல்கிச்
சகோதர நேயம் ஓங்கக்
கரவிலா மறையைத் தந்த
கருணையே போற்றி போற்றி.

—திரு. வி. கலியாணசுந்தரனர்

# குறிப்புரை

## செய்யுட்பகுதி

## I. வாழ்த்து

### 1. கடவுள் வாழ்த்து

இப் பாடலின் ஆசிரியர் சுப்பிரமணிய பாரதியார் என்பவர். இவர் எட்டையபுரத்தில் வாழ்ந்த சின்னசாமி ஐயருக்கும் இலக்குமி அம்மாளுக்கும் பிறந்தவர். இவர் கி. பி. 1882இல் பிறந்து கி. பி. 1921இல் காலமானார். இவர் நாட்டுப் பற்று மிக்கர். இவர் எழுதிய நூல்கள், தேசிய கீதங்கள், பாப்பா பாட்டு, கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், ஞானரதம் முதலியன. இவர் தமிழகத்தில் விடுதலை எண்ணம் வீறுகொண்டு எழுமாறு புரட்சிப் பாடல்களைப் புனைந்தவர். இச்செய்யுளில் பரம்பொருள் ஒன்றே என்னும் கருத்தை விளக்குகின்றார்.

**அருஞ்சொற்பொருள் :** ஆத்தி - ஆத்திமலர். முழுவெண் மேனியான் - சிவபெருமான். மிசை - மேல். கிடப்போன் - பள்ளி கொண்ட திருமால். அல்லல் - துன்பம். அமரவாழ்வு - தெய்வ வாழ்வு. ஆத்தி சூடி - இரண்டாம் வேற்றுமைத் தொகை. வெண்மேனி, கருநிறம் - பண்புத் தொகைகள். எய்துவோம் - தன்மைப் பன்மை வினைமுற்று.

### 2. மொழிவாழ்த்து

இதன் ஆசிரியர் திரு. கா. நமச்சிவாய முதலியார் ஆவர். இவர் சென்னை அரசினர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர்; மாணவர்களுக்குரிய பாட நூல்களை வெளியிட்டும், பண்டைத் தமிழ் இலக்கிய இலக்கணங்களை ஆராய்ந்து பதிப்பித்தும் தமிழ்த் தொண்டாற்றிய பெரும்புலவர். இவர் காலம் கி. பி. 1876 முதல் 1936 வரையாகும். இவர் இச்செய்யுளில் தமிழ் மொழியின் சிறப்பினை எடுத்து விளக்குகின்றார்.

**அருஞ்சொற்பொருள் :** தேனினும் - தேனின் சுவையைக் காட்டிலும். ஊன் - உடல். ஒண்டமிழ் - ஒளி பரப்பும் தமிழ். உணர்வு - அறிவு. வயங்கும் - விளங்கும். தரணி - உலகு. கணு - கண்களாக. தேனினும் - உம் - உயர்வு சிறப்பும்மை. செந்தமிழ், ஒண்டமிழ், வண்டமிழ், தண்டமிழ்—பண்புத்தொகைகள். ஒளிர்தமிழ் - வினை தொகை.

## 3. நாட்டு வாழ்த்து

இப்பாடலின் ஆசிரியர் நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களாவர். இவர் 1888ஆம் ஆண்டில் மோகனூரில் பிறந்தவர். இவர் பெற்றோர் வேங்கடராமப் பிள்ளை - அம்மணியம்மையார் என்பவர். இவர் காவியம் புனைவதிலும் ஓவியம் தீட்டுவதிலும் வல்லவர்; நாட்டுப்பற்று மிக்கவர்; நாட்டின் நலங்கருதிப் பல கவிதைகள் பாடியவர்: சங்கொலி, அவனும் அவளும், மலைக்கள்ளன், மாமன் மகள் முதலிய நூல்களின் ஆசிரியர்.

**அருஞ்சொற்பொருள்:** படையாமல் - பிறர்க்குப் படைத்து உண்ணச் செய்யாமல். இரவாமை - இல்லையென்று பிறரிடம் சென்று கேளாமை. எண்ணுத - எதிர்மறைப் பெயரெச்சம். கொல்லாமை, இரவாமை, இல்லாமை—எதிர்மறைத் தொழிற் பெயர்கள். வாழ்க - வியங்கோள் வினைமுற்று.

### பயிற்சி

I. விடை எழுதுக:

1. அல்லலை அகற்றினுர் யாவர்? அவர் பெறும் வாழ்வு யாது?
2. நமச்சிவாய முதலியார் தமிழ் மொழியின் சிறப்புக்களாக எவற்றைக் கூறுகின்றுர்?
3. தமிழ் நாட்டின் சிறப்புக்கள் யாவை?
4. "படையாமல் உண்ணுத தமிழ்நாடு", "கொல்லாமை உயர் வென்னும் தமிழ்நாடு", "இரவாமை அறமென்னும் தமிழ் நாடு"—இத்தொடர்களை விளக்குக.

II. 1. பிரித்து எழுதுக:
இளம்பிறை, வெண்மேனி, வாழ்வெய்துவோம், உயர் வென்னும், அறமென்னும்.

2. சேர்த்து எழுதுக:
செம்மை + தமிழ், தெற்கு + மொழி, வண்மை + தமிழ், தண்மை + தமிழ்.

III. 1. பரம்பொருள் ஒன்றே என்பதைப் பாரதியார் கூறுமாறு உரைநடைப்படுத்தி எழுதுக.

2. நாட்டு வாழ்த்துப் பாடலில் தமிழ் நாட்டின் சிறப்புக்களாக வருவனவற்றை விரித்து ஒரு கட்டுரை வரைக.

# II. அறவுரை

## 1. திருக்குறள்

**திருக்குறள்** உலக மக்கள் அனைவர்க்கும் ஏற்ற நல்லுரைகளைக் கூறுவது. அதனால் இது மேனாட்டு மொழிகள் பலவற்றிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இஃது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப் பால் என்னும் மூன்று பிரிவுகளைக் கொண்டது; இல்லறவியல் முதலிய ஏழு இயல்களையும், 133 அதிகாரங்களையும் கொண்டது; அதிகாரத் திற்குப் பத்துக் குறட்பாக்களாக 1330 குறட்பாக்களைக் கொண் டிலங்குவது. இதன் ஆசிரியரான திருவள்ளுவர் காலம் கி. மு. முதல் நூற்றாண்டு என்று அறிஞர் கூறுவர்.

### அருஞ்சொற்பொருள்

1. பிறவிப் பெருங்கடல் - பிறவியாகிய பெரிய கடல்; உருவகம். பெருமை + கடல் = பெருங்கடல். பிறவியைப் பெருங்கடலாக உருவகஞ் செய்து இறைவனடியைத் தெப்பமாக உருவகஞ் செய்யாது கூறினமை மையின் இப்பாடலில் ஏகதேசவுருவக அணி அமைந்துள்ளது.

2. வான் சிறப்பு - மழையினது சிறப்பினைக் கூறுதல். கெடுப் பதூஉம் - பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதும். எடுப்பதூஉம் - மழையைப் பொழிந்து வாழ்விப்பதும். எல்லாம் - எல்லாம் வல்லது. கெடுப்பதூஉம், எடுப்பதூஉம் - இன்னிசையள பெடைகள். செய்யுளில் ஓசை குறையாவிடத்தும் இனிய ஓசையை உண்டாக்குதற்காகக் குற்றெழுத்து நெட்டெழுத்தாக மாறி அளபெடுப் பது இன்னிசையளபெடையாம்.

3. நீத்தார் பெருமை - முற்றத்துறந்த முனிவரது பெருமை கூறுதல். உரன் - அறிவுத் திண்மை. தோட்டி - அங்குசம். ஓரைந்தும் - ஐம்பொறிகளாகிய யானைகள் ஐந்தினையும் (மெய், வாய், கண், மூக்கு, செவி). வரன் எனும் வைப்பு - எல்லா நிலத்தினும், மேலானதென்று கூறும் வீட்டு நிலம். இக்குறட்பாவில் ஏகதேசவுருவக அணி அமைந்துள்ளது. ஐந்தும் - முற்றும்மை.

4. நிறைமொழி மாந்தர் - பயன் நிறைந்த மொழியினையுடைய துறந்தார். காட்டிவிடும் - வெளிப்படுத்தா நிற்கும்.

5. அறன் வலியுறுத்தல் - அறத்தினது பெருமையை வலியுறுத்திக் கூறுதல். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் என்பன மாசு களாம். பிற ஆகுலநீர - அஃதொழிந்த சொல்லும் வேடமும் அற மெனப்படா; ஆரவாரத்தன்மை யுடையன. மனம் + அத்து + கண் = மனத்துக்கண்.

6. அன்று - இறக்குங் காலத்து. பொன்றுங்கால் - இறக்கும் போழ்து. பொன்றாத் துணை - அழியாத துணையாகும். செய்க -

வியங்கோள் வினைமுற்று. மற்று - அசைநிலை. 'பொன்றுத' என்பது 'பொன்று' என நின்றது; ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

7. வீழ்நாள் - செய்யாது கழியும் நாள். படாமை - உளவாகாமல். நன்று - அறம். வாழ்நாள் - உடலோடு கூடிவாழும் நாள். அஃது + ஒருவன் = அஃதொருவன். படாஅமை - இயல்பான நெடில் அளபெடுத்தது; செய்யுளிசையளபெடை.

8. வாழ்க்கைத்துணை நலம் - இல்வாழ்க்கைத் துணையாகிய மனைவியினது நன்மை. மனைமாட்சி - இல்லறத்திற்கு ஏற்ற நற்குண நற்செயல்கள். இல்லாள் - மனைவி. எனை - எத்துணை. இல் - இல்லை என்பதன் கடைக்குறை. இல்லாள் - காரணப்பெயர்.

9. தற்காத்து - தன்னைக் கற்பினின்றும் வழுவாமல் காத்து. தற்கொண்டான் - தன்னைத் துணையாகக் கொண்ட கணவன். தகை - பெருமை. சொல் - புகழ். தற்காத்து, தற்கொண்டான் - இரண்டாம் வேற்றுமைத் தொகைகள்.

10. அன்புடைமை - மனைவி, மக்கள் முதலிய தொடர்புடையாரிடத்து அன்புடையராதல். என்பு - எலும்பு. அறம் - அறக்கடவுள். என்பிலது - புழு. அன்பிலது - உயிர். இக்குறளில் **உவமை அணி** அமைந்துள்ளது.

11. புறத்துறுப்பு - இடம், பொருள், ஏவல் முதலியன. எவன் செய்யும் - என்ன பயனைச் செய்யும்.

12. செய்ந்நன்றியறிதல் - தனக்குப்பிறர் செய்த நன்மையை மறவாதிருத்தல். தினைத்துணை - தினையளவு (சிறிதளவு). பனைத்துணை - பனையளவு (பேரளவு). தினை, பனை என்பன சிறுமை பெருமைகளைக் காட்டும் அளவைகளாக வந்தன. நன்றி - நன்மை. தெரிவார் - அறிவார்.

13. கொன்றன்ன - கொலை செய்ததை யொத்த. இன்னா - தீமை. உள்ள - நினைக்க. இன்னா, தீயன, வினையாலணையும் பெயர்கள்.

14. அடக்கமுடைமை - மனம், மொழி, மெய்கள் தீய நெறிக்கண் செல்லாமல் அடங்குதலுடையனாதல். ஒருமையில் - ஒரு பிறவியில். ஐந்து - ஐம்பொறிகள். எழுமை - ஏழுபிறவி. ஏமாப்பு - பாதுகாவல்.

15. யா - காக்கவேண்டுவனவாகிய பிற. சொல்லிழுக்குப்பட்டு - சொற் குற்றத்திலே அகப்பட்டு. சோகாப்பர் - துன்புறுவர். யா - அஃறிணைப் பன்மை வினாப்பெயர். காக்க - வியங்கோள் வினைமுற்று.

16. பயனில சொல்லாமை - தமக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பமாகியவற்றுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பாராட்டுவானை - பலகாலும் சொல்லுவானை. மகனெனல் - மகனென்று சொல்லற்க. மக்கட் பதடியெனல் - மக்களுள் பதர் என்று சொல்லுக. பாராட்டுவானை - வினையாலணையும் பெயர். (மகனெனல்) - **எனல் - அல்லீற்று** எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. (பதடி) **எனல் - அல்லீற்று** உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று.

17. ஈகை - ஏற்றூர்க்கு இல்லையென்னுது ஈதல். ஈத்து + உவக்கும் = ஈத்துவக்கும் - வறியார்க்கு ஒரு பொருளைக்கொடுத்து மகிழும். வன் கணவர் - அருளிலாதார். 'ஈந்து' என்ற சொல் 'ஈத்து' என வந்தது வலித்தல் விகாரம். அறியார் கொல் - 'கொல்' என்னும் இடைச் சொல் ஐயப்பொருளில் வந்தது.

18. இரத்தலின் - பிறர்பாற் சென்று யாசித்தலினும்; இன் - ஐந்தாம் வேற்றுமையுருபு எல்லைப் பொருளில் வந்தது. மன்ற - உறுதி யாக. உணல் - உண்ணல் என்பதன் தொகுத்தல் விகாரம். நிரப்பிய - பொருளின் குறையை நிறைப்பதற்காக; 'செய்யிய' வென்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

19. சாதலின் - சாதலைப் போல. இயையாக் கடை - முடியாத விடத்து. இனிததூஉம் - இன்னிசையளபெடை.

20. உலகத்தார் - உலகத்துச் சான்றோர்கள். உளன் - நிலை பெறுவான்.

21. வாய்மை - உண்மையினது தன்மை. மெய்யாக் கண்ட வற்றுள் - மெய்ந்நூல்களாகக் கண்டவற்றுள். யாம் - தன்மைப் பன்மைப் பெயர். வாய்மையின் + நல்ல + பிற = வாய்மையினல்ல பிற.

22. மனத்தொடு - உள்ளத்தோடு பொருந்த. தலை - சிறப்புடையவ னுவான்.

23. கல்வி - கற்றற்குரிய நூல்களைக் கற்றல். தாம் இன்புறுவது - தாம் இன்பமடைவதற்கேதுவாகிய கல்விக்கு. உலகு - உலகத்துச் சான்றோர். உலகு - இடவாகுபெயர். காமுறுவர் - விரும்புவர்.

24. கேள்வி - கேட்கத் தகும் நூற்பொருளைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல். செவிக்குணவு - கேள்வி. ஈயப்படும் - இடப்படும்.

25. ஒற்கத்தின் - தளர்ச்சி வந்துற்ற நேரத்தில். ஊற்றும் துணை - பற்றுக் கோடாம் துணையாகும். ஊற்று - ஊன்று கோல்.

26. செவியிற்சுவை - செவியால் உணரப்படும் சுவை; மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. அவியினும் - இறந்தாலும். என் - என்ன பயன்.

27. வலியறிதல் - மன்னன் பகைவர்தம் வலியினை அளந்தறிதல். பீலி - மயிலிறகு. சாகாடு - வண்டி. சாலமிகுத்துப் பெயின் - மிகவும் அதிகமாக ஏற்றினல். சால - உரிச்சொல். உவமையை மட்டும் கூறிப்,பொருளை உய்த்துணரச்செய்யும் இக்குறட்பாவில் பிறிது மொழித லணி அமைந்துளது.

28. அளவு அறிந்து - தனக்குள்ள பொருளின் எல்லையை அறிந்து. தோன்ருக்கெடும் - தோன்ருது கெடும்.

29. தெரிந்து தெளிதல் - ஆராய்ந்து தெளிதல். காதன்மை - அன் புடைமை. கந்தா (க) - பற்றுக் கோடாக. தேறுதல் - தெளிதல். பேதைமை - அறியாமை.

30. தேரான் - ஆராயாதவனாகி. தீரா இடும்பை - நீங்காத துன்பம்; தீரா (த) + இடும்பை - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

31. செங்கோன்மை - அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை. உலகெல்லாம் - உலகிலுள்ள உயிர்களெல்லாம்; இடவாகு பெயர். கோல் + நோக்கி - கோனோக்கி, செங்கோலை நோக்கி. வான் - மழை.

32. வையகம் - உலகம். இறை - அரசன். முட்டாச்செயின் - குறைவின்றிச் செங்கோலைச் செலுத்துவானாயின்.

33. கொடுங்கோன்மை - செங்கோல் கோடுந்தன்மை. வேலொடு நின்றான் - வழிப்பறி செய்ய வேலொடு தனியே நின்ற கள்வன். கோலொடு நின்றான் - அரசன். இரவு - பொருள் வேண்டுதல். நின்றான் - வினையாலணையும் பெயராய் இரண்டிடத்தும் நின்றது.

34. வெருவந்த செய்யாமை - குடிமக்கள் அஞ்சத்தகும் செயல்களைச் செய்யாமை. ஆக்கம் - செல்வம். வேண்டுபவர் - விரும்புபவர். கடிது + ஓச்சி - கடிதோச்சி; அளவு கடக்கத் தண்டிப்பவர் போலத் தொடங்கி.

35. இடுக்கணழியாமை - இடையூறு வந்துழி மனம் கலங்காமை. இடும்பை படாதவர் - துன்பத்தைக் கண்டு உள்ளங் கலங்காதவர். படுப்பர் - உண்டாக்குவர். இக்குறட்பாவில் 'இடும்பை' என்னும் சொல்லும் அதன் பொருளும் பன்முறை வந்துள்ளமையால் இச்செய்யுள் சொற்பொருட் பின்வருநிலையணியைக் கொண்டதாகும். படாஅதவர் செய்யுளிசையளபெடை; இயல்பான நெட்டெழுத்து அளபெடுத்தல் செய்யுளிசை அளபெடை எனப்படும்.

36. விழையான் - விரும்பானாகி; முற்றுச்சொல் எச்சப்பொருளையுணர்த்தி வருதலின் முற்றெச்சம். உறுதலிலன் - அடையமாட்டான்.

37. சொல்வன்மை - வினைமுடியுமாற்றால் சொற்களைச் சொல்ல வல்லவனாதல். சொல்லின்கட் சோர்வு - சொற்களைக் கூறுமிடத்துச் சோர்வடைதலை. காத்து + ஓம்பல் - போற்றிக் காத்திடுக. கேடு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

38. ஏமம் - காவல். என்ப - என்று நூலோர் கூறுவர். ஐந்தும் என்பதிலுள்ள முற்றும்மை தொக்கது. என்ப - பலர்பால் வினைமுற்று.

39. படைச்செருக்கு - படையினது மறமிகுதி. ஒன்று + உற்ற + கால் = ஒன்றுற்றக்கால் - ஒரு தாழ்வு வந்ததாயின். ஊராண்மை - உபகாரியாந்தன்மை. எஃகு - கூர்மையாகும். மற்று - அசை.

40. புரந்தார் - தன்னைக்காத்தார். கோள் + தக்கது + உடைத்து = கோட்டக்கதுடைத்து - கொள்ளும் தகுதியை உடையதாகும்.

41. புணர்ச்சி பழகுதல் - ஒரிடத்திருத்தலும் பன்முறை கண்டு பழகுதலும். உணர்ச்சி - ஒத்த அறிவு. கிழமை - உரிமை. நட்பு + ஆம் + கிழமை = நட்பாங்கிழமை.

42. பெரியாரைப் பிழையாமை - பெரியார் ஆயினாரை அவமதித்து ஒழுகாமை. தகைமாண்ட - பெருமையால் மாட்சிமைப்பட்ட. வகை மாண்ட - அங்கங்களால் மாட்சிமைப்பட்ட.

43. மானம் - எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும் ஒரு தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம். பெருக்கத்து - நிறைந்த செல்வம் உளதாயவிடத்து. சுருக்கத்து - செல்வம் சுருங்கி வறுமை யுண்டான விடத்து.

44. துஞ்சினார் - உறங்கினார். கள் - மது.

45. அற்றம் - அவமானம். பெருமை - பெருமையுடையார். சிறுமை - சிறுமையுடையார். இவையிரண்டும் பண்பாகுபெயர்கள்.

46. உட்பகை - புறப்பகைக்கு வழிவகுத்துக் கொடுத்து அது வெல்லுந்துணையும் உள்ளாய் நிற்கும் பகை. வாள்போல் பகைவரை - வாள் போல எறிதும் என்று வெளிப்பட்டு நிற்கும் பகைவரை. அஞ்சுக - உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று. அஞ்சற்க - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

47. சான்றாண்மை - பல குணங்களாலும் நிறைந்து அவைகளை ஆளுந்தன்மை. கடன் என்ப - இயல்பாயிருக்குமென்பர். என்ப - பலர்பால் வினைமுற்று.

48. மரம் போல்வர் - ஓரறிவிற்றாய மரத்தினை ஒப்பர்.

49. குடிசெயல்வகை - ஒருவன் தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம். இல்லாண்மை - குடியை ஆளுந்தன்மை. ஆக்கிக் கொளல் - உண்டாக்கிக்கொள்ளுதல்.

50. உழவினார் - உழுதலையுடையார். கைமடங்கின் - கை உழுதலைச் செய்யாது மடங்குமாயின். விழைவதூஉம் - யாவரும் விரும்பும் உணவையும்; இன்னிசையளபெடை.

## பயிற்சி

I. விடை யெழுதுக :

1. எவர் பிறவிப் பெருங்கடலை நீந்துவர்? எவர் நீந்தார்?
2. மழை, எல்லாம் வல்லதாதல் யாங்ஙனம்?
3. ' நீத்தார் பெருமை ' பற்றி வள்ளுவர் வகுத்துரைப்பது யாது?
4. 'அறன் வலியுறுத்தல்' பற்றி வள்ளுவர் வகுத்துரைப்பது யாது?
5. பெண்ணின் இலக்கணமாக வள்ளுவர் கூறுவது யாது?
6. "என்பிலதனை வெயில்போல"—இந்த உவமையை விளக்கிப் பொருளோடு பொருத்திக் காட்டுக.
7. "ஒருமையுள் ஆமைபோல்"—இவ்வுவமையை விளக்குக.
8. "நா காக்க வேண்டும்"—ஏன்?
9. மகன் யாவன்? மக்கட்பதடி யாவன்?
10. "ஈகை" பற்றி வள்ளுவர் உரைப்பது யாது?

11. "வாய்மை" பற்றி வள்ளுவர் கூறுவது யாது?
12. "கற்றறிந்தார் காமுறுவர்"—ஏன்?
13. "கேள்வி" பற்றி வள்ளுவர் புகல்வது யாது?
14. "பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்"
அல்லது
"வானேக்கி வாழு முலகெல்லாம் மன்னவன்
கோனேக்கி வாழுங் குடி"
என்னும் குறட்பாவில் பயிலும் அணியைச் சுட்டி, அஃது அவ்வணியாகுமாற்றையும் புலப்படுத்துக.
15. "தீரா விடும்பை தரும்."—எது?
16. நாட்டிற்கு அணியாகும் ஐந்து எவை?
17. கீழ்க்கண்ட தொடர்களை விளக்குக:
(1) வாள்போல் பகைவர் (2) வேலொடு நின்ருன்
(3) மரம்போல்வர் (4) நஞ்சுண்பார் கள்ளுண்பவர்
18. பணிவும் உயர்வும் எப்போது வேண்டும்?
19. பெருமை, சிறுமைகளின் இயல்பு என்ன?
20. "இரந்துகோட் டக்க துடைத்து."—எது? ஏன்?

II. 1. கீழ்வருவனவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுதுக:

நிறைமொழி, பொன்ரு, இன்ஞ, பதடி, மாக்கள், சால, கந்து, ஓச்சி, இடும்பை, ஆக்கம், ஓம்பல், அற்றம்,

2. தடித்த எழுத்துக்களாலான சொற்களுக்கும் பிற சொற்ருெடர்கட்கும் இலக்கணக் குறிப்புத் தருக:

எடுப்பதூஉ மெல்லாம், பொன்ருத்துணை, தற்காத்து, பாராட்டு வானை, மகனெனல், சுவையுணரா, சாலமிகுத்து, தீரா விடும்பை, கேடு, கடனென்ப, வேலொடு நின்ருன், இடும்பை படாஅதவர், என்ப.

III. 'வள்ளுவரும் குறளும்' என்னும் பொருள்பற்றி இரண்டு பக்கங்களுக்கு மிகாமல் ஒரு கட்டுரை எழுதுக.

## 2. இன்னிலை

**இன்னிலை:** இந்நூல் 45 வெண்பாக்களையும் பாரதம் பாடிய பெருந்தேவனுர் பாடிய கடவுள் வாழ்த்துச் செய்யுள் ஒன்றனையும் கொண்டுள்ளது. இந்நூலின் ஆசிரியர் பொய்கையார் என்பவர். அவர் காலம் ஏறத்தாழக் கி. பி. 5ஆம் நூற்ருண்டு என்னலாம். இந்நூல். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பேறுகளையும் பற்றிப் பேசுவது.

## அருஞ்சொற்பொருள்

1. அருஞ்சீலன் - அருமையான நல்லொழுக்கமுடையவன் ; முப்பொருள் - அறம், பொருள், இன்பம். தெளிவான் - உண்மை இயல்பைத் தெளிந்தவன். உண்மை உடையான் - உண்மையறிவுடையான். மடுப்பான் - மக்களுக்குக் காட்டி வளர்ப்பவன். இறை - அரசன். உண்மைக்கு இறை - மெய்ப்பொருளுக்கு உறைவிடமாம். தெளிவான், மடுப்பான் - வினையாலணையும் பெயர்கள்.

2. வெறுக்கை - பொருட்செல்வம். செல்நிலை - தம் வாக்கு எங்கும் செல்கின்ற நிலை. தூவொழுக்கு - தூய ஒழுக்கமும். கிளை - சுற்றத்தார். பணை அணைதோள் - மூங்கில்போன்ற தோளுடைய மனைவி. சேய் திரங்க - மக்கள் மெலிந்து வருந்த. ஒல்கு உயிர் - குறைவாகிய உயிர். பணையணைதோள் - அன்மொழித் தொகை.

3. உடைமையரா - செல்வமுடையவராகி. உடைமைக்கோல் - செல்வமாகிய ஊன்றுகோல். ஈட்டல் - அல்லீற்று வியங்கோள் வினைமுற்று.

4. சொல்லாட்டும் - தூய சொற்களைப் பேசுதலும். தோய - பொருந்த. பூயல் - பொருந்துதல். திருவத்தனர் - செல்வத்தினை யுடையவரே. அடுக்கும்மடி - அடுக்கி வருகின்ற பிறவி. மடி - வயிறு. இது பிறவியை உணர்த்த வந்தது.

5. கழிவு - தம்மிடமிருந்து நீங்கிய பொருள்களைக் குறித்து. கதழ்வு - சினம். வேர்த்து - வெகுண்டு. முறுக - மிக. அழிமுதல் - அறத்தினை நீக்கிக்கெடுக்கும் முதற்பொருள். தளை - கட்டு. தணப்பர் - அறுப்பர்.

## பயிற்சி

I. விடை எழுதுக :

1. செல்வத்தின் சிறப்பும், வறுமையின் இழிவும் ‘ இன்னிலை ’யில் எவ்வாறு கூறப்படுகிறது ?
2. ‘ செல்வத்தைச் சேர்த்தல் வேண்டும்.’’—ஏன் ?
3. பிறவியை நீக்குவான் யாவன் ?
4. ‘ நல்லறனை நாளணி கொள்வார் ’ இயல்பென்னை ?
5. முப்பொருள்கள் யாவை ? அவற்றைத் தெளிவான், உடையான், மடுப்பான்—யார் யார் ?

II. 1. கீழ் வருவனவற்றுக்கு இலக்கணக் குறிப்புத் தருக :
மடுப்பான், அணைதோள், ஈட்டல், கலங்கா, அருஞ்சீலன்.

2. பகுபத வுறுப்பிலக்கணம் கூறுக :
பறிப்பர், வேர்த்து, கொள்வார்.

III. இவ்வைந்து பாடல்களின் திரண்ட பொருளை எழுதுக.

## 3. பழமொழி

**பழமொழி :** பழமையாகிய மொழிகளையுடைய நூல் பழமொழியாகும். இந்நூல் ஒவ்வொரு பழமொழியை ஈற்றிலே கொண்டுள்ள நானூறு வெண்பாக்களையுடையது ; இதனால் ‘பழமொழி நானூறு’ எனவும் இந்நூல் வழங்கப்பெறும்.

**நூலாசிரியர் :** இந்நூலாசிரியர் **முன்றுறை அரையனார்** என்பவர். இவர் முன்றுறை என்னும் ஊருக்கு அரசராதலின் இப்பெயர் பெற்றார். இவரது இயற்பெயர் தெரிந்திலது. இவர் சமண சமயத்தினர் ; கி. பி. 6 அல்லது 7ஆம் நூற்றாண்டினர் என்னலாம்.

### அருஞ்சொற்பொருள்

1. பாய் இருள் - பரந்த இருள். மதியம் - திங்கள். காய்கலா - எரிக்கமாட்டா. மாயிரு - மிகப்பெரிய. ஒருபொருட் பன்மொழி. பல + மீன் = பன்மீன் ; இச்செய்யுளில் **எடுத்துக்காட்டுவமையணி** அமைந்துள்ளது.

2. உரை முடிவு - வழக்கினது முடிவான உண்மை. என்ற - என்று இகழ்ந்த. உவப்ப - மகிழ. சொல்லால் - அவர்கள் கூறிய சொற்களைக்கொண்டே. சோழன் - கரிகாலன். குலவிச்சை - தத்தம் குலத்திற்குரிய அறிவு.

3. நெறி - செறிந்த. பூ - அழகிய. சேர்ப்ப - கடல் நாடனே ; ஆடூஉ முன்னிலை. தொல்லை - முன்னாளில். அறிமடம் - அறிந்தும் அறியாது போன்ற செயல்களைச் செய்தல். முல்லைக்குத் தேரளித்தான் பாரி ; மயிலுக்குப் போர்வையிட்டான் பேகன் ; அளித்தாரை - வினையாலணையும் பெயர். அறிதும் - தன்மைப் பன்மை வினைமுற்று. நெறி மடல் - வினைத்தொகை.

4. பொறிவண்டு - புள்ளிகளையுடைய வண்டுகள் ; இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை. முரலும் - இசை பாடும். ஊர - மருத நிலத்தலைவனே ; ஆடூஉ முன்னிலை.

5. வாடி - உணவு பெருமையால் வாட்டமுற்று. வலித்து - நரம்புகள் வலித்து. திரங்கி - உடல் சுருக்கத்தை யடைந்து. நாடறியப்பட்ட - உலகத்தாரால் தெரிந்துகொள்ளப்பட்ட ; நல்கூர்ந்து - வறுமையுற்று. வலித்து, திரங்கி, கிடந்து—வினையெச்சங்கள்.

6. தழங்கு - முழங்குகின்ற. வேய் - மூங்கில். வெற்ப - மலையை உடையவனே ; ஆடூஉ முன்னிலை. தெங்கம் பழம் - தேங்காய். தேற்றாதான் - தெளியாதான். வழங்கல், துய்த்தல் - தொழிற் பெயர்கள்.

7. விரா(வு)ம் - கலந்திருக்கின்ற. விரிபூ - வினைத்தொகை. புனல் ஊர - நீர் நாடனே ; ஆடூஉ முன்னிலை. அயிரை - மீன் வகை.

8. மாய்வதன் முன்னே - உணர்வு அழிவதன் முன்னே. ஆய்வு - ஆராய்தல். பின்னைவழி நினைந்து - பிற்காலத்தில் செய்வோம் என்று

நினைத்திருந்து. காணுமை - எதிர்மறைத் தொழிற் பெயர். காண் பொழுது - வினைத்தொகை.

## பயிற்சி

I. விடை எழுதுக :

1. முன்றுறை அரையனார் அறிவுடைமை பற்றிக் கூறுவது யாது?

2. "குலவிச்சை கல்லாமல் பாகம் படும்."—ஆசிரியர் இப்பழமொழியை எங்ஙனம் விளக்குகின்றார்?

3. "அறிமடமும் சான்றோர்க் கணி."—ஆசிரியர் இப்பழமொழியை எவ்வெடுத்துக்காட்டால் விளக்குகின்றார்?

4. "பெரியார்க்குச் செய்யும் சிறப்பினைச் சிறியார்க்குச் செய்தல் ஆகாது" என்பதனை ஆசிரியர் எப்பழமொழியால் விளக்குகின்றார்?

5. "புலித்தலையை நாய்மோத்தல் இல்"
"நாய்பெற்ற தெங்கம் பழம்"
—இப்பழமொழிகளை விளக்கி இவற்றால் அறியப்படும் செய்திகளைக் கூறுக.

6. "நாய்காணின் கற்காணு வாறு"
"அயிரை விட்டு வராஅல் வாங்குதல்"
இப்பழமொழிகளால் உணர்த்தப்படும் பொருள்களை விளக்குக.

II. 1. கீழ்வரும் சொற்களுக்கும் சொற்றொடர்களுக்கும் இலக்கணக் குறிப்புத் தருக :

பாயிருள், மாயிரு, அறிதும், சேர்ப்ப, பொறிவண்டு, வராஅல், விராஅம்.

2. பகுபதவுறுப்பிலக்கணம் கூறுக :
உவப்ப, முடித்து, அறிதும், கருதுவார்.

III. இந்த எட்டுப் பாக்களின் திரண்ட பொருளை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறுக.

# III. தொடர்நிலைச்செய்யுள்

## 1. சிலப்பதிகாரம்

### அடைக்கலக்காதை

**சிலப்பதிகாரம்:** இந்நூல் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகும். ஏனைய நூல்கள் சிந்தாமணி, மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன. சிலம்பு + அதிகாரம் = சிலப்பதிகாரம்; வலித்தல் விகாரத்தால் சிலப்பதிகாரம் என்றாயிற்று. சிலம்பின் செய்தி அதிகரித்தலைக் கொண்ட நூல் என்பதே இதன் பொருளாம்.

இந்நூல் மூன்று நீதிகளை யுணர்த்தும். அவை, 'ஊழ்வினை விடாது,' 'அல்லவை செய்தார்க்கு அறங் கூற்றம்,' 'கற்புடை மகளிரை உயர்ந்தோரும் வணங்குவர்' என்பனவாம். இந்நூல் முத்தமிழ்க் காவியம்; முடிமன்னர் மூவர்க்கும் உரியது; மூன்று காண்டங்களையுடையது. அவை, புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என்பன. இந்நூல் முப்பது காதைகளைக் கொண்டது. ஒவ்வொரு காதையும் ஒரு நீண்ட பாடலாகும்.

**இந்நூலாசிரியர் இளங்கோவடிகளாவர்.** இவர் சேரன் செங்குட்டுவனுக்குத் தம்பியார்; தந்தை—நெடுஞ்சேரலாதன்; தாய்—நற்சோணை. அடிகள் சமண நெறியினர்; எனினும் சமநோக்குடையார். இவரது காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு. இவர் காலப் புலவரும் நண்பருமாக விளங்கியவர் மதுரைக்கூலவாணிகன் சாத்தனார் என்பவர்.

### அருஞ்சொற்பொருள்

**வரிகள் 1—10:**

யான் அறி - யான் அறிய. ஒரு தனி - ஒருபொருட் பன்மொழி; உழந்து - வருந்தி. திருதகு - திருமகளை ஒத்த. மா - சிறந்த. மணிக்கொழுந்து - மாணிக்கத்தின் கொழுந்து போன்றவளாகிய கண்ணகி. கொழுந்து - உவமை ஆகுபெயர். குறுமகன் - கீழ்மகன். கூறும் - கூறுவானாயினன்; 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினை முற்று; ஆண்பாலில் வந்தது. கடி - காவல்; உரிச்சொல். நாறு + ஐந்து + கூந்தல் = நாறைங்கூந்தல் - நன்மணம் வீசுகின்ற ஐந்து பகுதியாக முடிக்கப்படும் கூந்தலையுடைய கண்ணகி; அன்மொழித் தொகை. நடுங்கு துயர் - கண்டோர் நடுங்கத்தக்க பொறுக்க முடியாத துயர்; வினைத்தொகை. கூறை - ஆடை. கோள் + பட்டு = கோட்பட்டு - பிறரால் கவர்ந்துகொள்ளப்பட்டு. கோட்டுமா - கொம்பினையுடைய பன்றி. புரிகுழல் - கடை சுழன்ற கூந்தல்; வினைத்தொகை. ஆயிழை - ஆராய்ந்து செய்யப் பெற்ற நகையணிந்த கண்ணகி - வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

**வரிகள் 11—20 :**

மாமலர் வாளி - சிறந்த மலர்களாகிய அம்புகள். காமக்கடவுள் - மன்மதன் ; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கையற்று - செயலற்று. அறவோன் - புத்தன். கடிது - மிக்க தீமை. ஈங்கு - இவ்விடத்தே. உறும் - உண்டாகும். அரைசர் பின்னேர் - வணிகர். அரைசர் - இடைப் போலி. இங்கு ஒழிக - இவ்விடத்தைவிட்டு நீங்குக. ஒழிக - வியங் கோள் வினைமுற்று.

**வரிகள் 21—30 :**

மாடமதுரை - மாடங்களையுடைய மதுரை ; இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை. மாநகர் - உரிச்சொற்றொடர். புகுகென - புகுக என. மாதவத்தாட்டி - தவத்திற் சிறந்த கவுந்தி யடிகள். மாமறை முதல்வன் - மாடலன் என்ற மறையவன். புறஞ்சிறை மூதூர் - எயிற்புறத்துள்ள பழைமையான ஊர். பூங்கண் - பூப்போலும் பொலிவு பெற்ற கண். மூதூர் - பண்புத்தொகை. பால் + மடை = பான் மடை - பாற் சோறு. பண்பில் - முறையாக. ஆ - பசுக்கள். ஆ - ஓரெழுத்தொருமொழி.

**வரிகள் 31—40 :**

கொடும்பாடு - கொடுமைத் தன்மை. செவ்வியள் - மனக்கோட்டம் இல்லாதவள். ஏதம் - இடர்ப்பாடு. தாதை - தந்தை ; மாசாத்துவான். வாணர் - வாழ்நர். கருந்தடங்கண்ணி - கருமையான பெரிய கண்களை யுடைய கண்ணகி.

**வரிகள் 41—50 :**

அஞ்சனம் தீட்டி - மை எழுதி. செம்மை + கயல் = செங்கயல் ; பண்புத்தொகை. நெடுமை + கண் = நெடுங்கண் ; பண்புத்தொகை. தூமடி - தூய புடைவை. உடீஇ - உடுத்தி ; சொல்லிசையளபெடை. ஆயம் - தோழியர் கூட்டம். வண்ணம் - அழகிய. சிறுமை + அடி = சீறடி - சிறிய பாதங்கள்.

**வரிகள் 51—60 :**

தன் துயர் காணு - தான் அடைந்த துயரைப் பிறர் சிறிதும் காணவியலாத. கற்புக்கடம் - கற்பாகிய கடமை ; (யாம்) கண்டிலம் - தன்மைப் பன்மை வினைமுற்று. பிழைப்பு - தன்வளம் தவறுதலை. கொற்றம் - வெற்றி.

## பயிற்சி

I. விடையெழுதுக :

1. கோவலன் கண்ட கனவு யாது ? அதனைக்கேட்ட மாடல மறை யோனும் கவுந்தியடிகளும் கூறியன யாவை ?

2. கவுந்தியடிகள் கண்ணகியை மாதரியுடன் இருத்துதற்கு ஏதம் இன்று என எண்ணியது ஏன்?
3. கவுந்தியடிகள் மாதரியிடம் கண்ணகியைப் பாராட்டியுரைத்த திறத்தைப் புலப்படுத்துக.
4. கீழ்க்கண்டவற்றிற்கு நிகழிடமும் பொழுதும் காட்டி விளக்க வுரை வரைக :
   1. " இம்மைச் செய்தன யானறி நல்வினை
      உம்மைப் பயன்கொல் ".
   2. " வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள் ".
   3. " கற்புக்கடம் பூண்டவித் தெய்வ மல்லது
      பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலம் ".

II. 1. பிரித்தெழுதுக :

நாறைங்கூந்தல், கோட்பட்டு, நள்ளிருள், கடிதீங்குறும்.

2. சேர்த்தெழுதுக :

முதுமை + ஊர், நீள் + நிலம் + வேந்தர், ஆ + காத்து + ஓம்பி, செம்மை + கயல், நெடுமை + கண், பொற்பு + உடை.

III. 1. சிலப்பதிகாரம் என்னும் நூலின் சிறப்புக்களை ஒரு கட்டுரை யாக எழுதுக.

2. இளங்கோவடிகள் வரலாற்றினை நூலகத்து நூல்களின் உதவி கொண்டு கட்டுரையாக வரைக.

## 2. மணிமேகலை

### பாத்திரம் பெற்ற காதை

**மணிமேகலை :** இந்நூல் ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகும். இந்நூலின் தலைவியாகிய மணிமேகலை, கோவலனுக்கும் மணிமேகலைக் கும் பிறந்தவள். மணிமேகலையின் வரலாற்றைக் கூறுதலான் இந்நூலுக்கு மணிமேகலை என்பது பெயராயிற்று. இந்நூல் 'மணிமேகலை துறவு' எனவும் பெயர்பெறும். இந்நூல் விழாவறை காதை முதலாகப் பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை இறுதியாக முப்பது காதைகளையுடையது; பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்களையும், மதக்கொள்கைகளையும் நன்கு விளக்கிக் கூறுவது. ஒவ்வொரு காதையும் ஒரு நீண்ட பாடலைக் கொண்டது.

**ஆசிரியர் :** மதுரைக் கூலவாணிகன் சாத்தனார். இவர் மதுரை யில் பதினெண் வகையான தானியங்களை வாணிகம் செய்தவர்; பௌத்த சமயத்தவர். இவர் இளங்கோவடிகளுக்கு நண்பர் ஆதலால் கி. பி. இரண்டாம் நூற்றாண்டினராவர்.

## அருஞ்சொற்பொருள்

**வரிகள் 1—10 :**

மணிமேகலா தெய்வம் நீங்கிய பின்னர் - மணிபல்லவத் தீவில் மணிமேகலா தெய்வம், மணிமேகலைக்கு மூன்று மந்திரங்களை உபதேசித்து அந்தரத்தில் எழுந்து போன பின்பு. விரிபூஞ்சோலை - பரந்துள்ள பொழில்கள். தாழ்ந்தனள் நோக்கி - மெதுவாகப் பார்த்துக் கொண்டு. தாழ்ந்தனள் - முற்றெச்சம். காவதம் - ஏறத்தாழப் பத்துக் கல் (பதினைந்தரை கிலோமீட்டர்) தொலைவு. செவ்வனம் தோன்றி - நேரில் தோன்றி. கலம் - கப்பல்.

**வரிகள் 11—20 :**

பூமி அம் கிழவன் - நிலவுலகை ஆண்ட மன்னவனாகிய. ஆய பிறவியில் - இப்பிறவியில். என்பெயர்த் தெய்வம் - மணிமேகலா தெய்வம். பீடிகை - புத்தபாதங்கள் வைக்கப்பெற்ற பீடம். ஆயிழை - மணிமேகலை ; வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

**வரிகள் 21—30 :**

ஓங்குயர் - மிகவும் உயர்ந்த ; மீமிசை - மேல் ; ஒருபொருட் பன்மொழி. அறவி + அம் + கிழவோன் - அறத்திலே நிற்கின்ற உரிமை யுடையவனான புத்ததேவன். விடூஉம் - கடத்துவிக்கின்ற ; இன்னிசை அளபெடை. மணிப்பீடிகை - மாணிக்கத்தால் செய்யப்பட்ட பாத பீடிகை.

**வரிகள் 31—40 :**

பிறழா நோன்பினர் - தவறாத மனவலிமையுடையார் ; பிறழா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பைந்தொடி - பைம்பொன்னா லாகிய வளையலை அணிந்த மணிமேகலையே ; பண்புத்தொகைப் புறத் துப் பிறந்த அன்மொழித் தொகை. ஒருதலையாக - உறுதியாக. மாமலர்க்குவளை - சிறந்த குவளை மலர். குவளை, நெய்தல் - முதலாகு பெயர்கள். இருது - பருவம். இளவேனில் - வசந்தகாலம் ; சித்திரை வைகாசி மாதங்கள். எரிகதிர் இடபத்து - கதிரவன் மிக்க வெம்மை யைச் செய்கின்ற இடபராசியில் இருக்கையில் ; எரிகதிர் - வினைத் தொகை.

**வரிகள் 41—50 :**

ஒருபதின் மேலும் ஒரு மூன்று சென்றபின் - இருபத்தேழு விண் மீன்களுள் கார்த்திகை முதலிய பதின்மூன்று விண்மீன்களும் சென்ற பின்பு. மீனத்து இடைநிலை மீனத்தகவையின் - நட்சத்திரங்களுள் நடுவில் நிற்றலையுடையதான விசாகநட்சத்திரத்திலே. போதித் தலை வனொடு - அரச மரத்தின் கீழிருந்து தலைமைபெற்ற புத்த தேவனோடு.

மாபெரும் - ஒருபொருட்பன்மொழி. நின்னுங்கு - உன்கையிடத்து; நேரிழை - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஆருயிர் மருந்து - அரிய மருந்தாகிய அன்னம்; மருந்து - உவமவாகுபெயர்.

**வரிகள் 51—60:**

இதன் திறம் - இப்பாத்திரத்தின் வரலாற்றை. தொழுதனள் வணங்கி என்பதில் உள்ள தொழுதனள் - முற்றெச்சம். செம்மை + கை = செங்கை - பண்புத்தொகை. மாத்திரையின்றி - ஓரளவிற்படாமல்.

## பயிற்சி

I. விடை எழுதுக:

1. "யார் நீ" என்ற தீவதிலகைக்கு மணிமேகலை கூறிய விடை யாது?
2. "பூங்கொடி யன்னுய் யார்நீ" என்ற மணிமேகலைக்குத் தீவதிலகை கூறிய விடை யாது?
3. தீவதிலகை மணிமேகலைக்குக் கூறிய புத்த பீடிகையின் சிறப்பினை வரைக.
4. அமுத சுரபியின் பெருமையைத் தீவதிலகை எங்ஙனம் சிறப்பித்துக் கூறுகிருள்?
5. அமுதசுரபி தோன்றும் காலம் யாது?
6. பின்வருவனவற்றிற்கு நிகழிடமும் பொழுதும் காட்டி விளக்கவுரை வரைக:
   1. "ஈங்கென் வரவிதீங் கெய்திய பயனிது."
   2. "அந்நா ளிந்நாள் அப்பொழு திப்பொழுது."

II. 1. தடித்த எழுத்துக்களாலான சொற்களுக்கும் பிற சொற்றொடர் கட்கும் இலக்கணக் குறிப்புத் தருக:

விரிபூ, **தாழ்ந்தனள்,** நோக்கி, கவிழ், மகளிர், ஆயிழை, ஓங்குயர், மீமிசை, பிறழா, நோன்பினர், நேரிழை, மலர்க்குவளை.

2. பகுபதவுறுப்பிலக்கணங் கூறுக:

அறிந்த, உரைக்கும், பூண்டேன், பெற்ற, புரிந்த.

III. 1. இப்பாடப் பகுதியை ஒரு கட்டுரையாக வரைக.

2. இப்பகுதியில் வந்துள்ள அன்மொழித்தொகைகளை எடுத்தெழுதுக.

# 3. பெரிய புராணம்

## இளையான்குடி மாற நாயனார் புராணம்

**பெரியபுராணம் :** பெருமை பொருந்திய சிவனடியாரது பழைய வரலாற்றைக் கூறுவதால் இந்நூல் 'பெரிய புராணம்' என்னும் பெயர் பெற்றது. இந்நூலின் ஆசிரியர் இதற்கு இட்ட பெயர் "திருத்தொண்டர் புராணம்" என்பதாகும். தொண்டர் (சுந்தரர்) பெரியோராகையால் இந்நூலைப் (பெரியர் + புராணம்) "பெரியபுராணம்" என வழங்குதலே பெருவழக்காயிற்று. இந்நூல் சைவ சமயத்தின் தலைசிறந்த நூலாகும். சைவத் திருமுறைகளில் இது பன்னிரண்டாம் திருமுறையாகும்.

**நூலாசிரியர் :** இந்நூலாசிரியர் சேக்கிழார் ஆவர். இவர் தொண்டை நாட்டுக் குன்றத்தூரினர்; வேளாளர் குடியினர்; சிறந்த சைவர்; உயர்ந்த புலவர். இவரது இயற்பெயர் 'அருண்மொழித் தேவர்' என்பது. குடிப்பெயர்—சேக்கிழார் என்பது, இவர் சோழன் இரண்டாம் குலோத்துங்கனுக்கு அமைச்சர். இவர் காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டின் முற்பாதியாகும்.

### அருஞ்சொற்பொருள்

1. என்பு - எலும்பு. நேர - தமக்கு எதிரே. நித்தம் ஆகிய - நிலையான. செவிப்புலத்து - செவியில்; இருபெயரொட்டுப் பண்புத் தொகை. ஈரம் - கருணை. மதுரம் - இனிமை. பதம் - சொற்கள். யாவராயினும் - முற்றும்மை. இச்செய்யுள் குளகம்; "குளகம் பல பாட்டு ஒருவினை கொள்ளும்" என்பது இலக்கணம்.

2. குலாவும் - மேன்மையுடன் விளங்கும். மண்டு காதல்-நிறைந்த அன்பு; வினைத்தொகை. அண்டர் - தேவர். இச்சையில் - விருப்பம் போல்.

3. வளம் - செல்வம். உள்ளன - தம்மிடமிருந்த பொருள்களை. மாறி - விற்று. இறுக்க உள்ள - செலுத்தத்தக்க.

4. மால் + அயன் = மாலயன் - திருமாலும் பிரமனும். கொற்றம் - வெற்றி. ஏனம் - பன்றி. பெற்றம் - காளை. பேதையாள் - பார்வதியம்மை. நண்ணினர் - அடைந்தார்.

5. வேரித் தாரான் - குவளை மாலையை அணிந்த இளையான் குடி மாற நாயனார். வேரியையுடைய தாரான் என விரியும் - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை. பாரித்து - தாங்கிக்கொண்டு. விருந்து - விருந்தினர்; பண்பாகு பெயர்.

6. ஆர - வயிறார. இனிமை + அமுது = இன்னமுது. தாரம் - மனைவி. தபோதனர் - தவத்தையே செல்வமாக வுடையவர். தாரம் + மாதர் = தாரமாதர்; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. என் + என - என்னென; எவன் என்னும் வினைப்பெயர் என் எனத் திரிந்து நின்றது.

7. இமக்குலக்கொடி-இமயமலையரசன் குலத்தில் தோன்றிய கொடி போன்ற பார்வதி. கொடி - உவமையாகுபெயர். இலை - இல்லை என்பதன் தொகுத்தல் விகாரம். அடிசில் - உணவு. ஆறு - வழி.

8. ஏதிலார் - அயலார். போதும் - இரவுப் பொழுதும். தீது செய்வினையேற்கு - தீவினை செய்தவளாகிய எனக்கு. செய்வினை - வினைத் தொகை. வினையேற்கு - வினையாலணையும் பெயர். காண்கிலேன் - எதிர்மறைத் தன்மை ஒருமை வினைமுற்று.

9. வித்திய - விதைத்த. மல்லல் - வளம் பொருந்திய. செல்லல் - துன்பம். கொடு - 'கொண்டு' என்பதன் தொகுத்தல் விகாரம். மல்லல் + நீர் = மல்லனீர்.

10. பெற்ற செல்வம் - பெயரெச்சத் தொடர். உள் + மகிழ்ந்து = உண்மகிழ்ந்து - உளம் மகிழ்ந்து. ஒருப்பட்டனர் - சம்மதித்தவராய்; முற்றெச்சம்.

11. பெருகுவானம் - நிறைந்த மேகங்கள்; வினைத்தொகை. அருகு - வழியின் ஓரம். நாப்பண் - நடுவிடம். அறிவரும் - அறிய முடியாத. கட்டு விட்டு - திடத்தன்மை நீங்கி. கங்குல் + தான் = கங்குறன். அருமை + கங்குல் = அருங்கங்குல்; பண்புத்தொகை.

12. என்னும் - மதிக்கத்தக்க. துண்ணெனும்படி - அஞ்சும்படி. நண்ணல் செல்லா - வெளிச் செல்ல விரும்பாத. இச் செய்யுளில் **தற்குறிப்பேற்ற அணி** அமைந்துள்ளமையைக் கண்டுணர்க.

13. பெருமை + இடா = பேரிடா - பெரிய கூடை. குறியின் வழி - குறிப்பாக அறிந்த வழியில். கொண்டுக்க - மேலே செலுத்த.

14. சாலி வெண்முளை - சம்பாநெல்லின் வெண்மையான முளைகளை. ஒல்லை - விரைவாக.

15. வெம்மை + தழல் = வெந்தழல். அந்தம் - அழகு. நீடும் - பொருந்திய. அலக்கு - வரிச்சல்.

16. மாட்டி - வைத்து. வாக்கிய - வார்த்த. இன்னடிசில் - பண்புத்தொகை.

17. குறுமை + பயிர் = குறும்பயிர், அற்பமான சிறிய பயிர். பாசப் பழி முதல் களைவார்போல - தமது ஆசையின் இழிவான வேரைக் களைவார் போல.

18. கைம்மை வினையில் - தமது கை வன்மையால். கொழுநர் - கணவர். வேறு வேறு - **அடுக்குத் தொடர்**. கறியமுது - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

19. உணர்வினால் - அறிவால். ஒண்ணா - இயலாத. இணையில்லாதவரை - ஒப்பற்றவராகிய சிவபெருமானை.

20. தொழும்பனார் - தொண்டராகிய மாறனார். அருள்க - வியங்கோள் வினைமுற்று.

21. சால - மிகவும் ; உரிச்சொல். ஏலம் - மயிர்ச்சாந்து. வார் - நீண்ட. குழலாள் - உமாதேவி. சீலம் + ஆர் - ஒழுக்கம் பொருந்திய. வார் குழல் - வினைத்தொகை.

22. அணங்கு - பெண்ணாகிய மாறனார் மனைவி. இருநிதிக்கிழவன் - குபேரன். மொழிவழி - சொற்படி.

## பயிற்சி

I. விடை எழுதுக :

1. மாறனார் வறுமை எய்தியது ஏன் ?
2. இறைவன் கொண்ட தவவேடத்தின் இயல்பினைப் புலப் படுத்துக.
3. விருந்தினரைப் போற்ற மாறனாரின் மனைவியார் கூறிய வழி யாது ?
4. கங்குலும், நடுவிருள் யாமமும் சேக்கிழாரால் எங்ஙனம் புனைந் துரைக்கப்படுகின்றன ?
5. சிவனடியாரிடம் கொண்ட பேரன்பினால் மாறனார் செய்த செயற்கருஞ் செயல் யாது ?
6. கீழ்க்கண்டவற்றிற்கு நிகழிடமும் பொழுதும் காட்டி விளக்க வுரை வரைக :
   (1) " இணையிலா தவரை யீண்ட அமுதுசெய் விப்போம் "
   (2) " பாசப் பழிமுதல் பறிப்பார் போல "
   (3) " அழுந்திய இடரு ணீங்கி அடியனேன் உய்ய வென்பால் எழுந்தருள் பெரியோய் "

II. 1. பிரித்தெழுதுக :

ஒப்பிலா, மனஞ் சுருங்குதல், திருப்பணி, கொற்றவேனம், நற்றவம், இன்னமுது, தாரமாதர், மற்றொன்றும், ஒன்றறி யேன்.

2. சேர்த்தெழுதுக :

அளகைக்கு + இருத்திய, மல்லல் + நீடிய, நாள் + தோறும், மாறு + இல் + திருப்பணி, பாரித்து + இல்லம், அடிசில் + தகவு + உற, வல்ல + ஆறு + அமுது, மை + குழம்பு.

III. 1. இளையான்குடி மாறனார் வரலாற்றை ஒரு கட்டுரையாக வரைக.

2. இளையான்குடி மாறனார் மனைவியாரது விருந்தோம்பும் பண்பினை விளக்குக.

# 4. கம்பராமாயணம்

## கங்கைப்படலம்

**கம்பராமாயணம் :** கம்பரது இராமாயணம் என விரித்திடின் ஆறும் வேற்றுமைத் தொகை. கம்பராற் செய்யப்பெற்ற இராமாயணம் எனின், மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகையாம். இராம+அயனம் - வடமொழித் தீர்க்க சந்தி. இஃது, இராமனது வாழ்க்கையை விளக்குவது என்று பொருள்படும். இந்நூல் வடமொழி வான்மீகி இராமாயணத்தைப் பெரும்பாலும் தழுவியது. இதன்கண் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், உயுத்த காண்டம் என்னும் ஆறு காண்டங்கள் உள்ளன. அவற்றுள் அயோத்தியா காண்டத்துள் நம் பாடப்பகுதியாகிய கங்கைப்படலம் உள்ளது.

**ஆசிரியர் :** இராமாயணம் பாடிய கம்பர் சோழநாட்டுத் திரு வழுந்தூரினர்; உவச்சர் மரபினர்; கி. பி. 12ஆம் நூற்ருண்டின் பிற் பாதியில் வாழ்ந்தவர். இவர் பாடிய இராமாயணப் பாடல்கள் சொற் சுவையும் பொருட்சுவையும் மிகுந்தவை; படிக்கப்படிக்க இனிப்பைத் தருபவை. இவர் சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப்பட்டார். இவரெழு திய பிற நூல்கள்—சடகோபரந்தாதி, ஏரெழுபது, சரசுவதியந்தாதி என்பன.

### அருஞ்சொற்பொருள்

1. நிற்றி - நிற்பாயாக; ஏவல் ஒருமை வினைமுற்று. நெடியவன் - பெரியோனுகிய இராமன். தாயின் - தாயைக் காட்டிலும். நிமிர்ந்த கூட்டம் சுற்றமும் - மிகுதியாகத் திரண்ட சுற்றத்தாரும்.

2. அண்ணல் - இராமபிரான். பண்ணவன் - நற்பண்புகளை யுடையவனுகிய இலக்குவன். பரிவினன் - பெருவிருப்புடையோனுகிய குகன். இருண்ட குஞ்சி - கருத்த மயிர் முடியோடு கூடிய தலை. புக்கான் - முற்றெச்சம். வருக - வியங்கோள் வினைமுற்று.

3. நீத்த - கடந்த. அருத்தியன் - அன்புகொண்டவனுகிய குகன். திருத்தினன் கொணர்ந்தேன் - ஆராய்ந்து கொண்டுவந்துள்ளேன்; திருத்தினன் - முற்றெச்சம். முறுவலன் - புன்சிரிப்புடையோனுய்.

4. அரிய - கிடைத்தற்கு அரியனவாகும். சீர்த்த - சிறப்புடையன. பரிவினில் தழீஇய - அன்பொடு பொருந்தியனவாயின்; தழீஇய - சொல் லிசை யளபெடை. பவித்திரம் - தூய்மை. உண்டனெம் - தன்மைப் பன்மை வினைமுற்று.

5. செப்புவான் - கூறுவான். எறி நீர்க்கங்கை - அலை எறிகின்ற நீரினையுடைய கங்கை; எறிநீர் - வினைத்தொகை. ஏறுதும் - கடப்போம். யாணர் - அழகு, புது வருவாய். நாவாய் - மரக்கலம். சாருதி - சேர்வா யாக; ஏவலொருமை வினைமுற்று.

6. கார்குலாம் நிறத்தான் - மேகம் போன்று விளங்கும் கருநிற முடையவனுகிய இராமன். காதலன் - அன்புடையவனுகிய குகன். ஈர்கிலா - பிடுங்கி எறியாத; ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ஐய, செல்வ - அண்மை விளிகள்.

7. கோதை - வெற்றிமாலே. தீராக் காதலன் - நீங்காத பக்தியுடையவன். ஈண்டு - இவ்விடத்தில்.

8. ஆழி அன்ன - கடலேப்போன்ற. பள்ளி - தவப்பள்ளி. வாய் அம்பு - கூர்மையான அம்பு. சேனே வெள்ளம் - உருவகம். வடிசிலே - வினேத்தொகை.

9. மாலேவாய் - மாலேக் காலத்தில். மரபுளி - செய்யவேண்டும் முறையால். வைகல் - அன்று. வேலே - கடல். வரிவில் - கட்டமைந்த வில்; வினேத்தொகை. இமைப்பிலன் - கண் இமைத்தலும் இல்லாதவனுய்; முற்றெச்சம்.

10. (மற்று) அவள் - துயில் என்னும் பெண். தவிசு - இருக்கை. பொற்றெடி - பொன்ஞலாகிய தொடியணிந்த சீதை; மூன்ரும் வேற்றுமை யுருபும் பயனும் உடன்தொக்கதொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஐயன் + துயில் + தரும் = ஐயன்றுயிறரும் - இராமன் படுத்துறங்கும். ஒருசிலே - ஒப்பற்ற வில்.

11. அம்பி - மரக்கலம். தும்பியின் குழாத்தின் சுற்றும் சுற்றத்தன் - யானேக் கூட்டம்போலச் சுற்றிக்கொண்டுள்ள இனத்தாரை உடையவன். அழியாநின்ற - நிலேகுலேகின்ற.

12. வரம்புஇல - எல்லேயிலாத. துறக்கம் - சுவர்க்கம். மறக்கும்ஆ - மறக்கும்படியாக. நினேயல் - நினேக்கக் கடவர்; அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள் வினேமுற்று. பிறவாவெய்யோன் - உலகத்து உயிர்கள் போன்று பிறத்தல் இல்லாத கதிரவன். அம்மா - வியப்பிடைச்சொல்.

13. செஞ்செவே - மிகவும் அழகாக. அஞ்சன நாயிறு - கருஞாயிறு; நாயிறு - முதற்போலி. வாழ்வதனம் - வினேத்தொகை. வதனமென்னும் தாமரை - உருவகம். அஞ்சன நாயிறன்ன ஐயன் - இல்பொருளுவமை அணி.

14. பொய்முறை அலரா - பொய்யான முறைமை தோன்ருத. என்ன - என்று கருதி. அலரா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; என்ன - 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினேயெச்சம்.

15. தினேயுண்டு + ஆல் + தேவரும் = தினேயுண்டாறேவரும். ஊன் - இறைச்சி. கான் - காடு.

16. துகில் - பட்டாடை. புரை - சிறுகுடில். கலிவான் - இயல்பாக ஓசையையுடைய வானம். கொணர்வேம் - தன்மைப் பன்மை வினே முற்று.

17. ஐந்து + இரண்டு + பத்து + ஒடு + ஐந்து + ஆயிரம் = ஐயிருபத்தோடைந்தாயிரர் = ஐந்நூருயிரவர். சிலே - வில்.

18. அதுகேளா - குகன் கூறியவற்றைக்கேட்டு ; கேளா - 'செய்யா' வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். குறுகுதும் - வருவோம்.

19. நெறி - வழியில். இடுநெறி - எளிதாகச் செல்லுமாறு வழி அமைக்க. நேடினன் - தேடி ; முற்றெச்சம்.

20. கவலை - கவலைக்கிழங்கு. கல்லுவென் - தோண்டியெடுத்துத் தர வல்லேன். வெருவலென் - அஞ்சேன். மலர் அடி - உவமைத்தொகை. செறிபுனல், உயர்தோள் - வினைத்தொகைகள்.

21. ஒருவலென் - உன்னைவிட்டுப் பிரியேன். மருவலர் - பகைவர். வசை - பழி. உடன்போதுவென் - உன்னுடனே யான் வருவேன்.

22. உரை கேளா - குகன் கூறிய சொற்களைக் கேட்டு ; கேளா - 'செய்யா'வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இளவல் - தம்பியாகிய இலக்குவன். நுதல் - நெற்றி. நளிர் - குளிர்ந்த. நளிர்கடல் - உரிச் சொல் தொடர்.

## பயிற்சி

I. விடையெழுதுக :

1. கம்பர், இராமனைக் கண்ட குகனது நிலையை எவ்வாறு கூறுகின்றார் ?
2. குகன் இராமபிரானுக்குக் கொணர்ந்த காணிக்கை யாது ? இராமன் அவற்றை எவ்வாறு ஏற்றுக்கொண்டான் ?
3. ஞாயிறு தோன்றலும் தாமரை விரிதலும் கம்பரால் எங்ஙனம் புனைந்துரைக்கப்பட்டுள்ளன ?
4. இராமனைத் தம்மூரிலேயே வாழுமாறு குகன் வேண்டிக் கூறிய மொழிகளையும் அதனைக்கேட்ட இராமன் அளித்த மறுமொழி யையும் தொகுத்து எழுதுக.
5. குகன், தன்னையும் உடனழைத்தேகுமாறு இராமனை வேண்டிக் கூறிய மொழிகளைத் தொகுத்து வரைக.
6. இராமன் குகனிடம் தோழமை பாராட்டிக் கூறிய மொழிகள் யாவை ?
7. அடியிற் கண்டவற்றிற்கு நிகழிடமும் பொழுதுங் காட்டி விளக்கவுரை வரைக :
   (1) " இங்ஙனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன் ".
   (2) " எண்ணிய சில நாளிற் குறுகுதும் ".
   (3) " நானுள தனையும்நீ யினிதிரு ".

II. 1. தடித்த எழுத்துக்களாலான சொற்களுக்கும் பிற தொடர் களுக்கும் இலக்கணக் குறிப்புத் தருக :

ஈர்கிலாக்கள்வன், பொற்றொடியோடும், மாமலர், அஞ்சன நாயிறு, நளிர்கடல், மலரடி.

2. பகுபதவுறுப்பிலக்கணம் கூறுக:
செய்குதும், உண்டனெம், கேட்டான், வைகினர், கொணர்ந் தேன், நிற்றி.

III. 1. நூலகத்து நூல்களின் உதவிகொண்டு கம்பர் வரலாற்றை ஒரு கட்டுரையாக எழுதுக.
2. இப்பாடப் பகுதியின் திரண்ட கருத்தை ஒரு கட்டுரையாக வரைக.

# 5. இரட்சணிய யாத்திரிகம்

## இரட்சணிய சரிதப்படலம்

### சிலுவைப்பாடு

**இரட்சணிய யாத்திரிகம்:** ஆன்ம ஈடேற்றத்தை விரும்பியவர் களின் உள்ளத்தே, அப்பேறு கிட்டும் வரையில் சீவாத்மாவின் மோட்ச யாத்திரையைப் பற்றி விளக்கிக் கூறும் நூல் என்பது இதன் பொரு ளாகும். 'ஜான் பனியன்' என்னும் ஆங்கில ஆசிரியர், தாம் சிறை வாசம் செய்த காலத்தில் இயற்றிய கற்பனை நூலாகிய, 'பரதேசியின் மோட்சப் பிரயாணம்' என்னும் ஆங்கில உரைநடை நூலைத் தழுவி இந்நூல் எழுதப்பட்டதாகும். இந்நூலின் செய்யுள் நடை பெரும்பாலும் கம்பராமாயணச் செய்யுள் நடையையும், அதன் போக்கையும் தழுவியே இயன்றவரையில் அமைக்கப்பட்டுள்ளது.

**ஆசிரியர்:** இந்நூலாசிரியர் H. A. **கிருஷ்ண பிள்ளை** என்பவர். இவர் தந்தையார் சங்கரநாராயண பிள்ளை என்பவர். தாயார் தெய்வநாயகியம்மாள் என்பவர். இவர் பாளையங்கோட்டையின் அருகிலுள்ள இரெட்டியாப்பட்டியினர்; இவர் இளமையில் வைணவர்; பிற்காலத்தே கிறிஸ்தவர். இவர் காலம் கி. பி. 1827 முதல் 1900 வரை யாகும். இயேசுநாதர் சிலுவையிற்பட்ட துயரை விளக்குவது சிலுவைப்பாடாகும்.

### அருஞ்சொற்பொருள்

1. போர்ச்சேவகர் - போர் செய்வதில் வல்ல காவலர். வல்லானை - எல்லாம் வல்ல இறைவனை. எள்ளி - இகழ்ந்து. பொல்லாத - எதிர் மறைப் பெயரெச்சம்.

2. தெவ்வர் குழுமி - பகைவராகிய வீரர் கூடி. செம்மை + அங்கி = செவ்வங்கி - செம்மை நிறம் வாய்ந்த ஆடை. ஆகடியம் - பரிகாச மொழிகள். கவ்வை - ஒலி. நகர் - நகரத்தார்; இடவாகு பெயர். (கட்டிக்) கொடு - 'கொண்டு' என்ற சொல்லின் தொகுத்தல் விகாரம்.

3. அலசி - மனம் நொந்து; மறுகு ஊடு - தெருவழியே.

4. மங்கலையாம் - சுமங்கலியாகிய. காதலனுக்கோ - புதல்வனாகிய இயேசுநாதருக்கோ.

5. போல் + திகழும் = போற்றிகழும். திருவதனம் - அழகிய முகம். வதங்கி - வாடி. குடிபோயது - நீங்கியது. நந்தா - குறையாத; ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கருணை நறு - அருளாகிய தேன்; உருவகம். கண்மலர்கள் - கண்களாகிய மலர்கள்; உருவகம். தேசு - ஒளி.

6. கருத்தழிய - எண்ணம் அழியவும். மண்டு துயரெனும் தீ - மிக்க துன்பமாகிய தீ; உருவகம். கடி - காவல் பொருந்திய; உரிச்சொல். **சோதோம்** நகரம் இறைவன் சினத்திற்காளாகித் தீயால் அழிந்தது. அப்போது அந்நகரத்தில் வாழ்ந்த மக்களும் பிற உயிர்களும் பெருந் துயருற்றனர். அந்நிகழ்ச்சி இங்குச் செருசலேம் நகரத்து மக்கள் உற்ற துன்பத்திற்கு உவமையாக வந்துள்ளது.

7. குழல் + நூல் = குழனூல் - நெசவுக் குழலிலுள்ள நூல். குருத்துவம் - குருபக்தி. கரந்து - மறைந்து. சாம்பி - உடல்வாடி. பசுந்தோகை - மரியம்மையார்; பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

8. இப்பரிசு - இம்முறையாக; மல்கி - நிறைந்து. செப்ப + அரிய = செப்பரிய. வதைபுரிவான் - கொலை **செய்வான்** வேண்டி; செய்வான் - 'வான்' ஈற்று எதிர்கால வினையெச்சம்.

9. செற்றமொடு - தணியாத சினத்தோடு. குருசு - சிலுவை; சுருதிமுதல் - வேதமுதல்வனாகிய பரமன். சொற்ற - மொழிந்த.

10. சதைப்புண்டு - சிதைக்கப்பெற்று. கனிவாய் - கொவ்வைக் கனி போன்ற வாய்; கனிவாய் - உவமைத் தொகை.

## பயிற்சி

I. விடையெழுதுக:

1. இயேசுநாதர் சிலுவையைச் சுமந்து வருதலைக் கண்ட செருசலேம் மகளிர் வருந்திக் கூறியன யாவை?
2. இயேசுநாதர் சிலுவையைச் சுமந்து சென்றபோது செருசலேம் நகரத்தாரும் மரியன்னையாரும் அடைந்த வருத்தத்தை ஆசிரியர் எங்ஙனம் கூறுகின்றார்?
3. அருள் வள்ளலாரின் அருண்மொழி யாது?
4. அடியிற் கண்டவற்றிற்கு நிகழிடமும் பொழுதும் காட்டி விளக்கவுரை வரைக:
    1. "நந்தாக்க ருணைந றுத்துளிக்கும் கண்மலர்கள்
    சிந்தாகு லம்பொதிந்து தேசிழந்து விட்டது".
    2. "எந்தாய் இன்னதென வறிகில்லார் தாஞ்செய்வ
    திவர்பிழையை மன்னியும்".

5. பின்வரும் உவமைகளை விளக்கிப் பொருளொடு பொருத்துக:
(1) குழல் நூலின்
(2) தழலிடு பூங்கொடியே போல்

II. 1. கீழ்வருவனவற்றிற்கு ஏற்ற எதிர்ச்சொற்களைக் கூறுக:
புறம், சொல்லாத, பொறுமை, அழிய, துக்கம், பல, பெருமை, குற்றம், வேண்டும்.

2. இப்பாடச் செய்யுட்களிலிருந்து வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சம் ஆகியவற்றுக்கு ஆறு, ஆறு உதாரணங்கள் தருக.

III. இப்பாடப் பொருளை ஒரு கட்டுரையாக வரைக.

## 6. சீருப்புராணம்

**சீருப்புராணம்:** 'சீரு' என்னும் அரபு மொழிக்குப் 'பெரியோரது புகழ்' என்பது பொருள். இசுலாமிய மதப் பெரியாராகிய முகமது நபியின் வரலாற்றைக் கூறுதலால், இந்நூல் 'சீருப்புராணம்' எனப் பெயர் பெற்றது.

**நூலாசிரியர்:** இந்நூலாசிரியர் **உமறுப்புலவர்** ஆவார். இவர் தந்தையார் சேகு முதலியார் என்பவர். இவரது ஊர் கீழைக்கரையைச் சார்ந்த ஒரு சிற்றூர். இவர்தம் ஆசிரியர் கடிகைமுத்துப் புலவர் என்பவர். உமறுப்புலவர் எட்டையபுர மன்னரது அவைக்களப் புலவராய் விளங்கியவர். கி. பி. 17ஆம் நூற்றாண்டினர்.

நமது பாடப் பகுதியாகிய **கபுகாபுப்படலம்,** 'கபு காபு' என்னும் இளைஞரது வரலாற்றைக் கூறுவது. நபிநாயகத்திடம் கபு காபு தம் வரலாற்றைத் தாமே கூறுவதாக இப்பகுதி அமைந்துள்ளது.

### அருஞ்சொற்பொருள்

1. ஏவல்பூண - பணிவிடைசெய்ய. எந்தை - எனது தந்தை; மரூஉ. கோனகர் - தலைநகர். குழூஉக்கொண்டு - கூட்டமாகக்கூடி. ஈனமில் - குற்றமற்ற.

2. ஆய் - தாய். சந்ததி - மக்கள். தனையர் - மக்கள். புந்தி - புத்தி; மெலித்தல் விகாரம். நந்தல் - கெடுதல்; தொழிற்பெயர்.

3. அணுமாசு - அணுவளவு குற்றமும். பத்தியர் - பக்தியர். பகர் - சொல்லுதற்கு. இச்செய்யுளில் உவமையணி அமைந்துள்ளது.

4. புராணம் + காவியம் = புராண காவியம்; உம்மைத்தொகை. பேதைமை - அறியாமை. புந்தி - புத்தி; மெலித்தல் விகாரம்.

5. முன்னவர் - முன்னோர். வேதம் மூன்று - தௌறுாத்து, இஞ்சீல், சபூர் என்பன. நெறி - நல்வழி. மின் அவிர் பேழை - ஒளி

வீசும் பெட்டிகள். அவிர் பேழை - வினைத்தொகை. தெருள்வன் - தெளிவேன் ; தன்மை ஒருமை வினைமுற்று.

6. ஆடகம் - மாற்று உயர்ந்த பொன். தீண்டி - தொட்டு. பேதுற்றேன் - மயக்கமடைந்தேன்.

7. எம்மான்பாலின் வந்து - என் தந்தையிடம் சென்று. சந்ததி - மகனே. சாற்றுவான் - சொல்லுவான்.

8. மல்லல் - வளம். கனகம் - பொன். எல்லையில் - அளவற்ற. இழை - நகை. அறியாவண்ணம் - அறியாதவாறு. அறியா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். எள்ளல் - இகழல்.

9. மாயம் - வஞ்சனை. கபடு - சூது. தேவதத்தின் - தெய்வங்களின். தீன் - தீனுல் இசுலாம். காய்கதிரவன் - வினைத்தொகை.

10. அடுபகை - அழிக்கும்படியான பகைமை ; வினைத்தொகை. பன்னி நிச்சயித்து - தெளிந்து முடிவு செய்து. பேரும் புள்ளியும் பெயரும் அடையாளமும்.

11. வெறி - கள் குடித்த மயக்கம். அறிகிலா வண்ணம் - அறியாதவாறு. குறி - கருத்து.

12. விறல் - வெற்றி. வீறு - பெருமிதம். போழ்தில் - பொழுதில் என்பதன் மரூஉ. பேறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

13. உரையா நின்றேன் - சொல்லிக்கொண்டிருந்தேன் ; உரை + ஆநின்று + ஏன்.

14. இருந்தனன் புலம்பு கொண்டான் - இவ்வாறு நிலைமாறியிருந்து புலம்பத் தொடங்கினான். குறிப்பு நோக்கி - அவனிடத்துத் தோன்றும் குறிகளை ஆராய்ந்து. வாதை - துன்பம். மாதவம் - உரிச்சொல்தொடர்.

15. கனம் + கருமை = கனக்கருமை - கரிய மேகம். கனம் - மேகம். கவிகை - குடை.

16. பூண் - நகை. கல்லாப் புல்லர் - கல்வியறிவில்லாத கீழ்மக்கள். கல்லா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பொன்மணி பூணுடை - எண்ணும்மைகள் தொக்கன. புல்லர்க்கும் (உம்) - இழிவு சிறப்பும்மை.

17. போதம் - மெய்யறிவு. மனுவின் நூல் - நீதி நூல். கரப்பது - மறைப்பது. பேறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

## பயிற்சி

I. விடை யெழுதுக :

1. கபுகாபுவின் பெற்றோர் அவரைப் போற்றி வளர்த்துக் கல்வி கற்பித்த தன்மையைப் புலப்படுத்துக.
2. "பொற்செப்பின் உள்ளிருப்பது யாது?" எனக் கேட்ட கபுகாபுவிற்கு அவர் தந்தையார் கூறிய விடை யாது?
3. கபுகாபு பொற்செப்பினைத் திறந்தவுடன் கண்ட புதுமை யாது?

4. கபுகாபுவின் தாயார் தம் மகனுர் நிலைகுறித்து மாதவரிடம் யாது கூறினுர் ?
5. கபுகாபு, தாதையர் கடனுகக் கூறியன யாவை ?
6. 1. " விசும்பில் தோன்றும் சித்திரமதியம்"
   2. " ஆவி வைத்ததோர் உடம்பு "—இவ்வுமைகளை விளக்குக.

II. 1. கீழ்வருவனவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறுக :
   சந்ததி, மதியம், பொருவிலா, பேழை, புக்கு, விறல், பதைத்து, திருமொழி, கரப்பது, தகைமை.
2. பகுபத வுறுப்பிலக்கணங் கூறுக : தோன்ருது, பேதுற்றேன், தெருள்வன், இயற்றிய, உரையாநின்றேன்.

III. 1. கபுகாபு தமது வரலாற்றைத் தாமே கூறுவது போன்று ஒரு கட்டுரை எழுதுக.
2. கபுகாபுவின் தந்தையார் இப்பாடப் பொருளைக் கூறுவதுபோல ஒரு கட்டுரை வரைக.

## 7. பாரத வெண்பா

### கண்ணன் தூது

**பாரத வெண்பா :** பாரதக் கதையை வெண்பாக்களால் உணர்த்தும் நூல் ' பாரத வெண்பா ' எனப் பெயர் பெற்றது. பாட்டுக்களின் இடையிடையே காணப்படும் உரைப் பகுதிகள் கதைத் தொடர்ச்சிக்கு இன்றியமையாதனவாயிருத்தலின், இப்பாரதத்தை " உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் " என ஆன்ருேர் வழங்குவர். வடமொழியினும் தென்மொழியினும் வல்லவரான இந்நூலாசிரியர் உரைப்பகுதியை வட சொற்களும் தமிழ்ச் சொற்களும் கலந்த (மணிப்பிரவாள) நடையில் இயற்றியுள்ளார்.

**நூலாசிரியர் :** இந்நூலைப் பாடியவர் பெருந்தேவனுர் என்பவர். இவர் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் என்ற பல்லவனுல் ஆதரிக்கப் பெற்றவர். ஆதலால் இவர் காலம் கி. பி. 9ஆம் நூற்ருண்டாகும்.

#### அருஞ்சொற்பொருள்

1. மாயோன் - கண்ணபிரான். அங்கர் கோன் - அங்க நாட்டு அரசன், கன்னன். அரவு இருகால் + எய்யாமல் - பாம்புக் கணையை ஒரு முறைக்குமேல் மறுமுறை எய்யாமல். வேண்டாய் - வேண்டுவாயாக.

2. விண்ணவர்கோன் - இந்திரன். வரம் கொள்வான் - வரம் கொள்ள ; கொள்வான் - ' வான் ' ஈற்று எதிர்கால வினையெச்சம்.

3. அண்டம் - மேலுலகம். அலர் கதிரோன் - விரிந்த கதிர்களை யுடைய கதிரவன் ; வினைத்தொகை.

4. கலிங்கம் - ஆடை. கொண்டல் - மேகம்.

5. சந்து - சந்தனம். திரள் + தோள் + தருமன் = திரடோட்டருமன். கோமாதா - சிறந்த தாய். திருமகள் + தான் = திருமகடான். புல்கும் - தங்கியிருக்கும். திரள் தோள் - வினைத்தொகை.

6. சேவடி - செம்மை + அடி - பண்புத்தொகை.

7. வரவிடுமின் - ஏவற் பன்மை வினைமுற்று. திரு - திருமகள்.

8. ஐவர் - தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்னும் பாண்டவர் ஐவர்.

9. உண்ணு - உண்ணுத.

10. என் + எச்சில் + என்னேடும் + உண்டானை எனப் பிரித்திடுக; உண்டான் - உண்டவன், துரியோதனன்; வினையாலணையும் பெயர். நச்சி - விரும்பி. இழப்பேன் - அவனை இழப்பேன்.

11. மரு - மணம். வண்மை + தாரான் = வண்டாரான். சாலப் பல - உரிச்சொல் தொடர். அடுகளிற்ருன் - பகைவரைக் கொல்லும் யானைப்படையுடைய துரியோதனன்; வினைத்தொகை.

12. குன்றுவதோ - மறத்தல் ஆகுமோ.

13. புகுந்தது - நேர்ந்தது. என்னுமல் - என்று என்னைக் கேட்காமல். புக்கு - போர்க்களம் புகுந்து.

14. மாதேவி - துரியோதனன் மனைவி. தடங்கண் - உரிச்சொல் தொடர். வார் துகில் - வினைத்தொகை. ஆருயிர் - பண்புத்தொகை. வெம்மை + சமம் = வெஞ்சமம் - கொடிய போர்க்களம்; பண்புத்தொகை.

## பயிற்சி

I. விடையெழுதுக:

1. கண்ணன் குந்தியிடம் யாது கூறினன்?
2. குந்திதேவி வாயிற் காவலரிடம் யாது கூறினள்?
3. கன்னனைக் கண்ட குந்திதேவி யாது கூறினள்?
4. குந்தியின் மொழிகேட்டு மகிழ்ந்த கன்னன் கூறியவற்றைத் தொகுத்து வரைக.
5. கீழ்க்கண்டவற்றைத் தெளிவுற விளக்குக:
   (1) "தன்னெச்சி லுண்ணுத் தகைமையான்."
   (2) "நன்மணியைக் கோக்கோ பொறுக்கவோ வென்ருன்."

II. 1. பிரித்தெழுதுக:
இன்றுரைத்தீர், அரசியற்றி, என்னெச்சிலென்னேடினிது, ஆருயிர்.

2. சேர்த்தெழுதுக:
வண்மை + தாரான், அருள் + தான், பழிகள் + தாம், என் + உயிர்.

III. 'கன்னன் நன்றி மறவாதவன்' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை வரைக.

## 8. மனோன்மணீயம்

**மனோன்மணீயம் :** இது மனோன்மணியின் கதையென்று பொருள் படும்; தத்திதாந்த நாமம். மனோன்மணி என்பவள் பாண்டிய நாட்டு மன்னன் சீவக வழுதியின் மகள். இந்நூல் அவள் கதையைக் கூறுவது. இது லிட்டன் பிரபு எழுதிய ‘மறைவு வழி’ என்னும் ஆங்கில நூலைத் தழுவி எழுதப்பட்டதாகும். இஃது ஒரு சிறந்த நாடக நூல்; மறைந்த நாடகத் தமிழ் உணர்வினை ஊட்டும் மாண்புடையது. இந்நூல் ‘செகப்பிரியர்’ நாடக முறையைப் பின்பற்றி ஐந்து அங்க நாடகமாகச் செய்யுள் நடையில் இயற்றப்பட்டுள்ளது.

**நூலாசிரியர் :** இந்நூலாசிரியராகிய பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளையவர்கள், திருவாங்கூரைச் சார்ந்த ஆலப்புழை என்னும் ஊரினர்; பெருமாள்பிள்ளை என்பவரின் திருமகனாராவர்; சைவ வேளாள மரபினர்; தத்துவப் பேராசிரியர். இவரது காலம் 1855 முதல் 1897 வரையாகும். மனோன்மணீயம் என்னும் இந்நூல் பிள்ளையவர்களின் சிறந்த புலமையையும் ஆழ்ந்த மொழிப்பற்றையும் நாட்டுப்பற்றையும் விளக்குவதாகும்.

### அருஞ்சொற்பொருள்

**வரிகள் 1—10 :**

பருதி - கதிரவன். பொருதல் - போர்புரிதல். கருதுதற்கு என் உள - எண்ணிப் பார்ப்பதற்கு என்ன இருக்கின்றது. பெருக்கால் - மிகுதியால். வருதுயர் - தோன்றும் துன்பம்; வினைத்தொகை. கடலின் - கடலைக் காட்டிலும். ‘இன்’ ஐந்தாம் வேற்றுமை உருபு ஒப்புப் பொருளில் வந்தது. இரவி - கதிரவன். விழுந்திடு முன்னர் - மறைவதற்கு முன்னர். காண் + தகும் = காண்டகும் - காணுதற்குத் தக்க. மதிப்பார் - அளவிட்டுரைப்பார். மடு - தடாகம், குளம். விரிதிரை - பரந்துவரும் அலை; வினைத்தொகை. வரல் - வருதல்; தொழிற் பெயர்.

**வரிகள் 11—20 :**

ஒன்றிய - பொருந்திய. நட்டார் - நட்புக் கொண்டோர். மாள்வது - இறத்தல். கடன் - கடமை. மதியில் - அறிவில். அன்னம் - உணவு. உடன்பாடு - ஒப்பந்தம். கடம்பாடு - கடமைப்பாடு.

**வரிகள் 21—38 :**

ஒருசுகம் அணைவார் - ஒப்பற்ற இன்பத்தை அடைவார். இரங்கல் என்பயன் - வருந்துவதால் யாது பயன்? அலகிலா - அளவில்லாத.

“ கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து ”

என்னும் குறட்பாவின் கருத்து (வரிகள் 30—34இல்) அமைந்திருத்தல்

காண்க. சம்பவம் - காரணம். சங்கதி - வரலாறு. பொருக்கென - விரைவாக. நண்ணார் - அடையார். **நலமிலா** - 'இலா' ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

## பயிற்சி

I. விடையெழுதுக:

1. "ஒருவன தாசைப் பெருக்கால் உலகில்
வருதுயர் கடலிற் பெரிதே."—இக் கருத்தினைக் குடிலன் எங்ஙனம் எண்ணிப் பார்க்கின்றான்?

2. "மன்னவர்க்காக மாள்வ திவர்கடன்."—இதனை இடந் தோன்ற விளக்குக.

3. "நலம்வரின் பொருக்கெனக் கொள்வர்."—குடிலன் இதனை எவ்வுவமையால் விளக்குகிறான்?

4. துன்பம் உளதாதல் இயல்பு என்பதைக் குடிலன் எங்ஙனம் எண்ணித் துணிகின்றான்?

II. 1. கீழ்வருவனவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறுக:

அடிக்கடி, வரவர, நாட்டார், இயல்பு, நண்ணார், கடம்பாடு.

2. (1) **தடதட** - இதனை தட, தட எனத் தனித்தனியே பிரித்தால் பொருள் தாராது. இவ்வாறு பிரிக்க முடியாத நிலையில் இணைந்து வரும் படபட, கடகட, மளமள என்பவை **இரட்டைக் கிளவி** (இரட்டைச் சொல்) எனப்பெயர் பெறும்.

(2) **பாம்பு பாம்பு**—இது பிரித்தால் பொருள்தரும்; **அடுக்குத் தொடர்** எனப்படும். இந்நூற் செய்யுட்களிலிருந்து அடுக்குத் தொடருக்கு ஆறு எடுத்துக் காட்டுக்கள் தருக.

III. 1. குடிலனின் தனிமொழிகளைத் தொகுத்தெழுதுக.

2. நூல்களின் துணையைக் கொண்டு மனோன்மணி வரலாற்றை ஒரு கட்டுரையாக எழுதுக.

# IV. பல்சுவை

## புறநானூறு

**புறநானூறு:** புறம் + நான்கு + நூறு—புறநானூறு. இது புறப் பொருளைப் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்ட நூல் என விரியும்; இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இந்நூல் தமிழகத்தின் கருவூலமாம். இது நம் நாட்டை ஆண்ட முடியுடை வேந்தர், குறுநில மன்னர், கொடை வள்ளல்கள், புலவர்கள், ஆகியோர் பற்றியும் தமிழர்தம் நாகரிகம், பண்பாடு ஆகியவை பற்றியும் அறிந்துகொள்ளத் துணைபுரியும் சிறந்த நூல். இஃது எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகும். ஏனையவை: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு என்பன.

இந்நூற் பாக்கள் புலவர் பலரால் பல சந்தர்ப்பங்களில் பாடப் பெற்றவை. இவற்றின் காலம் ஏறத்தாழக் கி. மு. 300 முதல் கி. பி 300 வரையில் என்னலாம்.

1. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாண்டி நாட்டு மன்னன்; நீதி தவறிக் கோவலனைக் கொன்றமைக்காக வருந்தித் தன்னுயிரை விட்டவன்; அறிவும் ஆண்மையும் நிறைந்தவன்; கல்வியின் சிறப்பையும் கற்றற்குரிய வழியையும் தனது செந்தமிழ்ப் பாவின் வழியே உலக மக்களை உணரச் செய்தவன்.

### அருஞ்சொற்பொருள்

பிறப்பு ஓரன்ன - பிறப்பினால் ஒரே தன்மையாகிய. சிறப்பின் பாலால் - கல்விச் சிறப்பின் காரணத்தால். மனம் திரியும் - மனம் வேறுபடுவாள். ஆறு - வழியில். உற்ற + உழி = உற்றுழி - ஆசிரியர்க்குத் துன்பம் நேர்ந்தவிடத்து. உறுபொருள் - மிக்கபொருள்; வினைத் தொகை. பிற்றை நிலை - ஆசிரியர்க்கு வழிபாடு செய்யும் தன்மை. உறு பொருள் - மிக்க பொருள்; உரிச்சொல் தொடர். தாயும், அரசும் - (உம்) உயர்வு சிறப்பும்மைகள். திரியும், செல்லும் - 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்கள்.

2. சங்ககாலப் புலவராகிய நக்கீரனார் தாம் கண்டுணர்ந்த

> "செல்வத்துப் பயனே ஈதல்
> துய்ப்பே மெனினே தப்புந பலவே"

என்னும் மெய்ப்பொருளை உலகமுணர இப்புறப்பாட்டின்வழியே உணர்த்துகின்றார்.

### அருஞ்சொற்பொருள்

தெண் கடல் வளாகம் - தெளிந்த நீரையுடைய கடலால் சூழப்பட்ட உலகம். ஒருமையோர்—ஒரு தன்மையுடைய மன்னர். நாள் நடுயாமம் - ஒரு நாளின் நடு இரவிலும். பகலும் துஞ்சான் - நடுப்பகலிலும், உறக்கம் பிடியாதவனாகி; துஞ்சான் - முற்றெச்சம். கடுமா - விரைந்து செல்லும் நடையையுடைய விலங்கு; உரிச்சொல் தொடர். கல்லா ஒருவன் - தன்தொழிலையன்றிப் பிற தொழிலைக் கல்லாத. துய்ப்பேம் - அனுபவிப்பேம். தப்புந - தவறுவன. நாழி - முகத்தலளவை யாகு பெயர். இரண்டு - எண்ணலளவை யாகுபெயர். வெண்குடை, தெண் கடல் - பண்புத்தொகைகள்.

### பயிற்சி

I. விடை எழுதுக:
   1. கல்வியின் சிறப்புக் குறித்தும் கற்கும் முறை குறித்தும் பாண்டியன் நெடுஞ்செழியன் கூறுவன யாவை?
   2. "செல்வத்துப் பயனே யீதல்" என்னும் கருத்தை நக்கீரனார் எங்ஙனம் விளக்குகின்றார்?

II. 1. தடித்த எழுத்துக்களைக் கொண்ட சொற்களுக்கு இலக்கணக் குறிப்புத் தருக:
   **கல்லாவொருவன், உண்பதுநாழி, உடுப்பவைஇரண்டு, தப்புந, உறுபொருள், துய்ப்பேம்.**
   2. பகுபதவுறுப்பிலக்கணம் கூறுக:
   வருக, கொடுக்குவர், துய்ப்பேம், நிழற்றிய.

III. 1. நூலகத்து நூல்களின் உதவிகொண்டு புறநானூறு பற்றி ஒரு கட்டுரை வரைக.
   2. பாண்டியன் நெடுஞ்செழியன், நக்கீரனார் ஆகிய புலவர் இங்குக் கூறியுள்ளவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

## 2. வருணனை

### 1. காலைப் பொழுது

பொழுது புலர்ந்ததைப் பற்றிக் கூறும் இச்செய்யுள் **புகழேந்திப் புலவர்** இயற்றிய 'நளவெண்பா' என்னும் நூலில் உள்ளது. நளன், தமயந்தி வரலாற்றைக் கூறுவது நளவெண்பாவாகும். புகழேந்திப் புலவர் காலம் கி. பி. 13ஆம் நூற்றாண்டாகும்.

### அருஞ்சொற்பொருள்

சுரர் - தேவர். பூசுரர் - நிலத்தேவர்; பிராமணர். காசினி - உலகிலுள்ள உயிர்கள்; இடவாகு பெயர். தேன் கோதையாள் - தேன் ஒழுகும் மலர்மாலை அணிந்தவளாகிய தமயந்தி. புலர்ந்தது -

விடிந்தது. குமுதம், தாமரை - முதலாகு பெயர். ஆழ்துயரம் - வினைத் தொகை.

## 2. நெற்பயிர்

நெற்பயிரின் நிலைபற்றிக் கூறும் இச்செய்யுள் சிவஞான முனிவர் இயற்றிய 'காஞ்சிப் புராணம்' என்னும் நூலில் உள்ளது. இந் நூலாசிரியர் பாண்டி நாட்டினர் ; சைவத் துறவியார் ; இலக்கண இலக் கியங்களில் வல்லவர் ; கி.பி. 18ஆம் நூற்றாண்டினர். இவர் வேறு பல நூல்களையும் உரைகளையும் எழுதியுள்ளார்.

### அருஞ்சொற்பொருள்

உரு - உருவத்தில். திட்பம் - பால் பிடித்தலாகிய வலிமை. நிறீஇ - நிமிர்ந்து நின்று ; சொல்லிசையளபெடை. தருக்கு அற்று - செருக்கு இல்லாமல். தடஞ்சாலி - உயர்ந்த செந்நெற்பயிர். மொழி - திருக்குறள் மொழி. தேற்றும் - பொருட் சுவையை வெளிப்படையாகத் தெரிவிக்கும்.

## 3. நிலாத் தோற்றம்

'நிலாத் தோற்றம்' பற்றிய இச்செய்யுள் வில்லிபுத்தூராழ்வார் பாடிய 'வில்லி பாரதம்' என்னும் நூலில் உள்ளது. இவர் நடு நாட் டினர் ; வைணவ அந்தணர் ; கி. பி. 14ஆம் நூற்றாண்டினர்.

### அருஞ்சொற்பொருள்

கான் - காடு. ககனம் - வானம். தாரை - விண்மீன். நிரை நிரை - வரிசை வரிசையாக ; அடுக்குத்தொடர். வேனிலான் - வேனிற் காலத்துத் தலைவன், மன்மதன். கும்பம் - குடம்.

### பயிற்சி

I. விடை எழுதுக :

1. புகழேந்திப் புலவர் காலைப்பொழுதின் வருகையினை எங்ஙனம் புனைந்துரைக்கிறார் ?
2. நெற்பயிர் எந்தக் குறளின் பொருட் சுவையை விளக்குகிறது ? தெளிவுபடுத்துக.
3. விண்மீன்களும் மதியமும் தோன்றிய காட்சி எவ்வாறு புனைந் துரைக்கப்படுகின்றது ?

II. 1. பிரித்து எழுதுக :
கைம்மலர், பூங்குமுதம், அற்றைப்பொழுது, கானெலாம்.

2. சேர்த்தெழுதுக :
ககனம் + மீது, வான் + எலாம், குணக்கு + திசை, தட + சாலி, தூய்மை + நிலா.

III. நீ கண்டு களித்த இயற்கைக் காட்சிகளை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.

## 3. சீட்டுக்கவி

சீட்டுக் கவி - கவிதையாக எழுதும் கடிதம். இங்குள்ள சீட்டுக் கவி அந்தகக்கவி வீரராகவ முதலியாரால் சந்திரவாணன் என்பவருக்கு எழுதப்பட்டதாகும். அந்தகக்கவி வீரராகவ முதலியார் தொண்டை நாட்டினர். இவர் புறக்கண் இழந்தவராயினும் அகக் கண்ணுகிய கல்வி சிறக்கப் பெற்றவர்; தமிழ் நாட்டிலும், இலங்கையிலும் உள்ள மன்னர், பெருஞ்செல்வர் முதலியவர்களைப் பாடிப் பரிசில் பல பெற்றவர். இவர் இயற்றிய நூல்கள் திருக்கழுக்குன்றப் புராணம், திருவாரூருலா, சந்திரவாணன் கோவை முதலியன. இவர் காலம் கி. பி. 17ஆம் நூற்ருண்டு.

### அருஞ்சொற்பொருள்

அநந்தை என்பது அனந்தபுரம் என்பதன் மரூஉ. உலகு என்ன எண்ணுமோ என மாற்றுக. போகி - போய். சொலுவர் - சொல்லுவர். கடிது - விரைந்து. இன்னே - இப்பொழுதே. குமணன் - சங்ககால வள்ளல்களுள் ஒருவன்.

### பயிற்சி

I. விடை எழுதுக:
1. அந்தகக்கவிஞர் யாருக்கு எவ்வாறு சீட்டுக்கவி அனுப்பினர்?
2. "தன்னை என் சொலுவர் என்னை என் சொலுவர்."—கவிஞர் ஏன் இவ்வாறு கூறுகின்ருர்?
3. "இராசராசர் திறை கொள்ளும் என் கவிதை"—இதன் கருத்து யாது?

II. இப்பாடப் பொருளை இக்காலக் கடிதம் எழுதும் முறையில் மாற்றி அமைத்து ஒரு கடிதம் எழுதுக.

## 4. இரட்டுற மொழிதல்

**இரட்டுற மொழிதல்:** இரண்டு+உற+மொழிதல் - ஒரு சொல லேனும் தொடரேனும் செம்மொழிச் சிலேடை வகையினுலும், பிரி மொழிச் சிலேடை வகையினுலும் இருபொருள்படக் கூறுவது இரட்டுற மொழிதல் ஆகும்.

**கலைசைச் சிலேடை வெண்பா:** இது, தொட்டிக்கலை என்னும் தலத்தில் கோவில்கொண்டுள்ள சிவபெருமான்மீது சிலேடை வெண் பாக்களால் பாடப்பட்ட நூல். கலைசை - தொட்டிக்கலை. இந்நூலா சிரியர் தொட்டிக் கலை சுப்பிரமணிய முனிவர். இவரது பிறப்பிடம் சிதம்பரத்தை யடுத்துள்ள காட்டுமன்னுர் கோயில் என்பது. இவர் ஏறத்தாழ இற்றைக்குச் சற்றேறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகட்கு முற்பட்டவர். இவர் கலைசைக் கோவை, துறைசைக் கோவை முதலிய நூல்களையும் பாடியுள்ளார்.

## அருஞ்சொற்பொருள்

1. "பாவலர் ஆவலுடன் காவலரை (மன்னரை)ச் சூழும்" எனவும், "ஆறு கால் வண்டினம் காவலரைச் (கா + அலரை = சோலையில் மலர்ந்துள்ள மலர்களைச்) சூழும்" எனவும் கூட்டிப் பொருள் கொள்க. அரி + வை + அம்பு + ஆக + தான் எனவும், அரிவை + அம் + பாகத்தான் எனவும் மூன்று, நான்கு அடிகளைப் பிரித்துப் பொருள் காண்க. "திருமாலைக் கூர்மையான அம்பாகக் கொண்டவன்" எனவும், "பெண்ணாகிய பார்வதியை அழகிய இடப்பாகத்தில் கொண்டவன்" எனவும் பொருள் கூறுக. இச்செய்யுளில் முதலிரண்டு அடிகளில் சிலேடை அணியும், பின்னிரண்டு அடிகளில் மடக்கணியும் வருதல் காண்க. வந்த தொடரே மீண்டும் வந்து வெவ்வேறு பொருள்களை யுணர்த்தி வருவது மடக்கணியாம்.

2. "மண்டு அமர் செய்யும் களம் கண்டகர் அ சாடும்" எனவும், "வண்கரும்பை மள்ளர் சேர் கண் தகர சாடும்" எனவும் கூட்டிப் பொருள் கூறுக. மண்டு - நெருங்கி. கண்டகர் - வாள்வீரர். மள்ளர் - உழவர்கள். கண் தகர - கணுக்கள் முறியுமாறு.

"தொண்டர்கண் இச்சித்து இருக்கையான்" எனவும், "காதரத்தைத் தீர்க்கும் கணிச்சி திருக்கையான்" எனவும் கூட்டிப் பொருள் கூறுக. இச்சித்து - விருப்பங்கொண்டு. கணிச்சி - மழுப்படை. இச்செய்யுளிலும் சிலேடையும் மடக்கும் அமைந்தவாற்றைக் கண்டுணர்க.

## பயிற்சி

I. விடை எழுதுக :

1. "ஆவலுடன் பாவலரும் ஆறுகால் வண்டினமும் காவலரைச் சூழும் கலைசை."—இத்தொடரின் பொருளை விளக்குக.
2. அரிவையம் பாகத்தான் அரனொருமூன் றெய்தோன்
அரிவையம் பாகத்தா னகம்."—

இவ்வடிகட்குப் பொருள் கூறுக.

3. "கண்டகரச் சாடும்"—

இத்தொடரைப் பிரித்துக் காட்டி இருபொருள் கூறுக.

4. "தொண்டர் கணிச்சித் திருக்கையான் காதரத்தைத் தீர்க்கும்.
கணிச்சித் திருக்கையான் காப்பு."—

இவ்வடிகளில் அமைந்துள்ள அணியை விளக்குக.

II. 1. 'அரனொரு மூன்று எய்தோன்' என்பதில் அடங்கியுள்ள கதையைப் புலப்படுத்துக.

2. இவ்விரு பாடல்களின் தெளிந்த கருத்தை உன் சொந்த வாக்கியங்களில் எழுதுக.

## 5. சிற்றிலக்கியம்

### அழகர் கிள்ளைவிடுதூது

**கிள்ளைவிடுதூது :** திருமாலிருஞ்சோலை மலையில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும், அழகப் பெருமானிடத்துக் காதல் கொண்ட தலைவி ஒருத்தி, அவர்பால் ஒரு கிளியைத் தூது விடுத்ததாக இயற்றப்பெற்ற நூல் அழகர் கிள்ளைவிடுதூதாகும்.

**நூலாசிரியர் :** இந்நூலாசிரியர் **பலபட்டடைச் சொக்கநாத பிள்ளை** என்பவர்; பாண்டிய நாட்டினர். இவர் மதுரை மும்மணிக் கோவை, மதுரை யமகவந்தாதி முதலிய நூல்களைப் பாடியவர். இவர் கி. பி. 18ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்தவர்.

#### அருஞ்சொற்பொருள்

1. கார்கொண்ட மேனிக் கடவுள் - கருநிறமேனி கொண்ட திருமால். அரி - திருமால், கிளி. நீர்கொண்ட பாயல் - ஆலிலை.

2. மதன் - மன்மதன். செப்ப - சொல்ல. வையம் - உலகம்.

3. வேள் ஆண்மை - மன்மதனுடைய ஆட்சிக்கு உட்பட்டதே யாகும். கிள்ளை - கிளி.

4. மலைத்திடும் மாரன் - போர் செய்யும் மன்மதன். கால் + தேர் - காற்றாகிய தேர். முழுத்தேராய் - சிறந்த தேராக. **கால்தேர், முழுத் தேர்** என்னும் சொல்நயம் காண்க.

5. பரி - குதிரை. எதிரோ - நிகராகுமோ. ஏழும் - முற்றும்மை.

6. சுகமுனி - சுகமுனிவர். சுகம் + உன்னி - இன்பத்தை நினைத்து.

7. ஐந்து + வண்ணம் - ஐவண்ணம். வகைவகை - அடுக்குத் தொடர்.

8. பார்ப்பதி - பச்சை நிறமுடைய பார்வதி. சிவந்தாய் - முன்னிலை ஒருமை வினைமுற்று.

9. நாக்குத் தடுமாறுவோரை - நாக்குக் குழறுகின்றவர்களை. உன்னை விடுவார் - உன்னை ஒதுக்கி விடுபவர். உண்டோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது.

10. அடுபோர் - கொல்லும் போர்; வினைத்தொகை. மறம்தரு - வீரம் மிகுந்த. தத்தை - காந்தருவதத்தை; கிளி. சீரே - சிறப்பே. பேர் - பெயர் என்பதன் மரூஉ.

11. ஆரும் - யாரேனும். அச்சுதன்பேர் - 'ரங்கா'; திருமாலின் பெயர். சிவன்றன்பேர் - 'சொக்கா' என்னும் பெயர். ஆர் - 'யார்' என்பதன் மரூஉ.

12. நேர்பெறு விவேகி - சிறந்த அறிவைப் பெற்றவர். கூடு - பறவையின் கூடு, உடல்.

### பயிற்சி

I. விடை எழுதுக :

1. கிளியின் மூக்குச் சிவந்திருத்தற்கு ஆசிரியர் கூறும் காரணம் யாது ?
2. கிளியொழிந்த பிற பறவைகட்கு இறைவன் பெயரைக் கற்பித்தல் பிழையாகும் என்று கூறியது ஏன் ?
3. கூடுவிட்டுக் கூடு பாயும் யோகியார் கிளிக்கு உவமையாகார்—ஏன் ?

II. 1. இப்பாடப் பகுதியிலிருந்து வினைமுற்று, வினையெச்சம், பெயரெச்சம் ஆகியவற்றுக்கு நான்கு நான்கு உதாரணங்கள் தருக.

2. பகுபத வுறுப்பிலக்கணம் கூறுக :
கொண்டு, செலுத்திய, கண்ட, சொல்லாய்.

III. 1. இப்பகுதியில் கூறப்படும் கிளியின் சிறப்புக்களைத் தொகுத்தெழுதுக.

2. சுகமுனி, சீவகனார், மங்கையரில் தத்தை—இவர்களைப்பற்றி நூலக நூல்களின் உதவிகொண்டு ஒரு கட்டுரை வரைக.

## 6. வழிபாட்டுப் பாடல்கள்

1. **சிவபெருமான் :** இவ்வழிபாட்டுப் பாடலைப் பாடியவர் **மாணிக்கவாசகர்.** இவர் கி. பி. 9ஆம் நூற்றாண்டினர்.

### அருஞ்சொற்பொருள்

நினைந்து - குழந்தையின் பசியறிந்து. தாயினும் - (உம்) உயர்வு சிறப்பும்மை. ஊன் - உடல், தசை. சிக்கென - உறுதியாக.

2. **திருமால் :** இவ்வழிபாட்டுப் பாடலைப் பாடியவர் **வில்லி புத்தூராழ்வார்** ஆவர்.

### அருஞ்சொற்பொருள்

இருபதமுளரிகள் - இரண்டு பாதங்களாகிய தாமரை மலர்கள். ஏத்துவாம் - தன்மைப் பன்மை வினைமுற்று.

3. **இயேசுநாதர் :** இவ்வழிபாட்டுப் பாடலைப் பாடியவர், **திரு. வி. கலியாண சுந்தரனார்** ஆவர். இவர் பல நூல்களின் ஆசிரியர் ; அண்மையில் வாழ்ந்து மறைந்தவர்.

### அருஞ்சொற்பொருள்

தெய்வச்சேய் - தெய்வத்தன்மை வாய்ந்த திருக்குழந்தை. மறை - வேதம், விவிலிய நூல். அலகுஇல் - அளவற்ற. பாவர் - பாவம் செய்தோர். உலகம் - உலகத்தார், இடவாகு பெயர். மாசில்லா - இல்லா -

ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கொழுகொம்பு - பற்றுக்கோடு.

4. **மகமது நபி :** இவ்வழிபாட்டுப் பாடலைப் பாடியவர் திரு. வி. கலியாணசுந்தரனார் ஆவர்.

### அருஞ்சொற்பொருள்

கரவிலா - வஞ்சனையில்லாத. இலா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மறை - குர்-ஆன். போற்றி - வணக்கம்.

### பயிற்சி

I. விடை யெழுதுக :

1. ஆசிரியர் இயேசுநாதரின் சிறப்பியல்புகளாகக் கூறுவன யாவை?
2. வில்லிபுத்தூரார் திருமாலை எங்ஙனம் போற்றுகின்றார் ?
3. இறைவன், அடியார்க்கு அருள்புரியும் தன்மையை மாணிக்க வாசகர் எவ்வுவமையால் விளக்குகின்றார்?
4. ஆசிரியர் மகமது நபியின் சிறப்பியல்புகளாகக் கூறுவன யாவை ?

II. 1. பிரித்துக் காட்டுக :
மாசில்லா, கருமுகில், இருபதம், பானினைந்து.

2. சேர்த்து எழுதுக :
உள் + ஒளி, யான் + உனை, எங்கு + எழுந்து, அருமை + மறை.

3. தடித்த எழுத்துக்களைக் கொண்ட சொற்களுக்கும் பிறதொடர்கட்கும் இலக்கணக் குறிப்புத் தருக :
கமலக்கண்ணன், **தாயினும்**, மா**சில்லா**, முகில்வண்ணன்.

4. பகுபத வுறுப்பிலக்கணம் கூறுக :
ஏத்துவாம், செய்த, தந்த, பிடித்தேன்.

## உரைப் பகுதி

---

### 1. வாழ்க்கைக்கு வழிகாட்டி

**டாக்டர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார் அவர்கள்**

[இவர் உலகப் பொருளாதார வல்லுநருள் ஒருவர்; இந்திய அரசாங்கத்தில் நிதி அமைச்சராகத் தொண்டுபுரிந்தவர்; சிலப்பதிகாரத் துக்குப் புத்துரை எழுதியவர்; தமிழ் இலக்கியங்களில் பேரார்வம் படைத்தவர்.]

கலைகள் அறுபத்துநான்கு வகைப்பட்டவை என்று நம் முன்னோர் வகுத்திருக்கின்றனர். சுமார் ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட சிலப் பதிகாரத்திலும்,

"எண்ணெண் கலையோர் இருபெரு வீதியும்"

என்று வருவது குறிப்பிடத்தக்கது. கலைகள் மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்தும் சாதனங்களாகும். ஆயின், எல்லாக் கலைகளிலும் சிறந்த கலை, வாழ்க்கைக் கலை. அன்றாட வாழ்க்கையை ஒரு கலையாய்ப் பண் படுத்துபவனைத்தான் மக்களுட் சிறந்தவன் என்று சொல்லவேண்டும்.

வாழ்க்கையைக் கலையாய்ப் பண்படுத்துவதற்கு அறிவு தான் கருவி. ஆயின், இயற்கை அறிவைக் கொண்டே எல்லோரும் இந்தப் பயனை அடையமுடியாது. வாழ்க்கை யில் எவற்றை விலக்கவேண்டும், கையாளவேண்டும், எந்த விதத்தில் கையாளவேண்டும் என்பவற்றை எடுத் துச் சொல்ல ஒரு வழிகாட்டி வேண்டும். வாழ்க்கையின் வழி நுட்பங்களை அறிந்த பெரியோர் உலகத்திற்குத் தந்த நூல்களே இவ்வழிகாட்டிகளில் சிறந்தவை.

சொராஸ்டர் (Zoroster), கன்பூசியஸ் (Confucius), புத்தர், இயேசு கிருஸ்து, முகமது நபி ஆகிய இவர்களெல்லாரும் வழிகாட்டிகளாவார். இவர்கள்

உலகில் தோன்றி வாழ்வின் வழியை மக்களுக்கு எடுத்துக் காட்டிய மகான்கள். இவர்கள் விளக்கிய அடிப்படை யான உண்மைகள் உலக மக்களுக்கெல்லாம் பொருந் தியவை.

எல்லாச் சமயத்தாரும் எல்லா நாட்டினரும் நட்புக் கொள்ளக்கூடிய வாழ்க்கை நூல் ஏதாவது உண்டா? உண்டு. அத்தகைய நூலை, உலகிற்கு அளித்தது தமிழ். ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டில் பிறந்த திருவள்ளுவர் இந்தக் குன்ருச் சிறப்பைத் தந்தவர். அவர் தந்த திருக்குறளே தலை சிறந்த வாழ்க்கைத் துணை நூல்.

"இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்ட ஒரு நூல் இக்காலத்தில் வாழும் மக்களுக்கு வாழ்க் கைத் துணையாய் இருக்க முடியுமா? உலகம் மாறுதல் அடைந்துகொண்டே போகின்றது. மக்களின் நடை, உடை, பாவனை, மனக்கருத்து, நம்பிக்கை, அரசியல் முறைகள், நாகரிகம் ஆகிய இவையெல்லாம் சென்ற இருபது நூற்ருண்டுகளில் எவ்வளவு மாறுதல் அடைந் திருக்கின்றன! அப்படி இருக்க, நாம் வாழும் இன்றைய அமைப்புக்குத் திருக்குறள் முழுமையும் பொருந்துவதா?" என்று கேட்பதில் தவறில்லை.

இந்த ஐயத்தை ஓரளவிற்குச் சுருக்கமாய் ஆராய்தல் இன்றியமையாதது. நடை, உடை, பாவனை, நாகரிகம் ஆகிய இவையெல்லாம் நாம் உடலில் அணியும் ஆடை யணிகளைப் போன்றவை. அவை நாளுக்குநாள் மாறுதல் அடையும். அவை நாடுதோறும் மாறுபட்டும் இருக்கும். ஆயின், உயிரின் அடிப்படையான உண்மை என்றும் மாருதது.

மனித வாழ்க்கையில் எக்காலத்திலும், எந்நாட்டிலும் மாருத அடிப்படையான உண்மைகளையே திருவள்ளுவர் குறளில் கையாண்டுள்ளார். அதனுல்தான் நாம் குறளை உலக மக்களுக்கெல்லாம் எக்காலத்திலும் பயன்படும் 'வாழ்க்கை வழிகாட்டி' என்று போற்றுகிரும். உலகத்தை அழிக்கவல்ல மாபெரும் ஆற்றல் அணுவில்

உள்ளதென்று விஞ்ஞானம் நிலைநாட்டிவிட்டது. இரண்டு வரிகள் கொண்ட சிறிய குறள் வெண்பாவில் உலகத்தைக் காக்கவல்ல தலைசிறந்த உண்மை இருக்கிறதென்று எத்துணையர் அறிந்துள்ளனர்?

குறளில் காணும் வாழ்க்கை விதிகள் மக்களில் சிலர் மட்டும் கையாளவேண்டுபவையல்ல. உலக மக்கள் எல்லாரும் கையாளவேண்டுபவை; கையாளத் தகுவன. துறவறம் எவ்வளவு மேம்பட்டதாயிருப்பினும், அஃது எல்லாரும் அடையக்கூடும் நிலையுடையதன்று. இந்த நிலையை அடைய முடியாத ஒருவன் அதற்காகக் கவலைப் பட வேண்டுவதில்லை. இல்வாழ்க்கையை அறநெறியில் நடத்திவரின் துறவறத்தின் பயனை அடையலாம்.

> "அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
> போஒய்ப் பெறுவ தெவன்."

அதுமட்டுமன்று. அறத்தின் வழியில் ஒருவன் இல் வாழ்க்கையை நடத்திவரின், துறவிகள் முதலிய அனை வரினும் அவன் மேம்பட்டவனாவான்.

> "இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
> முயல்வாருள் எல்லாம் தலை."

தவம், தவம் என்று சொல்லப்படுகிறதே, அதன் உண்மை என்ன? மனைவி, மக்கள், சுற்றத்தார் ஆகிய அனைவரையும் விட்டுக் காட்டிற்குப் போய்த் தனித்த நிலைமையில் தியானம் செய்வதுதானா? இம்முறையே தவத்திற்கு அறிகுறி என்று கூறுவதற்கு இல்லை. இல் வாழ்க்கையில் இருந்தே தவம் புரியலாம் என்கிறார் திருவள்ளுவர். காட்டில் தவம் புரிகின்றவர் தம்முடைய நன்மையை மட்டும் நாடுபவர். ஆயின், இல்வாழ்க் கையை மேற்கொண்டவர் பிறர் நலமும் தந்நலமும் கருதுபவர் என்பது வள்ளுவர் கருத்து.

> "ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
> நோற்பாரின் நோன்மை உடைத்து."

பொருளின்மேல் ஆசை வைக்கக்கூடாதென்பதும், பொருளாசை, ஒருவன் நல்ல கதியை அடைவதற்கு

இடையூறுனதென்பதும் பல சமயங்களின் கொள்கை. திருவள்ளுவர் இதனை ஒப்புக்கொள்ளவில்லை. உலகத்தி லுள்ள ஒவ்வொரு மனிதனும் பொருளை விலக்கிவிடின் உலகம் நடைபெறுவது முடியாது. உலக வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. இதனுல்தான் திரு வள்ளுவர்,

" அருளில்லார்க் கவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்
கிவ்வுலகம் இல்லாகி யாங்கு "

என்ருர். அவர் இதன்மூலம் பொருளின் அவசியத்தை வலியுறுத்துகிருர். அருள் வளர்வதற்கும் பொருள் வேண்டும். அன்பு பெற்ற அருள் என்னும் குழந்தை யைப் பொருள் என்னும் செவிலித்தாய் வளர்த்தால்தான் வளரும் என்பது அவர் உள்ளக்கிடக்கை. அவர் கூறுவ தைக் காண்க.

" அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு."

பொருள் கட்டாயம் வேண்டும் என்று சொன்ன அவர், அப்பொருளை நியாய வழியிலும் பிறர்க்குத் தீங்கு விளை விக்காமலும் சேர்க்கவேண்டும் என்பதையும் நினைவூட்டு கின்ருர். அப்படி நியாயமான வழியில் சம்பாதித்த பொருளின் மூலமாகத்தான் அறவாழ்க்கையையும் இன்ப வாழ்க்கையையும் பெறலாம் என்பது அவர் கருத்து.

" அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்."

காலப்போக்கில் அரசியல் துறை பல மாறுதல்களை அடைகின்றது. முடிவேந்தர் ஆண்ட காலத்தில் எழுதப் பட்ட குறள், குடியரசு தலையோங்கி நிற்கும் இக்காலத் திற்கும் பொருந்தியிருப்பது அந்நூலின் அழியாத உண்மைக்குச் சான்ருகும். அரசியலில் அரசனது மாளிகையைப்பற்றியோ, அவனுடைய ஆடையணிகளைப் பற்றியோ, அவர் சொல்லவில்லை. மன்னனுக்கு இருக்க வேண்டும் குணங்களையே எடுத்துக் காட்டுகின்ருர். அவை, குடியரசில் ஆட்சித் தலைவனுயிருப்பவனுக்கும் பொருத்தமாய் இருக்கின்றன.

அரசன் தன்னிடம் முறையிட்டுக்கொள்ள வந்தவர்க்குக் காணுதற்கு எளியவனுகி, யாவரிடத்திலும் கடுஞ்சொல் சொல்லாதவனுய் இருப்பின், அவனது நாட்டை உலகம் உயர்த்திச் சொல்லும். அஃது அரசனுக்கு மட்டுமன்றிக் குடியரசு ஆட்சித் தலைவனுக்கும் பொருத்தமானதுதானே ?

"காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்."

பொருளாதாரத் துறையில் இக்காலத்தில் அரசாங்கத்தாருக்குள்ள பொறுப்பு மிகப்பெரியது. நாட்டின் பொருளைப் பெருக்குவதோடன்றி, அப்பொருள் சிலருடைய கைகளில் போகவிடாமல் ஏழை மக்களுக்கும் தொழிலாளர்களுக்கும் நியாய முறையில் பங்கீடு செய்து கொடுக்கவேண்டுவது, அரசாங்கத்தின் சிறப்புக் கடமை என்பது அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. திருவள்ளுவர் இந்தப் புதிய தத்துவத்தையும் அறிந்துள்ளார்.

நாட்டிற்குப் பொருள் பெருகும் வழிகளை மேலும் மேலும் உண்டாக்குவதிலும், உண்டான பொருள்களை ஓரிடத்தே தொகுப்பதிலும், அப்பொருளைப் பிறர் கொள்ளாமல் காப்பதிலும், காக்கப்பட்டவற்றைக் குடிகளுக்குப் பங்கீடு செய்தலிலும் வல்லவனுயிருப்பவனுன் அரசன் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார்.

"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு."

இக்காலக் குடியரசு முறையில் அரசாங்கம் குடிகளின் ஆதரவைப்பெற்று நடக்கவேண்டும். பொய்யில் புலவர் அரசனின் பல குணங்களையும்பற்றிச் சொல்லும் போது, 'தன் குடிகள் அரசனின் செவி கேட்கக்கூடாத கடுஞ் சொற்களைச் சொன்னபோதிலும், அச்சொற்களைப் பொறுக்கும் குணமுடைய அரசனது குடைநிழலின்கீழ் உலகம் பொருந்தும்,' என்றுர்.

"செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு."

மேலே எடுத்துக் காட்டப்பட்ட சில குறள் வெண் பாக்களிலிருந்து, உலக நாகரிகம் எவ்வளவு மாறுதல் அடைந்தபோதிலும், திருக்குறள் எல்லாக் காலத்திற்கும் பொருத்தமான வாழ்க்கைத்துணை நூல் என்பது நன்கு விளங்கும். இக்காரணம் பற்றித்தான் வள்ளுவருக்குப் 'பொய்யாமொழிப் புலவர்' என்ற சிறந்த பட்டத்தை நம் முன்னோர்கள் வழங்கினார்கள். வள்ளுவர் வாக்கு எக்காலத்திலும் பொய்யாகாது. வாழ்க்கையில் என்றும் அழியாமல் நிலைபெற்ற உண்மைகள் நிறைந்த நூல் திருக்குறள்.

மக்களில் மிகப் பெரும்பான்மையோர் கடைப்பிடிக்க வேண்டும் இல்லற வாழ்க்கையின் பெருமையை வலி யுறுத்தும் நூல்களில், திருக்குறளைவிடச் சிறந்த நூல் எந்த மொழியிலும் இல்லையென்று துணிவுடன் சொல்ல லாம். மனிதன், தனக்கு அறிவு வளர்ச்சிஉண்டான காலம் முதல், தான் நற்கதி அடையும் வழியை விடாமுயற்சி யுடன் தேடிக்கொண்டிருக்கின்றான். எல்லாச் சமய நூல் களின் முடிவும் அதுவேதான். யாகம், தவம், துறவறம் முதலிய பல கடினமான வழிகளை மனிதன் நம்பி நடக் கின்றான். ஆயின், அனைவரும் எளிதில் பின்பற்றக் கூடும் இல்லற வழியும் மனிதனுக்கு நல்ல கதியைக் கொடுக்கும் என்ற நம்பிக்கையை - உண்மையை - வள்ளுவர் நமக்குக் காட்டுகிறார்.

அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பகுதி களோடு குறளை முடித்துவிட்டனரே அன்றி நான்காம் பகுதியான வீட்டைப்பற்றி அவர் சொல்லவில்லை. அறம், பொருள் இன்பம் என்னும் மூன்று வழிகளைச் செவ்வை யாகக் கடைப்பிடித்து வாழ்க்கையை நடத்தினால் அந்த வாழ்வின் பயனே 'வீடு' அல்லது 'மோட்சம்' என்பது அவரது நம்பிக்கை.

தெய்வலோகம் என்று ஓர் உலகம் மேலே இருக்கிற தென்றும், அவ்வுலகில் வாழும் தெய்வ மக்கள் அழியாத இன்ப நிலையில் மூழ்கியிருக்கிறார்கள் என்றும் சாதாரண மக்கள் நம்புகிறார்கள். ஆயின், நாம் வாழும் இந்த

மண்ணுலகத்தையே தெய்வலோகமாகச் செய்யலாம் என்பது வள்ளுவர் கருத்து. தான் வாழும் இல்லத்தையே தெய்வலோகமாகச் செய்து, தன்னையும் தெய்வ மக்களில் ஒருவனாய் மாற்றிக்கொள்ளக்கூடும் ஆற்றல் மனிதனுக்கு உண்டு. இந்த மண்ணுலகில் அறநெறி தவறாமல் இல்வாழ்க்கையை நடத்துபவன் வானுலகில் வாழும் தெய்வ மக்களுள் ஒருவனாவான் என்கிறார் தெய்வப் புலவர்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."

பாமர மக்களுக்கு நம்பிக்கையையும் ஊக்கத்தையும் ஊட்டிப் பயனையும் தரும் சிறப்பு இதைவிட வேறொன்றுக்கு உண்டோ?

### அருஞ்சொற்பொருள்

எண் எண் கலை - அறுபத்துநான்கு கலைகள். ஆற்றின் - நடத்தினால். புறத்து ஆற்றில் - துறவறம் முதலிய புறவழிகளில். இயல்பினான் - உலக இயற்கையான அறவழியில். தலை - சிறந்தவனாவான். பொய்யில் புலவர் - திருவள்ளுவர். வான் உறையும் - விண்ணுலகில் வாழும். வையத்துள் - உலகத்தில்.

### பயிற்சி

I. விடை கூறுக :

1. கலைகள் என்பவை யாவை?
2. மக்களில் சிறந்தவன் எவன்?
3. வாழ்க்கையைக் கலையாய்ப் பண்படுத்த வழிகாட்டிகள் எவை?
4. தலைசிறந்த வாழ்க்கைத்துணை நூல் எது? எங்ஙனம்?
5. நாளுக்குநாள் மாறுபவை எவை? என்றும் மாறாதது எது?
6. உலக மக்களுக்கு எக்காலத்திலும் வாழ்க்கை நூல் என்று குறளைப் போற்றுவதேன்?
7. இல்வாழ்க்கையில் இருந்துகொண்டே துறவறத்தின் பயனை அடைவதெப்படி?
8. துறவிகளைக் காட்டிலும் மேம்பட்டவன் எவன்?
9. துறவறம், இல்லறம்—இவ்விரண்டிலும் எது சிறந்தது?
10. வள்ளுவர் பொருளின் தேவையை எவ்வாறு வற்புறுத்துகிறார்?
11. தலைவன் எவ்வாறு அமையவேண்டுமென்று வள்ளுவர் கூறுகிறார்?

12. அரசன் கடமை திருக்குறளில் எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
13. இப்பாடம் தெய்வலோகம் பற்றிக் கூறுவது யாது?
14. வள்ளுவர் வீட்டைப்பற்றி ஒன்றும் கூருதது ஏன்?

II. 1. இல்லறம் துறவறத்தைவிடச் சிறந்தது என்பதைப் பதினைந்து வரிகளில் எழுதுக.

2. பொருள்மீது ஆசை வைக்கலாமா? வைக்கக் கூடாதா? வள்ளுவர் வழிநின்று ஆராய்ந்து ஒரு கட்டுரை வரைக.

3. திருக்குறள் பற்றிய வேறு உரைநடை நூல்களைப் படித்துத் 'திருக்குறட் சிறப்பு' என்னும் தலைப்பில் இரண்டு பக்கங் களுக்கு மிகாமல் ஒரு கட்டுரை எழுதுக.

## 2. பாண்டித்துரைத் தேவர்

**வித்துவான் க. வெள்ளைவாரணன் அவர்கள்**

[இக்கட்டுரை ஆசிரியர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சியறிஞர் ; மிக இனிய செந்தமிழ்நடை எழுதுவதில் வல்லவர் ; பல ஆராய்ச்சிகளை அன்னை மொழியில் அழகுற எழுதியுள்ளார்.]

தமிழ் வளர்த்த குறுநில மன்னர்களில் சேதுவேந்தர் தலைசிறந்தோராவர். இவ்வேந்தர் குடியிற் புகழுடன் தோன்றியவரும், சேதுநாட்டு அரசியல் வினைகளைச் சீர்பெற நிகழ்த்திய அரசியல் அறிஞரும் ஆகிய பொன்னுச்சாமித் தேவரவர்களின் இளம் புதல்வராக, இற்றைக்கு ஏறத்தாழத் தொண்ணூற்றைந்து ஆண்டு களுக்கு முன்தோன்றியவர் பாலவநத்தம் குறுநில மன்னர் **பாண்டித்துரைத்** தேவராவர். பாளையம் பட்டி குறுநிலமன்னர் சீமைச்சாமித் தேவரும் கோட் டைச்சாமித் தேவரும் தேவரவர்களின் உடன்பிறந்தோ ராவர். பாண்டித்துரைத் தேவர்க்கு மனைவியர் இருவரும், புதல்வர் ஒருவரும் உண்டு.

தேவரவர்கள், தம்தந்தையாரைப் போலவே, நிரம்பிய தமிழார்வமும், செந்தமிழ்ப் புலமையும் படைத்தவர் ; திருவாவடுதுறை ஆதீனத்துப் பழனிக்குமாரத் தம்பிரான் சுவாமிகளிடம் அரிய தமிழ் நூல்களை முறையாகப் பயின்றவர் ; ஆங்கிலத்திலும் போதிய பயிற்சி பெற்றுக் கலை வளர்ச்சியில் தலைசிறந்து விளங்கியவர்.

அறுபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் மதுரையில் அரியதொரு நிகழ்ச்சி நிகழ்ந்தது. 1901ஆம் ஆண்டில் சென்னை மாகாணக் காங்கிரசு மாநாடு மதுரையில் கூடியது. அம்மாநாட்டில் தேவரவர்கள் வரவேற்புக் கழகத் தலைவராயிருந்தார். நாட்டுப் பணியில் ஈடுபட்ட அவரது உள்ளம், மூவேந்தராட்சியில் உரிமை பெற்று விளங்கிய பழைய தமிழ் நாட்டின் உயர்வினை எண்ணியது. தாய்மொழி வளர்ச்சியே தாய்நாட்டு வளர்ச்சியாம் என்பதும், மொழிப்பற்றின்றி நாட்டுப்

பற்று நிலைபெற முடியாதென்பதும் தேவரவர்கள் உள்ளத்தே நன்கு புலனாயின. தமிழரிற் பலர் தமிழ் மொழியில் பற்றின்றி, நாட்டு விடுதலையை மட்டும் எதிர்பார்த்து நிற்பதில் ஒருபயனும் இல்லையெனத் தேவரவர்கள் தெளியவுணர்ந்தார்கள்.

"தற்காலத்தே நம்மவரது மொழிப்பற்றின் நிலை மிகவும் இரங்கத் தக்கதே. சுருங்கச் சொல்லின், தேச மொழியின் வளர்ச்சியின்றி நாம் பெருமையை எதிர்பார்த்தல், ஆடையின்றி அலங்கரித்தலை ஒக்கு மன்றே," என்பது தேவரவர்கள் உய்த்துணர்ந்து கூறிய தெளிவுரை ஆகும். இவ்வாறாகத் தமிழ் வளர்ச்சி யால் தமிழ்நாட்டு அரசியலை உருப்படுத்த எண்ணிய தேவரவர்கள், காங்கிரசு மாநாட்டிற்கு வந்த தமிழறிஞர் களையும் புலவர் பெருமக்களையும் ஒருங்குகூட்டி, 1901ஆம் ஆண்டு, மே மாதம் 24ஆம் நாள், மதுரையில் **தமிழ்ச் சங்கம்** ஒன்றை நிறுவினார்கள். பாண்டியர்கள் நிறுவிய முதல், இடை, கடை என்னும் சங்கங்களுடன், இத்தமிழ்ச் சங்கமும் நான்காஞ் சங்கமென எண்ணப் பெறுஞ்சிறப்புடையதாயிற்று. செயற்கரிய இச்செயலைச் செய்தமைபற்றியே, தேவரவர்களை 'உக்கிர பாண் டியன்' எனத் தமிழறிஞர் பாராட்டுவாராயினர்.

நம் தேவரவர்கள், சங்கத்தின் சார்பில், 'செந் தமிழ்' என்னும் திங்களிதழைத் தொடங்கி நடத்தி னார்கள்; பாஸ்கர சேதுபதி அவர்களின் ஆதரவு கொண்டு, 'சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை'யை நிறுவினார்கள்; சங்கத் தமிழ்நூல்களை நன்கு கற்ற புலவர்களைச் சோதித்துப் பட்டம் வழங்கப் பண்டிதத் தேர்வினை அமைத்தார்கள்; ஆண்டுதோறும் சங்க விழாக் கொண்டாடிப் புலவர்களை வரவழைத்து அவர்தம் பொருளுரைகளைப் பலருங் கேட்டுத் தெளிவுறச் செய்தார்கள்; ஊர்தோறும் சென்று, அறிஞர் பேரவை யில் செந்தமிழ் நூல்களின் நயத்தினை விளக்கி, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பினார்கள்; தமிழ்ப் புலவர்களை நன்கு மதித்து ஆதரித்தார்கள்.

தேவரவர்களால் வளர்க்கப்பெற்ற மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் அமைப்பினையும் சங்கத் தலைவராகிய தேவரவர்களின் சால்பினையும் குலாம் காதர் நாவல ரவர்கள், தாம் இயற்றிய மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவராற்றுப்படை என்னுஞ் செழுந்தமிழ்ப் பாட்டில், நயம்பெற விளக்கியுள்ளார்கள். தேவரவர்களைப் பாட்டு டைத் தலைவராகக் கொண்ட இப்புலவராற்றுப்படை, நாவலரவர்களின் புலமையினையும் தேவரவர்களின் பெருமை மாண்பினையும் இனிது விளக்குவதாகும்.

பாண்டித்துரையவர்களின் புலமைத் தொண்டு, நூற்பதிப்பு, ஆராய்ச்சி, செய்யுளியற்றல், சொற்பொழிவு செய்தல் எனப் பல திறத்தானும் இனிது நடைபெற்றது. அவர்கள் நற்பொருள்களைப் பற்றிப் புலவர் பலர் பாடிய செய்யுட்களைத் தேர்ந்தெடுத்துப், 'பன்னூற்றிரட்டி' னைத் தொகுத்து உதவினர்கள்; இவ்வாறே சைவ சமய ஒழுகலாறுகளைக் குறித்துச் 'சைவ மஞ்சரி' என்னும் நூலையும் தொகுத்தளித்தார்கள். நாற்கவிராச நம்பி அகப்பொருள் முதலிய நூல்களைத் தாமே ஆராய்ந்து, திருத்தமுற வெளியிட்டார்கள்; புறப்பொருள் வெண்பா மாலை, மணிமேகலை என்னும் நூல்கள் வெளிவருவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்கள்; 'அநுமான விளக்கம்' முதலியவற்றை அறிஞர்களைக் கொண்டு ஆக்குவித்தார்கள்; தேவரவர்கள் வரலாற்று முறையில் நின்று தமிழர் வாழ்வினைச் செப்பஞ் செய்ய எண்ணித் 'தமிழ்ப் பழஞ் சரிதம்' என்னும் ஆராய்ச்சியுரையினைச் 'செந்தமிழில்' வெளியிட்டார்கள்; கம்பராமாயணம் முதலிய காவியங்களில் திளைத்துத் தாம் கண்ட நயங்களைச் சொற்பொழிவு வாயிலாகப் பலரும் உணரச் செய்தார்கள்.

தமிழும் சைவமும் தழைக்கப் புலமைத் தொண்டு செய்த அறிவுப் பெருஞ்செல்வர் சிவஞான முனிவராவர். அம்முனிவரையே வழிபடுந் தெய்வமாகக் கொண்டவர் நம் பாண்டித்துரைத் தேவர். முனிவரவர்கள் தமிழ் வளர்ச்சியிலும் ஈடுபட்டுப் பாட்டும் உரையும் இயற்றித்

தமிழ் மொழியினை எவ்வாறு வளர்த்துவந்தார்களோ, அவ்வாறே தேவரவர்களும் தம் புலமைத் திறத்தால் தமிழ் மொழியினை வளர்த்தார்கள்.

தேவரவர்கள் சிவஞான முனிவர்பால் வைத்த பேரன்பினால், அம்முனிவரது நூற்றிருபதாவதாண்டுத் திருநட்சத்திரத்தில், 'சிவஞான சுவாமிகள் இரட்டை மணிமாலை' என்னும் பிரபந்தத்தினைப் பாடி, மதுரைத் தெற்கு ஆடி வீதியில் தாம் நிறுவிய சைவப் பிரகாச சபையில் அரங்கேற்றினார்கள்; மேலும், முனிவர்களைக் குறித்த பிற வேறு சில பிரபந்தங்களும் இயற்றியுள்ளார்கள். இங்ஙனம் புலமைத் திறத்தாற் பாட்டும் உரையும் இயற்றிப் பண்டைப் பாண்டியர் போற் கவியரங்கேறிப், பெரும் புலவராய் விளங்கிய பாண்டித் துரைச்சாமித் தேவரவர்கள் பத்தாண்டுகளாக மதுரைத் தமிழ்ச் சங்கத்தைப் பாதுகாத்துப் போற்றித், தமது நாற்பத்தைந்தாம் வயதில், தமிழர்கள் தவக்குறைவினால், திடீரென இறைவன் திருவடியிற் கலந்து மறைந்தார்கள். இவர்களது பிரிவினால் உள்ளங்கலங்கிய புலவர் பெருமக்களின் இரங்கற்பாக்கள் கன்னெஞ்சத்தினரையும் கனிவிக்கும் நீர்மையன. தேவரவர்களின் வாழ்க்கையிற் காணப்படுஞ் சால்புகளை இனிது விளக்குஞ் சொல்லோவியமாகவும் இவ்விரங்கற் பாடல்கள் அமைந்துள்ளன. தேவரவர்களின் புகழுருவினைப் புலவரொருவர் பின்வருமாறு பாராட்டி உருகுகின்றார்:

"சித்திரத்தில் நீயிருப்பாய் சிந்தையுளே வீற்றிருப்பாய்
சிறப்பாச் செய்த
புத்தகத்தில் நீயிருப்பாய் புலவர்கள்தம் பாவிலெல்லாம்
புகழாய் நிற்பாய்
பத்திரிகை தனிலிருப்பாய் தமிழ்ப்பாண்டித் துரைவேந்தே
பாரில் எங்கும்
நித்தியமாய் இருக்கும்நினை நிலங்கடந்தான் என்றுலகர்
நிகழ்த்தல் என்னே."

இங்ஙனம் புலவர் பாடும் புகழுடைய பாண்டித்துரைத் தேவரவர்களின் தமிழ்த்தொண்டினை உளங்கொண்டு தமிழ்நாடு உய்தி பெறுவதாகுக.

## அருஞ்சொற்பொருள்

உக்கிர பாண்டியன் - சங்க காலப் பாண்டியருள் ஒருவன்; சிறந்த அறிஞன்; மதுரையில் இருந்த தமிழ்ச் சங்கத்தை ஆதரித்தவன். புலவராற்றுப்படை - பாண்டித்துரைமீது பாடப்பெற்ற சிறுநூல்; அவ்வள்ளலிடம் பரிசு பெற்ற ஒரு புலவன் மற்ருெரு புலவனை அவ் வள்ளலிடம் வழிப்படுத்தியதாகச் செய்யப்பட்ட நூல். பதிப்பித்தல் - ஒரு நூலைப் பிழையறப் பரிசோதித்து வெளிப்படுத்தல். ஒழுகலாறு - நடைமுறை விதி. அநுமானவிளக்கம் - இஃதொருநூல்; கருத லளவை பற்றிய நூல். இரட்டை மணிமாலை - நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் இருவகைப் பாக்கள் அந்தாதியாகத் தொடர்ந்து வரப் பாடப்படும் சிறுநூல். இரங்கற்பா - வருத்தப்பாடல்.

## பயிற்சி

I. விடை கூறுக:

1. தேவர் தெளிய உணர்ந்தவை யாவை?
2. தேவர் உய்த்துணர்ந்து கூறிய தெளிவுரை யாது?
3. தமிழறிஞர் தேவரை உக்கிர பாண்டியன் என்று பாராட்டக் காரணம் யாது?
4. குலாம் காதர் நாவலர் செய்த நூல் யாது? அந்நூற்பொருள் யாது?
5. தேவர் பதிப்பித்த நூல்கள் எவை? தொகுத்த நூல்கள் எவை?
6. தேவர் சிவஞான முனிவர்பால் மிக்க மதிப்புடையவர் என்பதை எவ்வாறு அறியலாம்?
7. புலவர் ஒருவர் தேவர் மறைவு குறித்துப் பாடிய இரங்கற் பாவின் பொருள் யாது?

II. 1. பாண்டித் துரைத்தேவர் தமிழ் பயின்றமை—மதுரையில் தமிழ்ச்சங்கம் அமைத்தமை—அவர் நல்லியல்புகள் என்னும் இக்குறிப்புகளின் துணையைக் கொண்டு இரண்டு பக்கங் களுக்கு மிகாமல் இப்பாடப் பொருளை ஒரு கட்டுரையாக எழுதுக.

2. தமிழ்ப் புலவர்களை ஆதரித்துத் தமிழை வளர்த்த புரவலர் ஒருவர் வரலாற்றை இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரையாக வரைக.

# 3. பாரதி போற்றிய ஓவியக் கலைஞர்

பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை அவர்கள், எம்.ஏ., எல்.டி.

[இக்கட்டுரையாசிரியர் பன்மொழிப் புலமையும் பாங்குற அமைந்தவர்; தமிழகத்திற்கு எண்ணற்ற ஏடுகளை ஆக்கியளித்தவர்; மொழியே விழியெனக் கருதும் மூதறிஞர். இப்போது சட்டக் கலைச் சொற்களைத் தமிழாக்கும் சீரிய பணி புரிந்துவருபவர்.]

" மலரினில் நீல வானில் மாதரார் முகத்தி லெல்லாம்
இலகிய அழகை ஈசன் இயற்றினான் சீர்த்தி யிந்த
உலகினில் எங்கும் வீசி ஓங்கிய இரவி வர்மன்
அலகிலா அறிவுக் கண்ணால் அனைத்தையும் நுகரு மாறே."

" இயற்கையில் அழகு எங்கும் கனிந்து தவழ்கின்றது. மலரிலே அது புன்னகை பூத்துக் குலுங்குகிறது. நீலவானிலே அது களிநடம் புரிகின்றது. மாதர் தம் முகங்கள்தோறும் அது தண்ணிலவொளி வீசுகின்றது. இங்ஙனம் இயற்கை தன் அழகு வண்ணத்தை யெல்லாம் காட்டிக் களிகூர்வது எதற்காகத் தெரியுமா?" என்று ஒரு கேள்வி கேட்கிறார் கவிஞர் பாரதி.

" உலகப் புகழ்பெற்ற கலைஞன் இரவிவர்மன், இந்த மெய் வண்ணங்களை யெல்லாம் காணட்டும், கண்டு மகிழ்ந்து தன் மை வண்ணங்களைத் தோய்த்துக் கைவண்ணந் தீட்டிக் காட்டட்டும். இதுவே இயற்கையின் உட்கோளாயிருக்க வேண்டும்!" என்று அவரே தம் கேள்விக்குக் கவிநயம்பட ஒரு மறுமொழியும் தந்து செல்கிறார்.

கவிஞர் பாரதியின் இத்தற்குறிப்பேற்ற அணிநயம் கலைஞரின் கலைநயத்தை எவ்வளவோ திறம்பட எடுத்துக் காட்டுகிறது. காவியக் கலைஞரால் இத்தகு சீரிய பாமாலை சூட்டிப் பாராட்டப்பெற்ற ஓவியக் கலைஞர் இரவிவர்மா என்பவர்.

இரவிவர்மா மலையாள நாட்டில் பிறந்தவர்; மன்னர் குடிமரபில் பிறந்து வளர்ந்தவர். ஆயின் அவர் கலை வனப்பு மலையாள நாட்டெல்லையையும் மன்னர்

 031(10) N66

பெருமக்கள் மரபெல்லையையும் தாண்டித் தமிழகத்தின் மக்கட் கவிஞன் பாரதியின் உள்ளத்தை அளாவிற்று. அதுமட்டுமன்று. இரவிவர்மா தென்னாட்டுக்கு உரியவர்; தென்னாட்டின் தலைசிறந்த ஓவியக் கலைஞர். ஆயின், அவர் புகழொளி தென்னாடெங்கும் பரவியதுடன் நிற்க வில்லை. வடநாட்டிலும் பொங்கி வழிந்தோடிற்று. அது கீழ்நாடு கடந்து மேலைநாடுகளிலும் பரந்தது. தென்னாட்டுக் கலைஞர் எவரும் அவரைப்போல வடநாட்டில் புகழ் பரப்பவில்லை. அதுபோலவே கீழ்நாட்டுக் கலைஞர் எவரும் அவரளவு மேல் நாடுகளில் புகழ் பெறவில்லை.

அவர் மன்னர் மரபுக்கு உரியவராயிருந்தாலும், மன்னர் பெருமக்கள் மாளிகைக்குரிய கலைஞராய் அமைந்துவிடவில்லை. மன்னர் மாளிகைகளிலும் பெரு மக்கள் மாடங்களிலும் அவர் கலைப்படைப்புக்கள் எந்த அளவுக்கு மதிப்புப் பெற்றனவோ, அதிலும் பன் மடங்காக அவை பொதுமக்கள் இல்லங்களில் பாராட்டப் பெற்றன. பொதுமக்களும் அவற்றைப் பேரளவு விரும்பி வாங்கினர். அவரளவு மக்கள் உள்ளங்களில் உலவி ஊடாடி, அவர்கள் இல்லங்களில் நிரம்பி அணி செய்து, அவர்கள் பண்பாட்டை வளர்த்த வேறொரு கலைஞனைத் தென்னாட்டிலோ, வட நாட்டிலோ காண முடியாது. மன்னர் குடியில் பிறந்தும் அவர் பேரளவில் மக்கள் கலைஞராக விளங்கினர் என்பதற்கு இதைவிடச் சிறந்த சான்று வேண்டுவதில்லை.

கலையுலகில் கீழ்நாட்டில் இரவிவர்மாவுக்குப் பல வகைகளில் சீரிய தனியிடம் உரியது. கீழ்நாட்டுக் கலைஞர் எவரும் அவரைப்போல் மேல் நாடுகளில் புகழ்பெற்றது இல்லை. இதற்கு ஓர் இயற்கையான காரணமும் உண்டு. அவர் மேனாட்டு முறைகளைத் திறம்படக் கையாண்டார். ஆயின், அவர் மேனாட்டு முறைகளைக் கையாண்டதனால், அவரது பண்பு மேனாட்டுப் பண்பாகவில்லை. மேனாட்டு முறையின் உதவி கொண்டே அவர் கீழ்நாட்டுப் பண்பைத் திறம்பட வகுத்துக் காட்டினர். இதன் மூலம் அவர்



351

மேனுட்டவர் போற்றுதல் மட்டுமே பெற்றிருந்தால், நாம் அவர் கலையை உலகக் கலை என்றே நாட்டுவோம். ஆயின், உண்மை நிலை இதுவன்று. அவர் மேனுட்டில் கலைவல்லுநரால் பாராட்டப்பெற்றது போலவே, இந்தியா முழுவதும் மக்களிடையே பேராதரவு பெற்ருர். எனவே, அவர் பொதுப்பட மக்கள் கலைஞரும் உலகக் கலைஞரும் மட்டுமல்லர்; சிறப்பாகக் கீழ்நாட்டுக் கலைஞராகவும் தென்னுட்டுக் கலைஞராகவும் போற்றத்தக்கவரேயாவர்.

காலத்தாலும், வரலாற்ருலும், மரபாலும் இரவிவர்மா இக்கால இந்தியக் கலைஞரிடையே ஒரு வழிகாட்டியும் முன்னணி விளக்கமும் ஆவர். அவர் வாழ்ந்த காலம் பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதி. அந்நூற்ருண்டின் தொடக்கத்திலேயே பொதுவாக இந்தியாவின் கலைமரபு தளர்வுற்று நலிந்துவிட்டது. தென்கோடியில் மரபு அருது நிலவிய ஒரு சிற்றிழையைக் கைக்கொண்டு, இரவிவர்மா அதைத் திறம்படப் பேணி வளர்த்தார். அவர் கொடுத்த புத்துயிரால் அது புதுவாழ்வு பெற்றுத் தென்னுட்டின் கலைமரபை வளர்த்தது; வடநாட்டிலும் கலையில் மக்கள் ஆர்வத்தைத் தூண்டிப் பெருக்கிப் புதிய கலை மலர்ச்சிக்கு வழிவகுத்தது. இங்ஙனம் அவர் தென்னுட்டின் கலைத்துறை மலர்ச்சிக்குத் தந்தையாகவும், வடநாட்டின் கலை மலர்ச்சிக்கு முதல் தூண்டுதல் தந்த முன்னணிக் கலைஞராகவும் திகழ்கின்ருர்.

கலை மக்களுக்காக என்று கொண்டவர் இரவிவர்மா. கலை கலைஞருக்கு மட்டுமே என்றோ, கலை கலைக்கூடங்கட்கு மட்டுமே என்ரே அவர் கருதவில்லை. எனவே, அவர் கலையழகு, கலைத்துறை வல்லுநர் மட்டுமே காணக்கூடிய மறையழகாகவோ, பொதுமக்களுக்கு எட்டாத மாயச் சரக்காகவோ அமையவில்லை. பிற பல கீழ் நாட்டுக் கலைஞரைப் போல, அவர் வடிவைப் புறக்கணித்து வடிவு கடந்த தற்புனைவுப் பண்புகளிலும் கற்பனைகளிலும் மட்டும் கருத்தூன்றவில்லை. அவர் வடிவழகிலும் கருத்துச் செலுத்தினர். வடிவழகின் மூலமாகவே கருத்

தழகிலும் அவர் உளந்தோய்ந்தது. இதனால் அவருடைய கலைப் படைப்புக்கள் எவர் கண்களையும் எளிதில் கவர்ந்தன; கவர்ந்த பின்பு அவர்கள் கருத்தையும் அவற்றில் நிலைக்க வைத்தன. அவரைத் தனிச் சிறப்புப் பட மக்கட் கலைஞராக்கியது இப்பண்பே என்னலாம்.

கலைத்துறை ஆராய்ச்சியாளர் கலைமரபின் வரலாற்றை இரண்டு கூறுகளாக வகுப்பர். ஒன்று மேலை உலக மரபு; மற்றொன்று கீழையுலக மரபு. பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் மேனாட்டார் மேல் உலக மரபொன்றையே கலை மரபாக மதித்தனர். கீழ்நாட்டுக் கலையை அவர்கள் கலையாகக் கருதவில்லை. இதற்குக் காரணம் யாதெனில், அவர்களது கலையாராய்ச்சிக்குரிய விதி அமைதியும் இலக்கணமும், அந்நாட்டின் கலை இலக்கியத்தை, கலைப் படைப்பைப் பின்பற்றி அமைந்திருந்தது என்பதே. இலக்கியம் கண்டதற்கே இலக்கணம் அமைதல் முடியும் என்ற பண்டைத் தமிழர் நுண் கருத்தை உணராமல், அவர்கள் தம் இலக்கணத்தின் அமைதி கொண்டு கீழ் நாட்டுக் கலையை அளக்க முற்பட்டனர்.

எடுத்துக்காட்டாக, மேனாட்டுக் கலைஞர் தம் கலைப் படைப்புக்களைத் திரைச் சட்டத்தில் அல்லது அட்டைச் சட்டத்தில் தீட்டுவர்; அதில் தம் பெயரைப் பெரும்பாலும் பொறிப்பர்; அவற்றில் தம் தம் தனித் திறங்களை வற்புறுத்திக் காட்டுவர். இதனால் கலைஞருக்குத் தக்கபடி கலையும் வேறு வேறு வகைப்பட்டதாய் அமைந்தது.

ஆயின், கீழ் நாட்டிலோ ஓவியங்கள் கல்லிலும் சுவரிலும் மட்டுமே தீட்டப்பட்டன. கலைஞன் பெயரோ, தனித்திறமோ வெளிப்பட வழியில்லை. பெரும்பாலும் கலை இலக்கணத்தின் கட்டுப்பாடு காரணமாக, கலைஞர் திறமை ஒன்று நீங்கலாக, வேறு எந்தப் பண்புவேறுபாட்டுக்கும் வழி இருப்பதில்லை. எனவே, மேனாடுகளில் ஒரே காலத்தில், ஒரே இடத்தில் உள்ள இரண்டு கலைஞர்களின் பண்புவேறுபாட்டைக்கூட, கீழ் நாட்டில் இரு

வேறு காலங்களில் இருவேறு இடங்களிலுள்ள இரு மரபுகளிடையே காண்பது அரிது.

### அருஞ்சொற்பொருள்

மாதரார் - மகளிர். இலகிய - விளங்கிய. தற்குறிப்பேற்ற அணி - இயல்பாக நிகழும் நிகழ்ச்சியின்மீது கவிஞன் தன் கருத்தை ஏற்றிக் கூறுதல். வனப்பு - அழகு. ஊடாடி - கலந்து பலமுறை பழகி. மரபு - வழிவழி முறை.

### பயிற்சி

I. விடை தருக :

1. பாவலர் பாரதியார் இரவிவர்மாவை எங்ஙனம் பாராட்டுகின்ருர்?
2. கலை வரலாற்றை எங்ஙனம் இரு கூறுகளாக வகுத்துக் காட்டலாம்?
3. தென்னுட்டு இலக்கியங்களின் சிறப்பு யாது?
4. இரவிவர்மாவின் கலைச் சிறப்பு யாது?
5. கலை மரபுகள் யாவை? விளக்கிக் கூறுக.
6. இரவிவர்மா மக்கள் கலைஞராக விளங்கினர் என்பது யாங்ஙனம்?
7. தென்னுட்டுக் கலைத்துறை வளர்ச்சிக்கு இரவிவர்மா எவ்வாறு உதவினர்?
8. இரவிவர்மா கீழ்நாட்டுக் கலைஞராகவும், தென்னுட்டுக் கலைஞராகவும் ஏன் போற்றக் கடவர்?

II. 1. இரவிவர்மாவின் ஓவியக் கலைச்சிறப்பினைப்பற்றி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

2. கீழ் வருவனவற்றைப் பிரித்துக் காட்டுக: மேனுடு, தென்னுடு, உலகக்கலை, கையாண்டனர், முன்னணி, பொதுப்பட, கலைத் துறை, கைக்கொண்டு, வரலாறு.

# 4. பழந்தமிழ் வேந்தர்

**டாக்டர் அ. சிதம்பரநாதன் அவர்கள்,**
**எம்.ஏ., பி.எச்.டி., எம்.எல்.சி.**

[இக்கட்டுரை யாசிரியர் பல ஆண்டுகள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர்; நாவன்மையும் பாவன்மையும் மிக்கார்; பல நல்ல ஆய்வு நூல்களை வெளியிட்டவர்; மேனுடு சென்று ஆங்குள்ள கல்வி முறையை அறிந்து வந்தவர். இவர் இப்போது மதுரைத் தியாகராசர் கல்லூரி முதல்வராகவும், சென்னைச் சட்டமன்ற உறுப்பினராகவும் பணியாற்றிவருபவர்.]

பழங்காலத் தமிழகத்தில் வாழ்ந்த அரசர்கள் செங்கோல் அரசர்களாக இருந்தார்கள் என்பதற்கும் செங்கோல் செலுத்துபவராக இருக்க விழைந்தார்கள் என்பதற்கும் உரிய சான்றுகள் பல கிடைக்கின்றன. சூளுரை கூறிய மன்னர் சிலர் தம் சூளுரை தவறினுல் தம்மைக் குடிமக்கள் கொடுங்கோல் வேந்தர் எனக் கூறி இகழ்வாராக என உரைத்துள்ளனர். பொதுவாக, 'சூளுரை தவறினுல் இன்னது ஆகுக' எனக் கூறுவதிலிருந்து ஒருவருடைய குறிக்கோளும், ஒருவரால் மேலானதாக மதிக்கப்படுவதும் அறியப்படும். உதயணன் கதையில் வரும் யூகி என்பவன் தன் சூளுரை தவறினுல் தனது தலைமுடியை அரிந்துவிடுவதாகக் கூறினுன். இது கொண்டு அவன் தலைமுடியின்மீது வைத்த பற்று அறியப்படும். அதைப்போலவே ஒருவர் இதனைச் செய்யாது போனுல் தமக்கு வேருெரு பெயரிட்டு அழைக்க எனக் கூறும் போது, அவர் தமது தாய் தந்தையர் இட்ட பெயரினிடத்து வைத்த அன்பு அறியப்படும். ஒருவர் மகன் மேல் ஆணையிடுகிறேன் என்ருல், அவர் தம் பெறற்கரும் மகனிடத்து வைத்த பேரன்பு அறியப்படும். எனவே, ஒருவன் 'சூளுரை தவறினுல் இன்னது ஆவேன்' எனக் கூறுவதிலிருந்து அவன் வாழ்க்கையில் விரும்புகின்றனவும், வெறுக்கின்றனவும் இன்ன என்பதை நாம் எளிதில் உணர்ந்துகொள்ளுதல் கூடும்.

**பூதப்பாண்டியன்** என்ற அரசன் கூறிய சூளுரை ஒன்றில், "என்னுடைய பகைவரை ஆரமரில் அலறுமாறு தாக்கித் தேரொடும் அவர்களைப் புறங்கொடுத்து ஓடு மாறு செய்யாது விட்டால், நியாயம் கெட்டு மெலிகோல் செய்தேன் ஆகுக," என உரைத்தான். இதிலிருந்து அவன் செங்கோல் வேந்தனாக இருக்க விரும்பினான் என்பதும், செங்கோலினின்று சிறிதுகூட நழுவ விருப்ப மில்லாதவனாய் இருந்தான் என்பதும் அறியப்படும். "கொடுங்கோலன் என்று இகழப்படுவேனாக," என்று கூறிக் கொடுங்கோலினிடத்துத் தனது வெறுப்பை மட்டும் அவன் காட்டினான் அல்லன்; செங்கோலினின்று சிறிதும் வழுவ விரும்பாத காரணத்தால் "மெலிகோல் செய்தவனாக இகழப்படுக" எனக் கூறினான். இதி லிருந்து அவனுடைய உயரிய குறிக்கோள் இனிது விளங்கும்.

அவ்வாறே, **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்** என்னும் பாண்டியன், "என் பகை யரசர்களைப் போரிற் சிதையுமாறு தாக்கி அவருடைய முரசுகளோடு ஒருங்கே அகப்படுத்திச் சிறை செய்யாது போயின், என் குடிமக்கள், 'எங்கள் அரசன் கொடி யன்' என என்னை இகழட்டும்," என்று வஞ்சினம் உரைத்தான் எனப் புறநானூற்றுப் பாடல் இன்னொன்றால் அறிகிறோம்.

"என்னிழல் வாழ்நர் செல்நிழல் காணாது
கொடியன்எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலேன் ஆகுக"

என்னும் அடிகளால், அவன் குடிமக்கள் கண்ணீர் வடித் துத் தன்னை இகழக்கூடாது எனக் கருதினான் என்பது புலப்படும். குடிமக்கள் அரசனுடைய கொடுங்கோலால் துன்பமடைந்து அதைப் பொறுக்க முடியாது அழுதால், அந்தக் கண்ணீரே அரசனுடைய செல்வத்தை அழித்து விடும் என்பது ஆன்றோர் கருத்து. இதனைத்தான் திருவள்ளுவர்,

" அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை"

எனக் கூறினர். எனவே, தான் கூறியதைச் செய்து முடிக்காது போயின், தன் குடிமக்கள் கண்ணீர் வடித்துத் தன்னைக் கொடியன் என்று கூறட்டும் எனப் பாண்டியன் சொல்லியதிலிருந்து, அவன் செங்கோலினனாக ஆட்சிசெய்து மேன்மேலும் தனது செல்வம் பெருக வேண்டும் என விரும்பினன் என்பது ஊகித்து அறிந்து கொள்ளப்படும்.

கவிஞர்கள் செங்கோல் மன்னரைப் பாராட்டியும், கொடுங்கோல் வேந்தரை இகழ்ந்தும் தத்தம் நூலின்கண் உரைத்தனர். சான்ருகப் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்ற கவிஞர், தாம் பாடிய கலிப்பாட்டு ஒன்றில், பாலைவன மணல் பகலவன் வெப்பத்தால் கடுகிக் காய்ந்து கிடப்பதற்கு உவமையாகக் கொடுங்கோல் மன்னனுடைய கொடுமையால் வாடிக் கிடந்த மக்களைக் குறிப்பிட்டார்.

" கொடிதோர்த்த மன்னவன் கோல்போல் ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினம் தெறுதலின் "

என்னும் பாலைக் கலி (செய்–8) அடிகளில் இதனைக் காணலாம்.

பட்டினப்பாலை பாடிய உருத்திரங் கண்ணனர் கரிகால் வளவனது கூரிய வேல்போன்று காடு கடுமையாக இருந்தது என்றும், அவனுடைய செங்கோல் போன்று அவன் தலைவியின் தோள்கள் தண்ணியனவாக இருந்தன என்றும் குறிப்பிட்டார்.

" திருமா வளவன் தெவ்வர்க் கோக்கிய
வேலினும் வெய்ய கானம் அவன்
கோலினும் தண்ணிய தடமென் தோளே."

என்பன அவ்வடிகள். எனவே, உவமைகளில் வைத்து ஆளும் வகையான் கவிஞர்கள் செங்கோலைச் சிறப்பித்தனர் என்பது பெறப்படும். மக்களும் 'கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டைவிடக் கடும்புலி வாழும் காடு' நல்லது என மதித்தனர். புலவர்கள் அரசரை நோக்கி, " குழந்தைகளைப் பாதுகாக்கும் தாய்மாரைப் போல நும்

குடிமக்களை நீவிர் பாதுகாக்க வேண்டும்,'' என வற்புறுத்தினர்; குடிமக்களைக் கசக்கிப் பிழிந்து வரிகளை வாங்குவதால் தீமையேயன்றி நன்மை விளையாது எனப் பகர்ந்தனர்.

சேரன் செங்குட்டுவன், 'மக்களை ஆட்சி செய்வதென்பது துன்பமேயன்றி இன்பம் எனக் கொள்ளுதற்கு இல்லை' எனக் கருதினன். 'மக்கள் யாதானும் ஒரு காரணத்தால் வருத்தமுறின் வேந்தன் வருந்த வேண்டும்; மழை பெய்வது குறைந்தால் அரசன் அஞ்ச வேண்டும். ஆதலால், உயிர்களைப் பாதுகாக்கும் கடமையையுடைய மேலான குடியிற் பிறத்தல் என்பது துன்பமே அல்லாமல் தொழத்தகும் தன்மையதன்று,' எனக் கருதினன். அதனல் அப்பெருமகன் ஒருநாள்,

'' மழைவளங் கரப்பின் வான்பேர் அச்சம்
பிழையுயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதக வில்''

எனச் சாத்தனுர் என்னும் புலவரிடம் கூறினன்.

மழைவளங் குறைந்தால் அரசனுடைய ஆட்சி தவறிற்று எனக் கூறுவது அக்காலத்து மரபு. அதனல் தான் வெள்ளைக்குடி நாகனுர் என்னும் புலவர் கிள்ளி வளவன் என்னும் சோழனைப் பற்றிப் பாடியதொரு பாட்டில், '' மழை பெய்ய வேண்டிய காலத்திற் பெய்யாது பொய்த்தாலும், நாட்டிலே விளையவேண்டிய பொருள்கள் விளையாது குறைந்தாலும், இவ்வுலக மக்கள் அரசாட்சியையே பழிப்பர்,'' என எடுத்துக்காட்டி, உழவர்களைப் பாதுகாக்க வேண்டும் கடமையை வற்புறுத்தினர். புறநானூற்றிற் காணப்படும் அப்பாட்டில் [செய் 35.]

'' மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம் ''

என வரும் அடிகள், சேரன் செங்குட்டுவன் கூறியவற்ருெடு ஒப்பு நோக்கிப் படிக்கத்தகுவன. எனவே,

செங்குட்டுவன் செங்கோலினனாக இருக்க வேண்டும் என்னும் பெருவிருப்புடையவன் என்பது அறிப்படும்.

இதனை வற்புறுத்துதற்கு உரிய பிறிதொரு சான்றும் உண்டு. தமிழினை இகழ்ந்த வடவரை வெற்றி கொண்டு அவர்தம் முடித்தலையில் கண்ணகி வடிவம் எழுதுதற்கு உரிய கல்லினைத் தான் கொண்டுவரத் தவறினால், தன் குடிமக்களை நடுங்கவைக்கும் கொடுங்கோலன் என மக்கள் தன்னை இகழ்க என அவன் வஞ்சினம் உரைத்தான் என்பதால் இது பெறப்படுகிறது. அவ்வேந்தன் தன்னுடைய ஆற்றலைத் தன் பகைவரிடம் காட்டி அவர்களை நடுங்க வைக்க விரும்பினானேயன்றித் தன் குடிமக்களை நடுங்கும்படி செய்யும் எண்ணம் சிறிதும் உடையனல்லன் என்பது அவனுடைய சொற்களினாலேயே பெறப்படுகிறது.

“ வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்
கடவுள் எழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வாள் ஆகின்
செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுங்காது பயங்கெழு வைப்பிற்
குடிநடுக் குறூஉம் கோலேன் ஆகுக”

என்னும் சிலப்பதிகார அடிகளால் (கால்கோட் காதை, அடிகள் 13–18) இது விளங்குகிறது.

இச்சான்றுகளால் பழந்தமிழ் வேந்தர்கள் செங்கோல் வேந்தராக இருக்க விழைந்தனர் என்பது நன்கு அறியப்படும்.

### அருஞ்சொற்பொருள்

விழைதல் – விரும்புதல். சூளுரை – வஞ்சினம். ஆரமர் – பொறுத்தற்கரிய போர். மெலிகோல் – கொடுங்கோல். செல்நிழல் – தாங்கள் சென்றடையும் நிழல். அல்லற்பட்டு – வருந்தி. ஆற்ருது – பொறுக்காது. ஊகித்து – உத்தேசித்து, கருதி. ஓர்த்த – சூழ்ந்த. தெறுதல் – சுடுதல். தெவ்வர் – பகைவர். கானம் – காடு. தண்ணிய – குளிர்ந்த. கடுகுபு–கடுகிக்காய்கின்ற. கதிர் – கிரணம். ஒக்கிய – அறுதியிட்டுவைத்த. கரப்பின் – குறைந்தால், மறைந்தால். அச்சம் – பயம். மன்பதை – மக்கட்கூட்டம். பிழையுயிர் – உயிர்கள் வருந்த. மாரி – மழை. வாரி – கடல். ஞாலம் – உலகம், உலகத்திலுள்ள உயர்ந்தோர். காவலர் – நாடு

காக்கும் வேந்தர். வாய்வாள் - பகைவரை வெட்டுவதில் தப்பாத வாள். பயங்கெழுவைப்பு - பயன்மிகுந்த நிலப்பகுதி.

## பயிற்சி

I. விடை தருக :

1. ஒருவர் தம் சூளுரையால் அறியப்படுவன யாவை ?
2. பூதப்பாண்டியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன்—இவர்கள் வஞ்சினத்தால் நாமறிவன யாவை ?
3. வேந்தரது செல்வத்தை அழிக்கும் படை யாது ?
4. செங்கோலின் சிறப்பும் கொடுங்கோலின் கொடுமையும் கவிஞர்களால் யாங்ஙனம் விளக்கப்பட்டுள்ளன ?
5. புலவர்கள் அரசர்களுக்குக் கூறிய அறிவுரை என்ன ?
6. சேரன் செங்குட்டுவன் நாட்டாட்சியைப் பற்றிக் கூறியவை யாவை ?
7. வெள்ளைக்குடி நாகனுர் கிள்ளிவளவனிடம் கூறிய மொழிகள் யாவை ?
8. செங்குட்டுவன் கூறிய வஞ்சின மொழிகள் யாவை ?

II. 1. ‘ தமிழ் வேந்தர் ஒழுக்கம் ’ என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை எழுதுக.

2. கீழ்வருவனவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறுக :

சூளுரை, குறிக்கோள், ஆன்றோர், மேன்மேலும், தண்ணியன, பாதுகாக்க, தொழுதகவு, பிறிதொரு, சான்று.

# 5. பலநாட்டுச் செய்திகள்—I

## யான் கண்ட இலங்கை

டாக்டர் திரு. மு. வரதராசனுர் அவர்கள்
எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.

[இக்கடித ஆசிரியர் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்; பல ஆராய்ச்சி நூல்களையும் பொதுமக்களுக்குரிய புதினங்கள் பலவற்றையும் எழுதிவருபவர்; சிறந்த பேச்சாளர்; உயர்ந்த எழுத்தாளர்.]

விவேகாநந்த சபை,
34, மேட்டுத் தெரு,
3—1—'50.

அன்புள்ள அரசு,

நலம். என் முந்திய கடிதம் சேர்ந்திருக்கும். செய்திகள் அறிந்திருப்பீர்கள்.

விமானப் பயணம் எவ்வளவு இன்பமாக இருந்ததோ இலங்கைக் காட்சியும் அவ்வளவு இன்பமாகவே இருந்து வருகிறது. இலங்கைத் தமிழரின் அன்பான உறவோ எல்லாவற்றினும் சிறந்ததாக இருந்துவருகிறது.

இலங்கைத் தமிழர்கள் நம்மைப் போலவே இருக்கின்ருர்கள். தமிழ்ச் சொற்களிலும் ஒலியிலும் மட்டுமே சிறிது வேறுபாடு இருக்கின்றது. சிறிது பழகிய பிறகு அவர்களுடைய பேச்சு எளிதில் விளங்கிவிடுகின்றது. நகரில் வாழும் செல்வக் குடும்பங்களில் ஏறக்குறைய எல்லாரும் நன்ருய்ப் படித்தவர்கள்; பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவர்கள். பலர் ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்கின்ருர்கள். தமிழனின் நாக்கிற்கு ஒரு தனி ஆற்றல் உண்டல்லவா? அஃது எந்த மொழியையும் எளிதில் கற்றுக்கொள்ளும். இங்குள்ள தமிழர்கள் சிங்கள மொழியை நன்ருகப் பேசுகின்ருர்கள். ஆனல் சிங்களவர்களுக்கு அவ்வளவு தமிழ் பேச வருவதில்லை. இலங்கை முகமதியர்களும் தமிழே தாய் மொழியாகக்

கொண்டவர்கள். சீருப்புராணமும், மஸ்தான் சாயபு வின் பாடல்களுமே இவர்களுக்கு வேதம். இவர்களில் பலருக்கு உருது மொழி தெரியாது; நெடுங்காலத்திற்கு முன்பே தமிழ்நாட்டை விட்டு இங்குக் குடியேறியவர்கள். ஆகையால், இங்கேயே நிலைத்துவிட்டுத் தமிழை வீட்டு மொழியாகக் கொண்டு வாணிகம் முதலியவை செய்து வாழ்கின்றார்கள். இவர்களே உணவுக் கடைகள் நிறைய வைத்திருக்கின்றார்கள். சிங்களவர் விரும்பி உண்ணும் இடங்கள் இந்த உணவுக் கடைகளே. இவர்களின் தொழுகைக்காகப் பள்ளிகள் கட்டப்பட்டுள்ளன.

கிறித்தவர்களும் பலர் இருக்கின்றார்கள். ஐரோப் பியர்களும் பலர் தங்கி வாழ்கின்றார்கள். தேயிலைத் தோட்டங்களும் இரப்பர்த் தோட்டங்களும் வைத்து முதலில் தமிழரின் வியர்வையையும் பிறகு சிங்களவரின் வியர்வையையும் பொன்னாக மாற்றிக்கொண்டு வாழ்வை வளமாக்கிக்கொண்டவர்களே இந்த ஐரோப்பியர்கள். இவர்கள் இன்னும் செல்வாக்குடன் தங்கிச் சீரும் சிறப்பு மாக வாழ்கின்றார்கள். ஆனால் ஓயாமல் உழைத்து நாட்டைச் சீர்படுத்திய தமிழர்க்குத்தான் இடர்ப்பாடு பெருகுகின்றது.

இந்த வேற்றுமையும் தொல்லையும் இனிமேல் மாறி விடும் என்று எதிர்பார்க்கலாம். இப்போதும் கிறித்தவத் தமிழர்களுக்கும் சைவத் தமிழர்களுக்கும் இலங்கையில் வேறுபாடு இல்லை. தமிழ் மொழி இவர்களை ஒன்றுபடுத் திக் காத்துவருகின்றது. பழக்க வழக்கங்களும் ஒரே வகையாக இருந்துவருகின்றன. பண்பாட்டிலும் ஒற் றுமை இருக்கின்றது. ஒரே குடும்பத்தில் ஒரு பக்கம் ஏசுநாதரின் பொன்மொழி கேட்கும்; மற்றொரு பக்கத் தில் மாணிக்கவாசகரின் மணிமொழி ஒலிக்கும். கண வனும் மனைவியுமே இவ்வாறு சமயத்தால் வேறுபட்டிருப் பது உண்டு. சமயம் உள்ளத்தின் கோட்பாடு என்பது இந்தக் குடும்பங்களைக் காணும்போது விளங்குகின்றது. சமயம் வாழ்க்கையைப் பிரிக்கவும் பிளவுபடுத்தவும் கருவியாகப் பயன்பட்டுவருவது எங்கும் உண்டு; என்

ரூலும், இத்தகைய குடும்பங்களில் இந்தக் குறை இல்லை. கிறித்தவர்களின் தொழுகைக்காக மிகப் பழைய கோவில்கள் கொழும்பு நகரில் உண்டு.

சிங்களவரிலும் கிறித்தவர்கள் உண்டு. ஆனால், பெரும்பாலோர் பௌத்தர்களே. மொட்டை அடித்து மஞ்சள் ஆடை சுற்றிக்கொண்டுள்ள பௌத்தத் துறவிகளை அங்குமிங்கும் காணல் முடிகிறது. அவர்கள் மக்களால் மதிக்கப்பட்டவர்களாகவே வாழ்கின்றூர்கள். சிங்களவர் பேரன்போடு புத்தர்கள் கோவிலுக்குச் சென்று புத்தர் பெருமானை வழிபடுகின்றூர்கள். வழிபாட்டுக்காக அவர்கள் எடுத்துச்செல்வது செந்தாமரைப் பூக்களே ஆகும். கொழும்புக்கு வடக்கே ஓடும் 'களனி கங்கை' என்னும் ஆறு சிங்களவர்க்குப் புனிதமான ஆருக விளங்கிவருகின்றது. அதன் கரையில் பழைய புத்தர் கோவில் ஒன்று இருக்கின்றது. அது பௌத்தர்களுக்குப் புண்ணியத்தலமாக இருந்துவருகின்றது. புத்தரே வந்து சென்ற இடம் என்று பௌத்தர்கள் அதை நம்புகின்றூர்கள்.

சிங்களவரில் ஆண்களின் உடைக்கும் பெண்களின் உடைக்கும் பெரிய வேறுபாடு தெரியவில்லை. இரு சாராரும் கோடுகள் இழைத்த வெவ்வேறு நிறமுள்ள லுங்கிகளை உடுக்கின்றூர்கள்; மேலுக்குச் சொக்காய் அணிகிறூர்கள். உடையில் உள்ள எளிமையே அணிகலன்களிலும் உள்ளது. காதில் அணியும் தோடு தவிரப் பெரும்பாலும் வேறு அணிகலன்கள் பெண்கள் அணிவதில்லை. மூக்குத்தி முதலிய பழங்கால நகை ஒன்றையும் அவர்களிடம் காணல் முடியாது. அங்கு வாழும் தமிழ்ப் பெண்கள் அணிகலன்களைப் பொறுத்தவரையில் இந்த நாகரிகத்தை மேற்கொண்டிருப்பது போற்றத்தக்கதே.

ஆனல், நம் நாட்டில் படித்த குடும்பங்கள் தவிர, மற்றக் குடும்பங்களில் இவ்வாறு அணிகலன்களைக் குறைப்பது காணேம். எவ்வளவு ஏழையாக இருந்தாலும் மட்டப் பொன்னுலாவது வெள்ளியாலாவது பல நகைகள் தேடி அணிந்துகொள்ளுகிறூர்கள். அள

வுக்கு மீறி அச்சம், நாணம் ஆகிய பண்புகளை வளர்த்துக்கொள்ள இந்த நகைகள் பயன்படும். முகத்தில் நுட்ப உணர்வு உடைய உறுப்புக்களில் இவ்வாறு பல சிறு அணிகலன்களை அணியாமல் விட்டுவிட்டால், பார்சி பெண்களைப்போலவும், ஐரோப்பியப் பெண்களைப்போலவும் தமிழ்ப் பெண்களுக்கும் அஞ்சாமை முதலிய முற்போக்குப் பண்புகள் வளரும். பெண்கள் முன்னேருத நாடு என்றென்றும் பிற்போக்கு நிலையில்தான் இருக்கும். தமிழ்நாட்டுப் பெண்கள் வீட்டில் பதுங்கும் பூச்சிகளாக மட்டும் இருந்தால், எதிர் காலத்தில் தமிழுக்கும் தமிழர்க்கும் நல்வாழ்வு இருக்காது. அவர்கள் நாட்டில் விளங்கும் மணிகளாகவும் திகழ வேண்டும். அதற்கு ஒரு வழியாக, இந்த நகைக்கோலம் குறையவேண்டும்.

இன்னெரு வியக்கத்தக்க வேறுபாடு உண்டு. இங்குள்ள தமிழ்ப் பெண்களும் தலையில் மலர் அணிவதை அன்ருட வழக்கமாகக் கொள்ளவில்லை. மலர் அணிந்த கூந்தலைக் காண்பது மிகமிக அருமை. தமிழ் நாட்டிலிருந்து குடியேறிய குடும்பங்களிலும் இந்தப் பழக்கம் எப்படி வந்தது என்பது தெரியவில்லை. வேண்டுமா, வேண்டாவா என்பது வேறு ஆராய்ச்சி. தமிழ்நாட்டிற்கே சிறப்பியல்பாக உள்ள இந்தப் பழக்கத்தை இப்போது வடநாட்டாரும் மற்றவர்களும் கற்றுவருகிருர்கள். ஆனல், தமிழர்களில் இலங்கைத் தமிழரிடையே இது காண்பதற்கு அரிதாக உள்ளது. இதற்கு ஒரு காரணம் கூறலாம். இலங்கையில் பலவகைப் பூஞ்செடிகளும் கொடிகளும் வைத்துப் போற்றுவது குறைவு. சென்னையில் பாய்க்கடை, பழக்கடைபோலப் பூக்கடை என்று பல கடைகள் அடங்கிய ஒரு பகுதியே நகரத்தின் நடுவே தேவையாக இருக்கின்றது. பெரிய தலைநகரமாகிய கொழும்பில் அந்தத் தேவையே காணேம். இன்று திருவாதிரை நாள் அல்லவா ? சிவன் கோவிலில் பூசைக்கு என்று மதுரையிலிருந்து விமானத்தில் நானூறு ரூபாய்க்குப் பூ தருவித்தார்களாம். இதற்கு அறுநூறு ரூபாய்

இறக்குமதி வரி விதிக்கப்பட்டதாம். ஆக, அவர்கள் இன்றைய கோவில் பூசைக்காகப் பூவுக்கு ஆயிரம் ரூபாய் செலவு செய்திருக்கிறார்கள்; இந்தத் துறையில் மட்டும் தமிழ் நாட்டை அப்படியே பின்பற்றுகின்றார்கள். கோவில் கட்டிய முறையே அப்படித்தானே! தமிழ் நாட்டிலிருந்து பலவகைத் தொழிலாளரையும் அழைத்துச் சென்றுதான் கோவில் கட்டினார்களாம்.

இலங்கைச் சைவர்கள் சமயத்துறையில் நம்பிக்கையும் ஒழுக்கமும் நிரம்பியவர்கள். நம் நாட்டில் நிகழாதவை அங்கே நிகழ்கின்றன. சமயக் கூட்டங்களுக்கு ஆண்களும் பெண்களும் நிறைய வருவார்களாம். இன்னும் சில நாட்களில் நாங்களும் பேசப் போகின்றோம் அல்லவா? அப்போது கூட்டத்தைக் காணப்போகின்றோம். இது மார்கழித் திங்கள். ஆகையால், காலையில் தேவார திருவாசக இன்னிசை கேட்கின்றதாம். வானொலியில் திருவெம்பாவை நாள்தோறும் பாடப்படுகின்றதாம். மருத்துவ மனைகளில் உள்ள நோயாளிகளும் அந்த வானொலிப் பாட்டைக் கேட்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதாம். இது கேட்கவும் வியப்பாக இல்லையா!

அன்புள்ள,

வ.

**அருஞ்சொற்பொருள்**

தொழுகை - வணக்கம். இடர்ப்பாடு - துன்பம். கோட்பாடு - கொள்கை. கோலம் - அழகு.

**பயிற்சி**

I. விடை கூறுக:

1. நீ இலங்கைத் தமிழர்களைப் பற்றி அறிவது யாது?
2. முகமதியர்கள் எத்திறத்தினர்?
3. கிறித்தவர்கள் எத்தகையினர்?
4. சிங்களவரின் இயல்புகள் யாவை?
5. இலங்கைச் சைவர்கள் எத்தன்மையர்?

II. 1. கீழ்வரும் சொற்களைச் சேர்த்துக் கூறுக:
தமிழ்+சொற்கள், விமானம்+பயணம், நன்றாய்+படி, உணவு+கடைகள், தொழுகைக்காக+பள்ளிகள்.

2. நீ படித்த ஒரு பிரயாண நூல் குறிப்பிடும் நாட்டு மக்களைப் பற்றி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 6. பலநாட்டுச் செய்திகள்–II

## ஆஸ்திரேலியாவில் கல்விநிலை

திரு. சு. இராமசாமி நாயடு அவர்கள்

[இவர், சென்னை 'மேயர்' பதவியும் 'ஷெரீப்' பதவியும் தாங்கிப் பணியாற்றியவர்; சப்பான், ஆஸ்திரேலியா முதலிய கீழை நாடுகளுக்குச் சென்று வந்தவர்; நல்ல பேச்சாளர்; சிறந்த எழுத்தாளர்.]

### தொடக்கப் பள்ளிகள்

ஆஸ்திரேலியாவில் நடைபெறும் கல்விமுறை நம்மவர் கருத்தூன்றிப் படித்து உணரத்தகுவது. அங்கு ஒவ்வொரு குடிமகனும் பதினன்கு ஆண்டுவரை இலவசக் கட்டாயக் கல்வி கற்க வசதி இருக்கின்றது. அங்கு நடைபெறும் தொடக்கப்பள்ளிகள், பிள்ளைகள் விரும்பும் இன்பப் பூங்காக்களாக இலங்குகின்றன. பள்ளியில் பிள்ளைகளுக்கு முற்பகலில் பாலும், இடைவேளையில் உணவும் அரசாங்கம் உதவுகின்றது. அங்கு நான்கு விதத் தொடக்கப் பள்ளிகள் பணியாற்றுகின்றன. அவற்றுள் அரசாங்கப் பள்ளிகள் என்பன ஒருவகை. அவை அரசியலாரால் நடத்தப்படுகின்றன. பிள்ளைகளை உயர்நிலைப் பள்ளிக்குரிய மாணவராகச் செய்வது அவற்றின் வேலையாகும். அப்பள்ளிகளுள் ஒவ்வொன்றும் அஃது அமையப்பெற்ற ஊரிலுள்ள பெற்ருேர் - குடிமக்கள் சங்கத்தின் மேற்பார்வையில் இருந்துவருகின்றது. ஏறத்தாழ எண்பது பிள்ளைகள் உள்ள ஒவ்வோர் ஊரிலும் அப்பள்ளி அமைந்துள்ளது.

### அரசாங்க உதவி பெறும் பள்ளிகள்

அப்பள்ளிகள் பிள்ளைகளின் பெற்ருேர் ஒத்துழைப்பால் அமைந்தவை. அத்தகைய ஒரு பள்ளியின் மாதச் செலவின் ஒரு பகுதியை அரசியலார் ஏற்கின்றனர்; எஞ்சிய பகுதியை ஊரார் ஏற்றுக்கொள்கின்றனர். அப்பள்ளி ஆசிரியரது சம்பளம் குறைவானது. அதனல்

அவருக்கு ஊரார் இலவச உணவு அளிக்கின்றனர். இக் கூட்டுறவால் பிள்ளைகளின் பெற்ருேரும் ஆசிரியரும் நெருங்கிப் பழகுகின்றனர். நிலமுடையவரும் பண முடையவரும் அவ்வாசிரியர்க்குப் பல வழிகளில் உதவு கின்றனர்.

### அஞ்சல்முறைப் பள்ளிகள்

ஆஸ்திரேலியாவில் பண்ணைகள் மிகுதியாக இருக் கின்றன. அவை ஒன்றுக்கொன்று பல கிலோ மீட்டர் தொலைவில் உள்ளன. அதனுல் அப்பண்ணைகளில் வாழும் பிள்ளைகள் ஓரிடத்தில் சென்று சேருவதில்லை. எனவே, ஒவ்வொரு பண்ணையிலுமுள்ள பிள்ளைகளுக்கும் தனிப்பட்ட முறையில் கல்வி கற்பிக்க வேண்டும். ஆயின், ஒவ்வொரு பண்ணையிலும் பள்ளி வைக்கத் தக்க அளவில் பிள்ளைகள் இல்லை. ஆஸ்திரேலிய அரசாங்கக் கல்வித் துறையினர் இப்பண்ணைப் பிள்ளைகளுக்கு அஞ்சல் வாயிலாகக் கல்வி கற்பிக்கின்றனர். ஒவ்வொரு பண்ணையிலும் ஒரு பள்ளிக்கூடக் கட்டடம் அமைந்திருக் கிறது. அப்பண்ணையில் உள்ள பிள்ளைகள் அங்குக் கூடுவர். அப்பிள்ளைகள் ஓர் ஆசிரியரின் மேற்பார்வை யில் கல்வி கற்பர். கடிதங்கள், ஒலிப்பதிவுத் தட்டுக்கள், படங்கள், திரைப்படங்கள், வானெலி ஆகிய இவற்றின் வாயிலாகப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. இவர் களுக்குத் தேர்வுகளும் விடுமுறை நாட்களும் உண்டு.

### கைத்தொழில் பள்ளிகள்

பன்னிரண்டு வயது முதல் பதினைந்து வயது வரை யுள்ள மாணவர் கைத்தொழில் பள்ளிகளில் கல்வி கற்கின்றனர். கோழி வளர்த்தல், தோல் பதனிடுதல், தச்சுத் தொழில், கொல்லத் தொழில், தாவரங்களைப் பயிரிடுதல், சாலைகளை அமைத்தல், அணைகட்டுதல் முதலிய பலவகைத் தொழில்கள் இங்குக் கற்பிக்கப் படுகின்றன. இங்குக் கல்வி கற்கும் மாணவர்க்குப் பகலுணவும் போக்கு வரவு வசதிகளும் பள்ளிச் செலவில்

ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இப்பள்ளி ஆசிரியர் களும் மாணவர்களும் வீடுகள் கட்டுவதிலும் பயிற்சி பெற்றுள்ளனர்.

## உயர்நிலைப்பள்ளிகள்

இப்பள்ளிகள் இரண்டு வகைப்படும்: ஒன்று, மாணவரைக் கல்லூரிப் படிப்பிற்குத் தகுதி உடைய வராகச் செய்வது; மற்றொன்று, அவர்களைத் தொழில் துறைகளில் தகுதியுடையவராகச் செய்வது. குடும்ப வாழ்க்கைக்கு உரிய பாடங்கள், பெண்களுக்குச் சிறப் பாகக் கற்பிக்கப்படுகின்றன. ஆங்கிலம், கணிதம், இசை, வரலாறு, மொழி, வாணிகம் முதலிய பாடங்கள் அனைவருக்கும் பொதுவானவை.

தொழிற் பயிற்சி பெறும் மாணவருக்கு ஒவ்வொரு தொழிலைக் கற்பிக்க, அவ்வத்துறையில் வல்ல தொழி லாளர் பக்கத்துத் தொழிற்சாலையிலிருந்து வருவர். இங்ஙனம் குறித்த நேரத்தில் அவர்கள் வரவேண்டும் என்பதும், அந்த நேரம் அவர்கள் தொழில் செய்யும் நேர மாகக் கருதப்படல் வேண்டுமென்பதும் அரசாங்கத்தின் கட்டளையாகும். தலைமையாசிரியருக்குப் பள்ளி எல்லைக் குள்ளேயே வீடு கொடுக்கப்படுகிறது. மாணவர் விடுதிகள் மிகச் சிறந்த முறையில் நடைபெறுகின்றன.

## கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும்

ஆஸ்திரேலியாவில் இருபத்தைந்து கல்லூரிகள் இருக்கின்றன; ஆறு பல்கலைக் கழகங்கள் பணியாற்று கின்றன. ஒவ்வொரு கல்லூரிக்கும் நூறு ஏக்கர் பரப் புள்ள பூங்காவும் விளையாடுமிடமும் அமைந்திருக் கின்றன. ஒவ்வொரு கல்லூரிக்கும் தேர்வு நடத்திப் பட்டம் கொடுக்கும் உரிமை உண்டு. மாணவர்க்கு இட மில்லை என்று எந்தக் கல்லூரியும் சொல்லலாகாது என்பது அரசாங்க ஆணையாகும்.

பல்கலைக் கழகங்களும் கல்வி கற்பிக்கும் நிலையங் களாக இருக்கின்றன. அவை தேர்வு நடத்திப் பட்டம்

வழங்குகின்றன. கிராமப் பல்கலைக் கழகங்களில் பணியாற்றும் ஆசிரியர், நகரப் பல்கலைக் கழகங்களில் பணியாற்றும் ஆசிரியரைவிட மிகுந்த ஊதியம் பெறுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வூதிய மிகுதியால் ஆசிரியர் பலர் கிராம வாழ்க்கையையே விரும்பிச் செல்கின்றனர். எனவே, கிராமப் பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் ஆசிரியர் பஞ்சம் ஏற்படுவதில்லை.

நான் சிட்னியிலுள்ள பல்கலைக் கழகத்தைக் காணச் சென்றேன். அங்கு மருத்துவக் கல்வி சிறந்த முறையில் கற்பிக்கப்படுகின்றது. அங்கு இந்திய மாணவர் மருத்துவக் கல்வி கற்கின்றனர். அவர்கள் என்னைக் கண்டதும் தாயைக் கண்ட சேய்கள் போல என்னை நோக்கி மலர்ந்த முகத்துடன் ஓடிவந்து, நமது தாய் நாட்டைப்பற்றி விசாரித்தனர். இந்தியர் பலர் ஆஸ்திரேலியப் பல்கலைக் கழகங்களில் கல்வி கற்க ஆஸ்திரேலிய அரசியலார் சில ஏற்பாடுகளைச் செய்துள்ளனர் என்று சிட்னிப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் என்னிடம் தெரிவித்தார்.

ஆஸ்திரேலியாவின் தலைநகரான கான்பராவில் தேசியப் பல்கலைக் கழகம் ஒன்று இருக்கின்றது. இஃது ஆஸ்திரேலியாவின் பண்பாட்டை வளர்க்கவும், பட்டம் பெற்றவர் ஆராய்ச்சியில் ஈடுபடவும் துணை செய்கின்றது. கான்பராவில் உள்ள மக்கள் தொகை ஏறத்தாழப் பதினேழாயிரம் ஆகும். இங்ஙனம் இருந்தும், அங்கு ஒரு பல்கலைக் கழகம் ஏற்பட்டிருத்தல், அம்மக்கள் கல்வியில் கொண்ட ஆர்வத்தினை நன்கு உணர்த்துவதாகும் அன்றோ ?

### கல்வி நிலை

ஆஸ்திரேலியாவில் இன்று ஏறத்தாழப் பதினைந்தாயிரம் தொடக்கநிலைப் பள்ளிகள் உள்ளன. அரைநாட் பள்ளிகள், பயணப் பள்ளிகள் (ஒரே ஆசிரியர் பல ஊர்களுக்கும் சென்று பள்ளிகள் வைத்துப் பாடம்

கற்பித்தல்) என்னும் பலவகைப் பள்ளிகள் ஆஸ்திரேலியாவில் கல்விப்பணி ஆற்றுகின்றன. பெரிய நூல் நிலையங்கள் கல்வியைப் பரப்பிவருகின்றன. உயர்நிலைப் பள்ளிகள் மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுள்ளன. ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளும் ஏற்படுத்தப் பெற்றுள்ளன. எளிய மாணவர்க்கு அரசாங்கம் பொருளுதவி செய்துவருகிறது. சிறந்த முறையில் அமைந்த பொருட்காட்சிச் சாலைகள், நூல்நிலையங்கள், நுண்கலைக் காட்சிகள் முதலியவை பெரிய நகரங்களில் அமைந்துள்ளன. கல்விக்காக ஆஸ்திரேலிய அரசாங்கம் ஆண்டுதோறும் ஏறக்குறைய ஒரு கோடியே இருபது நூறுயிரம் பவுன் செலவு செய்கின்றது என்பது குறிப்பிடத் தகும். பள்ளி மாணவர்களுக்கு உணவு வசதிகளும் சுகாதார வசதிகளும் இலவசமாக அளிக்கப் படுகின்றன.

### ஆஸ்திரேலிய மொழிகள்

ஆஸ்திரேலியா முழுமையிலுமுள்ள பழங்குடிகள் பல திறப்பட்டவர்; ஆதலின் அவர்கள் பேசும் மொழிகளும் பலதிறப்பட்டனவாக உள்ளன. அவற்றை வடபகுதி மொழிகள் என்றும், தென்பகுதி மொழிகள் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கலாம். இவ்விருவகை மொழிகளும் ஏறத்தாழ முப்பதுக்கு மேற்பட்டுள்ளன. இவற்றுள் சில, பழங்குடிகளுள் கறுப்பு நிறத்தவர் பேசுவனவாகும்; வேறு சில, செந்நிறத்தவர் பேசுவனவாகும்; சில, பழுப்பு நிறத்தவர் பேசுவன. இப்பழங்குடி மக்களின் மொழிகளை ஆஸ்திரேலியரும், ஆஸ்திரேலியாவுக்குச் சென்ற பாதிரிமாரும் நன்கு ஆராய்ந்து நூல்களை எழுதியுள்ளனர்.

### இலக்கியம்

ஆங்கிலேயர் குடியேற்றத்திற்கு முற்பட்ட கால இலக்கியம் ஆஸ்திரேலியாவில் இல்லை. ஆங்கிலேயர் குடியேறிய பிறகும், அவர்கள் நகரங்களை அமைத்து

வளமுற வாழத் தொடங்கியதற்குப் பின்னருமே இலக்கியம் தோற்றமெடுத்தது. புதிய கண்டம் காணும் வேட்கையில் மக்கள் மூனைந்திருந்ததாலும், பழங்குடிகளைப் பற்றிய விவரங்களை அறியவேண்டும் தேவை ஏற்பட்டதாலும், ஆஸ்திரேலியாவின் இயற்கை அமைப்பையும், பழங்குடிகளின் வரலாறுகளையும் மொழிகளையும் பற்றிய நூல்களே ஆஸ்திரேலியாவில் முதலில் வெளியிடப்பட்டன.

### அருஞ்சொற்பொருள்

இடைவேளை உணவு - மதிய உணவு. எஞ்சிய - மீதியுள்ள. பல்கலைக் கழகம் - பல கலைகளைக் கற்பிற்கும் பெரிய கல்வி நிலையம்.

### பயிற்சி

I. விடை கூறுக :

1. ஆஸ்திரேலியாவில் தொடக்கப் பள்ளிகள் எவ்வாறு நடைபெறுகின்றன ?
2. ஆஸ்திரேலியாவில் அஞ்சல் முறைப் பள்ளிகள் எப்படி நடைபெறுகின்றன ?
3. ஆஸ்திரேலியாவில் கைத்தொழிற் பள்ளிகள் எங்ஙனம் நடைபெறுகின்றன ?
4. ஆஸ்திரேலியாவில் கல்லூரிகள் எவ்வாறு அமைந்திருக்கின்றன ?
5. பல்கலைக் கழகங்கள் எவ்வாறு பணியாற்றுகின்றன ?
6. ஆஸ்திரேலியாவில் கல்வி வளர அரசாங்கம் செய்துள்ள ஏற்பாடுகள் யாவை ?

II. 1. 'ஆஸ்திரேலியாவில் கல்வி நிலை' என்னும் தலைப்பில் இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

2. கீழ்வருவனவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் கூறுக : இலவசம், ஒன்றுக்கொன்று, ஏற்பாடு, உரிய, உரிமை, ஏறக்குறைய, வேட்கை.

# 7. சோறு அளித்த சேரன்

## (உரையாடல்)

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள், எம்.ஏ.

[இக்கட்டுரை ஆசிரியர் 'கலைமகள்' என்ற திங்கள் இதழின் ஆசிரியர்; தமிழகத்திலும் கடல் கடந்த நாடுகளிலும் கன்னித் தமிழைப் பரப்பிவருபவர்; பல இலக்கிய ஏடுகளை எழுதிக் குவித்திருப்பவர்; பேச்சாற்றல் பெரிதும் உடையவர்.]

"எங்கிருந்து வருகிறீர்கள்"?

"தமிழ் நாட்டிலிருந்து"

"அப்படியா? மகாபாரதப் போரில் பாண்டவர் படைக்கும் கௌரவர் படைக்கும் குறைவில்லாமல் உணவு கொடுத்த தமிழ் நாட்டிலிருந்தா?"

"ஆம்."

"உங்கள் அரசன் மகா தாதாவாக இருக்கிருனே!"

"அவன் பரம்பரையே அப்படித்தான்."

"உதியஞ் சேரலாதன் என்ற பெயரை நாங்கள் அறிவோம். ஆனால் அவன் இயல்பு ஒன்றும் எங்களுக்குத் தெரியாது."

"அவன் எல்லாக் குணங்களிலும் சிறந்தவன்."

இவ்வாறு பேசிக்கொள்பவர்களில் ஒருவர் தமிழ் நாட்டார்; மற்றொருவர் வடநாட்டார். தமிழ் நாட்டில் உள்ள முரஞ்சியூர் என்ற ஊரிலே பிறந்த நாகராயர் என்ற புலவர் வடநாட்டுப் பயணம் செய்யலானர். புலவர்களிலே சிறந்தவர்களுக்கு அரசர்கள் முடியணியும் சிறப்பையும் வழங்குவார்கள். அந்தச் சிறப்பைப் பெற்றவர் நாகராயர். ஆதலின் அவரை 'முரஞ்சியூர் முடிநாகராயர்' என்று தமிழ் நாட்டார் வழங்குவர்.

பாரதப் போர் நடந்து முடிந்த காலம் அது. அந்தப் பெரும்போரில் குருக்ஷேத்திரத்தில் எல்லா நாட்டு மக்களும் இரு கட்சிகளாகச் சேர்ந்து போரிட்டனர்.

போர் நிகழ்ச்சியினல் வேளாண்மை முதலிய முயற்சிகள் சுருங்கின. பதினெட்டு நாள் போராடி

ணும் அதற்கு முன்பே பல ஏற்பாடுகள் நடந்தமையால் இந்த நிலை வந்துவிட்டது. போர் அறப்போராகச் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடைபெற்றது.

பாரதப் போரில் ஈடுபட்ட வீரர்களுக்கு உணவு போதாது என்ற செய்தி தமிழ்நாட்டு மன்னன் காதுக்கு எட்டியது. தமிழ் வீரர்களில் சிலரும் பாரதப் போரில் ஈடுபட்டிருந்தனர். அக்காலத்தில் தமிழ் நாட்டின் பெரும்பகுதியை உதியஞ் சேரலாதன் என்ற சேர மன்னன் ஆண்டுவந்தான். தமிழ்நாடு, நெல்லும் கரும்பும் விளையும் நாடு. பாரதப் போர் வீரர்களுக்கு அரிசி அனுப்பும் காரியத்தைச் சேரமன்னன் மேற் கொண்டான்; ஒரு கட்சியினருக்குத்தான் உணவு தருவேன் என்று சொல்லவில்லை. அறப்போரில் அறநெறியுடையார் வெல்வர் என்ற உறுதி அனைவர்க்கும் இருந்தது. பசித்தவன் யாராக இருந்தாலும், பகைவனாக இருந்தாலும், அவன் பசியைப் போக்குவது அறமென்பது சான்றோர் கொள்கை.

சேரலாதன் இத்தகைய உள்ளம் படைத்தவன்; இருவகைப் படைகளுக்கும் போதிய உணவு அளிப்பதே தன் கடமை என்று உணர்ந்து, போர் முடியும் வரையில் அப்படியே செய்துவந்தான். இந்தப் பெருஞ் செயல் காரணமாக அவன் புகழ் பாரத நாடு முழுதும் பரவியது. 'பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன்' என்று அவனை யாவரும் வழங்கலாயினர். முரஞ்சியூர் முடிநாகராயர் வடநாட்டுப் பயணத்தில் வடநாட்டுப் பெருமையை உணர்ந்ததோடு, அங்குள்ளார் தமிழ் மன்னன் வண்மையைப் போற்றக்கேட்டு, அம்மன்னன் பெருமையையும் நன்கு உணர்ந்தனர்.

வடநாட்டில் அவரிடம் சேரனைப் பற்றிய செய்திகளை ஆவலோடு பலரும் கேட்கலாயினர்.

"உங்கள் நாட்டில் போரே இல்லையா?"

"இல்லை. பகைவரே இல்லை. அதனால் போரும் இல்லை".

"அஃது எவ்வாறு சாத்தியம் ஆகும்!"

"எங்கள் அரசனுடைய இயல்புகள் பகையில்லாமற் செய்துவிடுகின்றன. ஒரு வேளை, சிறுபகை எங்கேனும் இருந்தால், அவர்களை அடக்கும் படைவன்மை எங்கள் அரசனுக்கு உண்டு".

"பகைவர் இல்லாமல் ஒரு நாடு இருக்க முடியுமோ?"

"பகைமை கொண்டு எவரேனும் தவறு செய்தால், சிறு தவறு காரணமாகப் பெரிய போரைத் தொடங்குவது எங்கள் மன்னன் வழக்கம் அன்று. அவன் அப்பகைவரைப் பொறுத்தருள்வான்; போற்றுரைப் பொறுக்கும் திறத்தில் பூமிக்கு இணையானவன்".

"அவன் பொறுமையுடையவனாக இருக்கலாம். ஆனால் பகைவர் செய்யும் தீங்கு மிகுதியாகிவிட்டால், அரசனாக இருப்பவன் சும்மா இருக்கலாமா?"

"அளவுக்கு மிஞ்சிப்போனால் உடனே போரைத் தொடங்கமாட்டான்; ஒன்றும் செய்யாமல் வாளாவிருக்கவும் மாட்டான்; 'எப்படிப் போர் நடத்தலாம்? பகைவரை அடக்குவது ஒன்றுதான் நம் இலக்கு. அதற்கு ஏற்ற தந்திரங்கள் எவை? நாட்டுக்கு அதிக ஊறுபாடு நிகழாமல் நேரிட வழி என்ன?' என்றெல்லாம் அமைச்சர்களுடன் விரிவாக ஆராய்வான்."

"செயலில் முனையாமல் ஆராய்ந்து சூழ்ந்து என்ன பயன்?"

"பலமற்றவர் செய்யும் ஆராய்ச்சி அன்று இது. பலமுடையவன், நாடு வாழவேண்டும் என்னும் நோக்கத்தோடு தீர ஆராயும் சூழ்ச்சி இது. அவன் தனி மனிதன் என்ற நிலையில் உறுதி குலையாத மனத்திண்மை படைத்தவன்; அரசனென்ற வகையில் வீரமும் வலிமையும் உடைய படைகளைப் பெற்றவன். சூறுவளிக் காற்றைப் போன்ற வலிமை அது. அதன் முன் எந்தப் படையும் நில்லாது."

"இவ்வளவு பலமுடையவன் காலத்தைப் போக்கிக் கொண்டே இருப்பானா?"

"அதுதான் இல்லை. பகைவர்களின் குறும்பு

தனக்குத் தெரியும் என்பதைக் காட்டிப் பொறுமையை மேற்கொள்ளும்போது, பலர் தம் பகைமையை விட்டொழிப்பர். போருக்கு வேண்டும் சிந்தனை செய்கிறான் என்ற அளவில் பகைவர் பலர் ஒடுங்குவர். பின்னும் முனைபவர்கள் படைவன்மையைக் கண்டு பேதுறுவர். அதுவும் செய்யாது போருக்கு எழுபவரை அழிப்பதில் தீயைப் போன்றவன் மன்னன்; எத்தகைய படையாக இருந்தாலும் பொடியாக்கிவிடுவான்.''

''எல்லோரையும் போலப் பகையை அடக்கும் அரசன்தானே அவன்?''

''அல்லன், அல்லன். போர் மூண்ட பின்னரும் தம் பிழையை உணர்ந்து வழிபடும் பகைவர்களை, நீரைப் போலக் குளிர்ந்த உள்ளத்தோடே ஏற்றுக்கொண்டு நன்மை செய்யும் உத்தமன் அவன்.''

''ஆ! எங்கும் கேளாத பெருமையாக அல்லவா இருக்கிறது! உலகமெல்லாம் ஐந்துவகைப் பூதத்தின் சேர்க்கை என்று சொல்கிறார்கள். உலகத்தைக் காக்க வந்த உங்கள் அரசனும் ஐம்பூதங்களின் இயற்கையை உடையவனாக இருக்கிறான்.

''நிலத்தைப் போன்ற பொறையும், விசும்பைப் போன்ற சூழ்ச்சியும், வளியைப் போன்ற வலியும், தீயைப் போன்ற தெறலும், நீரைப் போன்ற அளியும் அவன்பால் இருக்கின்றன என்பது தெரிகிறது. அவன் நாட்டின் விரிவு எப்படி?''

''அவனது அன்பு நிறைந்த ஆட்சியில் கதிரவன் மகிழ்கிறான்; அவனுக்குரிய கீழ்க்கடலிலே தோன்றி அவனுக்குரிய மேற்கடலில் மறைகிறான்.''

''இரு கடலுக்கும் இடைப்பட்ட நாடென்று சொல்கிறீர்கள். அவன் நாட்டு வளப்பம் எங்களுக்குத் தெரிந்ததே. அவன் புகழை வடநாட்டார் அறிந்தது கிடக்கட்டும். போரில் மாய்ந்து வீரசுவர்க்கம் புக்கவர்கள் வானத்தில் அவன் புகழைச் சொல்லிக்கொண்டிருப்பார்கள். அவன் நாட்டுக்குக் கடல் வரம்பானாலும் அவன் புகழுக்கு வானந்தான் வரம்பு ஆம். 'வான

வரம்பன்'தான் உங்கள் மன்னன். பஞ்சபாண்டவர் களோடு நூற்றுவராகிய துரியோதனுதியர் போட்ட சண்டையில் அந்த நூற்றுவரும் அழிந்தொழிந்தார்கள். அதர்மம் தோற்றது. அவர்கள் அழியும் வரைக்கும் இரு படைக்கும் கணக்கேயில்லாமல் சோறு வழங்கினுன் உங்கள் அரசன். அவன் நீடூழி வாழவேண்டும். பசுவின் பால் கறக்கும்போதே புளித்துப் போனுலும், கதிரவனுக் குள் இருட்டுப் புகுந்தாலும், வேதங்களின் நெறி பிறழ்ந்து போனுலும், தனக்கு உதவியாக நிற்கும் மாரு மனம்படைத்த அமைச்சர்களோடே நடுக்கமில்லாமல் வாழ்வானுக ! எங்கள் பனிமலே போல் வாழ்வானுக !''

இந்த வாழ்த்துப் புலவர் காதிலே குளிர்ச்சியாக விழுந்தது.

''பனிமலேபோல நடுக்கமின்றி உங்கள் அரசன் வாழ்க'' என்று அந்தப் பெரியவர் சொன்னுரல்லவா ? அதைக் கேட்டவுடன் புலவருக்கு இமயமலே நினேவு வந்தது. அந்த மாபெரும் மலேக்குச் செல்ல அவர் எழுந்து புறப்பட்டார் ; போனுர் ; கண்டார்.

இமயமலேயின் உன்னதத்தைக் கண்ணுல் அளக்க முடியுமா ? பாரத நாட்டின் வட பேரெல்லேயாக வானே நோக்கி நிமிர்ந்து நிற்கும் அந்த மலேச் சாரலிலே புலவர் புகுந்து பார்த்தார் ; பல முனிவர்களின் ஆசிரமங்களே அடைந்து அவர்களே வணங்கினுர்.

ஆசிரமங்களில் இயற்கை எழில் தவழ்ந்தது. தவம் மலிந்திருந்தது. எல்லாம் அன்பு மயம். முனிவர் எரியோம்பும் வாழ்க்கையுடையவர். அந்த ஓமகுண்டத் தைச் சுற்றி இரவுக் காலத்தில் மடமான்கள் தங்கள் குட்டிகளோடு அச்சமின்றித் தூங்கின. அந்த முத்தீயாகிய விளக்குக்கு முன்னே, புலி முதலிய விலங் கினங்கள் வாரா என்ற தைரியத்தொடு தம்மை மறந்து அவை துயில் புரிந்தன. இந்தக் காட்சி முடிநாகராய ருடைய உள்ளத்தைக் கொள்ளே கொண்டது.

காலேயில் கதிரவனது செங்கதிர் இமயத்தின் மேலே வீசியது. வானளாவிய அதன் கொடுமுடி பொன்னேப்

போலப் பளபளத்தது. அதைப் பார்த்து வியந்து கொண்டு நின்ருர் புலவர்; 'பொற்குவையே மேல் முகடாக அங்கே பொருந்தி நிற்கிறதோ?' என்று ஐயுற்று நின்ருர். ஒரு முனிவர், அதற்குக் 'காஞ்சன சிருங்கம் என்பது பெயர்' என்ருர். புலவர், 'பொற்கோட்டு இமயம்' என்று அப்பெருமலையைப் போற்றினர். "ஆம்; நம் மன்னன் இந்தப் பனிமலை போன்ற உயர்வுடையவன்; பரந்த உள்ளமுடையவன்; குளிர்ந்த உள்ளமுடையவன். அவன் இதைப்போல நடுக்கின்றி வாழ்வாளுக!" என்று மனத்துள் வாழ்த்தினர்.

பனிமலையின் முன்பு அவருக்குத் தமிழ்நாட்டு நினைவு தோன்றியது. உருவத்தால் சிறியவராயினும் வன்மையில் பெரிய அகத்தியர், உருவத்தால் சிறிய தாயினும் புகழில் பெரிய பொதிகையில் இருக்கை கொண்டார். இமயமும் பொதியிலும் பெருமையால் ஒத்தனவே. அவை பாரத நாட்டின் கலைத்திறத்தையும் தவச்சிறப்பையும் காக்கும் தம்பம்போல் இருக்கின்றன. அவை இரண்டும் நடுக்கம் இல்லாதவை. புலவர், "சேரன் பனிமலையைப் போல வாழவேண்டும்; பொதி யிலைப் போலவும் தமிழைப் பாதுகாத்து நடுக்கின்றி வாழ்வாளுக!" என்று மனத்துள் வாழ்த்தினர்.

தமிழ்ப் புலவர் உள்ளம் இமயத்தையும் பொதியிலை யும் இணைத்துப் பார்த்து மகிழ்ந்தது; இரண்டும் ஒரே சால்புக்கு எல்லையாக நிற்பதை உணர்ந்தது. பாரத நாட்டின் சிறப்பையே அளந்து கண்டவர் போன்ற பெருமிதம் அவருக்கு உண்டாயிற்று.

முரஞ்சியூர் முடிநாகராயர் தமிழ் நாட்டுக்கு மீண்டும் வந்தார். உதியஞ் சேரலாதனைப் பார்த்துவிட்டுத்தான் மறுகாரியம் செய்வதென்ற வேகம் அவருக்கு இருந்தது. அவர் மன்னனை அணுகினர்.

"புலவரே, வடநாட்டுப் பயணம் நலமாக இருந் ததா? என்ன என்ன அதிசயம் கண்டீர்கள்?" என்று சேரன் கேட்டான்.

"எங்கும் சேரலாதன் பெருமையைத்தான் கேட்

டேன். நீ வாழ்க!'' என்று உணர்ச்சி மிகுதியால் பேசினார் புலவர். அவர் உள்ளக் கருத்துக் கீழ்வரும் பாட்டாக வெளியாயிற்று.

மண்திணிந்த நிலனும்
நிலன்ஏந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்நின்
வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந
வான வரம்பனை நீயோ பெரும
அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
பாஅல்புளிப்பினும் பகல்இருளினும்
நாஅல்வேத நெறிதிரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலீஇயரோ அத்தை அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்
முத்தீ விளக்கில் துஞ்சும்
பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே.

அருஞ்சொற்பொருள்

வண்மை - கொடைத்தன்மை. இலக்கு - குறி. திண்மை - உறுதி. ஐம்பூதங்கள் - நிலம், நீர், தீ, வளி, விண். பொறை - பொறுமை. வளி - காற்று. அளி - கொடை, தண்மை, அருள். தெறல் - சுடுதல், அழித்தல். கதிரவன் - பகலவன், ஞாயிறு. வரம்பு - எல்லை. முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினி. விசும்பு - வான். புரவி - குதிரை. யாணர்வைப்பு - புதுவருவாய் இடையறாத ஊர். மிகுபதம் - மிக்க உணவு. மாப்பிணை - மான்பிணை, பெண்மான். அடுக்கம் - அரைமலை. துஞ்சும் - உறங்கும்.

## பயிற்சி

I. விடை கூறுக :

1. உதியஞ்சேரலாதன் பாரதப் போரில் செய்த செயற்கருஞ் செயல் யாது ?
2. முரஞ்சியூர் முடிநாகராயர், தமது வடநாட்டுப் பயணத்தால் உணர்ந்தது என்ன ?
3. சான்றோர் கொள்கை யாது ?
4. உதியஞ் சேரலாதனின் சிறப்பை முரஞ்சியூர் முடிநாகராயர், வடநாட்டவர்க்கு எவ்வாறு விளக்கினர் ?
5. சேரலாதன் ஆட்சிக் காலத்தில் தமிழகத்தில் போரே இல்லாதது ஏன் ?
6. பகையை அடக்குவதில் உதியஞ்சேரலாதனுக்கும் மற்றவருக் கும் உள்ள வேறுபாடு யாது ?
7. உதியஞ்சேரலாதனுக்கும் ஐம்பெரும் பூதங்களுக்கும் உள்ள ஒற்றுமை யாது ?
8. முரஞ்சியூர் முடிநாக ராயருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காட்சி யாது ?
9. பனிமலையின் முன்பு முடிநாகராயருக்குத் தோன்றிய உணர்வு யாது ?
10. " புலவரே, வடநாட்டுப் பயணம் நலமாக இருந்ததா ?" என்ற சேரனது வினவிற்கு முடிநாகராயர் அளித்த பதில் யாது ?

II. 1. இப்பாடப் பொருளைச் சுருக்கி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரையாக எழுதுக.

2. இப்பாடப் பொருளை முடிநாகராயரே கூறுவது போலக் கூறுக.

# 8. சிற்பக்கலை

திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை அவர்கள், பி.ஏ., பி.எல்.

[இக்கட்டுரையாசிரியர் திருக்கோவில்களில் ஆணையராக இருந்தவர்; தமிழ் இலக்கிய அறிவும் அழகுக் கலைகள் பற்றிய அறிவும் மிக்கவர்; 'சோழர் கோயிற்பணிகள்' போன்ற பல நூல்களின் ஆசிரியர்.]

தமிழன் ஒரு கலைஞன். அவன் அறிந்து பயின்ற கலைகள் அறுபத்து நான்கு. அவற்றை அவனுக்கு உணர்த்திய பெருமாட்டி கலைமகளேயாவாள். இதனைக் கல்வியிற் பெரியவராகிய கம்பர்,

"ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை"

எனப் போற்றுகின்றார். அக்கலைகளுள் இசையும் சிற்பமும் ஓவியமும் அச்செல்வியின் கண்களாவன. தமிழன், தான் வாழ்ந்த வாழ்க்கையில் இக்கலைகளைப் பொன்னே போல் போற்றினான். அன்பும் உண்மையும் தன்னம்பிக்கையும் ததும்பிய அவன் உள்ளத்தில் இவை உயர்வு பெற்றன. மேலும் அவனது வாழ்க்கை இறைவனின் திருவருட்டுணை கொண்டிருந்தமையின், இக்கலைகள் பூத்தன; மணந்தன. இக்கலைச் சிறப்பு அவனது தாய்நாட்டிலே யன்றி, அவன் குடியேறியுள்ள மற்ற நாடுகளிலெல்லாம் பரவிச் சிறந்து விளங்கி ஓங்கிற்று. உலகப் பெருமக்கள் இன்றும் அவைகளைக் காணுந்தோறும் காணுந்தோறும் வியந்து பெருமிதங் கொள்கின்றனர்.

கலை என்பது மக்கள் வாழ்க்கையில் தனிப்பட்ட ஒரு பண்பு; ஓர் உள்ளுணர்வின் திறன். ஒருவன் ஓர் இன்ப உணர்ச்சியில் ஈடுபடுகிறான். அதனில் அவனது ஆன்ம ஆற்றல் தொடர்கிறது. அவன் அந்த இன்ப எண்ணத்திற்கு ஓர் உருக்கொடுக்கிறான். அஃது இசையாகிறது; ஒரு சிற்பமாகிறது; ஓர் ஓவியமாகிறது. அதனில் அவன் தன்னையே மறந்து ஒன்றுகிறான். இவ்வான்மத் தொடர்பு, அதனை உணரவல்ல பிறரையும் ஈர்க்கின்றது. இவ்வான்மத் தொடர்பு பெற்ற திறனே கலையாகும்.

இதில் கால எல்லேயும், மன்பதைகளின் வேறுபாடுகளும் குறுக்கிடுவதில்லே. இக்கலே வன்மையும் உண்மையும் எந்நாட்டாராலும் போற்றப்படுகின்றன. அதனே நாடும் ஒவ்வொருவருக்கும் அஃது இன்பத்தை விளேவிக்கிறது. அதனேப் பார்க்குந்தோறும் உன்னுந்தோறும் ஒரு புதிய உவகை பிறக்கின்றது. ஓர் இயற்கை எழில் அதில் ததும்புகிறது. கலேஞன் அதனில் தன்னே மறக்கிருன். அதனே நுகர்வோரும் அதனில் பிணிப்புறுகிருர்கள். கலே ஓர் இன்பம் நிறைந்த ஆன்ம ஆற்றலாகும்.

கவி இரவீந்திரநாத தாகூர் கூறியபடி கலேயானது தன்னலமும் பழிபாவங்களும் நிறைந்த உலகை விட்டு நம்மை அப்பால் அழைத்துச் செல்லவல்லது. இவ்விலக்கணம் பொதுவாக இந்தியக் கலேக்கும், சிறப்பாகத் தென்னிந்தியக் கலேக்கும் முற்றிலும் பொருந்தும். ஏனெனில், இக்கலேயின் அழகு வெறும் செயற்கை மட்டுமன்று, அல்லது இயற்கை மட்டுமன்று; ஆழ்ந்த உயர்ந்த கருத்துக்கள் மேவியது. இதில் மற்ருெரு சிறப்பும் உளது. அதுதான், இக்கலே இந்திய சமய உண்மைக் கருத்துக்களே அடிப்படை ஆக்கிக்கொண்டிருப்பதாகும். என்றும் உள்ள இறைவன் அருள் போன்று இக்கலே நிலேயாக நிற்பதற்கு இதுவே காரணமாகின்றது.

சிற்பம் என்பது மண்ணினுலும் கல்லினுலும் உலோகங்களினுலும் தந்தம் என்பு முதலிய வேறு பொருள்களினுலும் சிற்பக் கலேஞன், தான் கண்ணினுற் கண்டவற்றையும் கருத்தாற் கண்டவற்றையும் உருவகப்படுத்திக் காட்டுவதாகும். விலங்கிலிருந்து ஒரு சிறிது மக்கள் உயர்வு பெற்றுக் குளிருக்கும் வெயிலுக்கும் ஒதுங்கி நின்ற மர நிழலேயும் புதர் மறைவையும் விட்டு இயற்கைக் குகைக்குள் புகுந்து வாழ எண்ணிய நாட்களிலே, இச்சிற்பக்கலே தோன்றியதென்னலாம். அப்பழங் குகைகளிலே காணப்பட்ட காட்டு விலங்குகளின் உருவங்கள் கீறப்பெற்ற பாறைகளும் என்பு உருவங்களும் இதற்குச் சான்று பகர்வனவாகும்.

இவ்வாறு தோன்றிய சிற்பக்கலே, காலப் போக்கில்

மக்களின் உள்ளக் கவர்ச்சிக்கும், அவர்களுக்குக் கிடைத்த கருவிகளின் நுட்பத்திற்கும் ஏற்றவண்ணம் வளர்வதாயிற்று. அசிரியா, எகிப்து முதலிய பழைய நாகரிகம் பெற்ற நாடுகளில் இக்கலை சிறந்த பொருள்களை நினைவு கூர்தற்கும், புலன்களாற் காணமுடியாத தெய்வத் தன்மைகளை ஒருவாறு உருவளவிற் காட்டற்கும் பயன்பட்டுவந்தது. இவையே கிரேக்க நாட்டில் நாம் இப்போது பார்க்கக் கிடைக்கும் சியூஸ், ஜுனோ, மினர்வா போன்ற கடவுள்களின் திருவுருவங்களாகும். அக்ரோபாலிஸ் போன்ற பெருமண்டபங்களைக் காணும் போது அக்கலை அக்காலத்திலேயே ஓர் உயர்ந்த நிலையை அடைந்திருக்கக் காண்கிறோம். ஆயின் அவையாவும் இயற்கையை ஒட்டியே புலன்களுக்கு இன்பம் தருவன வாகி நிற்பன.

நம் பரதகண்டத்திலோ, வடஇந்தியாவில் கிரேக்கர் களது தொடர்பு நேர்ந்த பின்னர் எழுந்தவையாகக் கூறப்படுபவற்றுள், கனிஷ்க மன்னருடைய சிதைந்த சிலையையும், புத்தர் பெருமானுடைய சிலைகளையும் காணுமிடத்து அச்சிற்பங்களில் ஒரு தனித்த உயிர்த் துடிப்பு இருப்பதாகக் காண்கிறோம். இவை வெறும் அழகிற்கு மட்டும் தோன்றியவையல்ல. மேலும், அண்மையில் கண்டெடுக்கப்பட்டிருக்கும் மூவாயிரத் தைந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டவையான மொகஞ்ச தாரோ, ஹாரப்பா நகரங்களின் சிற்ப உருவங்கள் இச்சிறப்பை வலியுறுத்தும். அக்காலம் முதற்கொண்டு இந்நாள்வரையும் இந்தியச் சிற்பக் கலைஞன் தோற்று வித்த சிற்பம் ஒவ்வொன்றிலும் இவ்விதயத் துடிப்பினைக் காணலாகும். இச்சிறப்பினை மேனாட்டுக் கலைஞர்களும் அறிஞர்களும் போற்றிவருகின்றனர்.

சிற்பக்கலையின் தோற்றம், வடநாட்டில் பொதுவாக இறந்துபட்ட பெரியார்களை நினைவுறும்பொருட்டு, அவர் களுடைய உருவங்களைக் கல்லாற் செய்வித்து வைத்தல் என்ற மரபு பற்றியதாகும். தசரதன் இறந்த செய்தி யைப் பரதன் தன் தந்தையின் சிற்ப உருவத்தைக்

கண்டே தெரிந்துகொண்டான் என்று பாசகவி விளக்கியுள்ளார். அவர் காலம் கி. மு. நான்காம் நூற்றூண்டு. ஆதலால் இக்கலை கி. மு. நான்காம் நூற்றூண்டிற்கு முன்பே தோன்றியதாதல் வேண்டும் என்பது தெரிகிறது.

தமிழகத்திலோ, பழங்காலங்களில் இறந்த வீரர்களுக்கு நினைவாக்கக் கருதி, வீரக்கல்லும், கற்புடைய மகளிருக்கு மகாசதிக்கல்லும் நடும் வழக்கம் இருந்து வந்தது. தமிழ் இலக்கணங்களும் இதனை வலியுறுத்துகின்றன.

இதனைத் தொல்காப்பியப் பொருளதிகாரம் புறத்திணையியல்,

" காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்த மரபிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று வகையிற் கல்லொடு புணர "

என்பதாலும்,

" பெயர்பொறித் தினிநட் டனரே கல்லும் "

என்னும் புறப்பாட்டாலும்,

" ஆடவர், பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல் "

என்னும் அகப்பாட்டாலும், மற்றும் பல குறிப்புக்களாலும் அறியலாகும். போரில் மடிந்த வீரனைக் குறித்து அவனுடைய உற்ருர் நண்பர் ஆகிய பலர் கூடி அவனது உருவம் பொறிக்கத்தகும் கல்லைத் தேர்ந்தெடுத்துக் கொணர்ந்த பின்பு அக்கல்லினை நீரிற் படுத்துத் தூய்மை செய்து, பின்னர்ப் பெயரும் பீடும் எழுதி நாட்டி, அக்கல்லை வீரத் தெய்வமாகக் கருதிச் சிறப்புச் செய்து, கோயில் எடுப்பது வழக்கமாகியது. மேலும் இவ்விடத்தில் 'வீரசாலை' என்ற ஒரு கட்டடம் எடுப்பிப்பதும், பின்பு பாணர்களைக் கொண்டு மடிந்த வீரனது புகழைப் பாடுவிப்பதும் வழக்கங்களாக இருந்தன. தமிழ் நாடெங்கும் இவ்வீரக் கற்கள் இருப்பன காணலாகும். வடநாட்டில் இவ்வீரக் கற்கள் இருப்பனவாகக் காண்கிலோம். இது தமிழகத்துக்கு உரித்தான ஒரு மரபெனத் தெரிகிறது.

" கொண்டானிற் றுன்னிய கேளிர் பிறரில்லை "

எனக் கொண்ட தமிழ் மங்கை, தன் கணவன் இறந்த பின்பு ஆற்ருதவளாகித் தானும் தன் கணவனுடன் துறக்கம் புகுதல் கருதி அவனுக்காக வளர்த்த ஈமத் தீயின்கண்ணே புகுதல் முற்காலத்தில் பெருவழக்க மாகும். இவ்வாறு தம்மை மாய்த்துக்கொண்ட கற்புடைப் பெண்டிர்பொருட்டு நட்ட கல் 'மகா சதிக்கல்' எனப் பெயர் பெற்றது. இதனைக்,

" காதற் கணவனெடு கனையெரி மூழ்கும்
மாதர்மெல் லியலின் மலிபுரைத் தன்று "

என்றும்,

" தாங்கிய கேளொடு தானும் எரிபுகப்
பூங்குழை யாயம் புலர்கென்னும் "

என்றும் புறப்பொருள் வெண்பாமாலை அடிகள் கூறுவது காண்க.

இங்ஙனம் சிற்பக்கலை மிளிர்ந்து, மனிதன் மெய் யுணர்வு அடையவும், மாடமாளிகைகள் அமைத்துக் கொள்ளவும் பயன்படலாயிற்று. நகர்களில் உயர்ந்த மாடங்களும், அடுக்கு வீடுகளும், நிலா முற்றங்களு முள்ள இல்லங்களும் தோன்றின. இவ்வாறு சிற்ப நூலறிந்து சிற்பிகள், நாள் குறித்து, நாழிகை பார்த்து, நேரறி கயிறிட்டுத் திசைகளையும் அத்திசைகளில் நிற்கும் தெய்வங்களையும் நோக்கி எழுப்ப எழுந்தன அரசர் மாளிகைகளும் மண்டபங்களும்.

ஆயின், இவ்வாறு எழுந்த சிற்பச் சிறப்பெல்லாம் ஒருங்குகூடி எழுந்தனவென்ன எழுந்தன கோயிற் சிற்பங்கள். தமிழன் கண்ட கோயில் ஒரு கலைப் பண்டாரம்; கலை வளர்த்த ஒரு கற்பகப் பூங்கா; இறையுண்மைக் கருத்துக்களை உருவாக்கிய நிலைக் களம். தெய்வ உணர்வு பெற்ற நம் ஆன்ருேர், மனத்திற்கெட்டாப் பரம்பொருளையும் அளவு கடந்த அழகினையும் தமது சிந்தனையால் உருவகப்படுத்தி ஞர்கள். அன்பும் தந்நம்பிக்கையும் ததும்பிய அவர்கள் உள்ளத்தில் இறையன்பு தானே தோன்றியது. ஆண்ட

வனும் அடியார்க்கு எளியன் ஆதலால் உண்மைப் பொருள்களை அவர்களுக்குத் தோற்றுவித்து அவர்கள் இதயத்தில் இடங்கொண்டான். பூசலார் நாயனர் இறைவற்குத் தம் மனத்தில் கோயில் கட்டினர் ; அதற்குக் குடமுழுக்குச் செய்யவும் ஒரு நாள் குறித்தார். அதே நாளில் பல்லவ வேந்தனும் தான் கட்டிய கோயிலில் இறைவனை எழுந்தருளச் செய்ய நாள் தெரிந்திருந் தான்; அந்நாளில் அதனில் அமர்வதற்கு ஆண்டவனை வேண்டினன். ஆயின், ஆண்டவன் பூசலார் கட்டிய மனக்கோயிலில் அமர்ந்தான். மனத்திற்கெட்டா ஆண்ட வன் உண்மை இறைப்பற்றைக் கண்டவிடத்து எளிய ணுயினன்.

இவ்வாறு எழுந்த தமிழகக் கோயில்கள் எண் ணிறந்தன. இற்றைக்கு ஏறத்தாழ ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட இருந்த கோயில்களைப் பற்றி,

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்,
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்"

என்னும் சிலப்பதிகார அடிகள் விளக்கும். இதனை விரித்தால் பெருகும். இவை நாளடைவில் பல்கிப் பெருகிப் பலதிறப்பட்ட கோயில்களாயின. அதனை ஏழாவது நூற்றுண்டினரான அப்பர்பெருமானது திருத் தாண்டக அடிகள் தெளிவுறுத்துமாறு காண்க:

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயி லெழுபதினே டெட்டும் மற்றுங்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே."

அக்காலத்து எழுந்த கோயில்கள் சுடுமண்ணாலும், சாந்தாலும் மரத்தாலும் எழுந்தவை. கால அளவில்

அவை பழுதுபட்டும் புதுப்பிக்கப்பட்டும் வந்தன. ஆனல் ஏழு முதல் ஒன்பது நூற்ருண்டுகள் வரையில், பல்லவன் மகேந்திரவர்மனது அன்பு வலைப்பட்ட சிவன், தனக்கு என்றும் அழியாக் கோயில்களை அவன் வழியாக ஆக்கிக்கொண்டான். அப்பல்லவன் பெரும் பாறைகளைக் கோயில்களாகக் குடைவித்தான். அவை திருச்சிராப் பள்ளி, மண்டகப்பட்டு, மாமண்டூர், மாமல்லபுரம் முதலிய இடங்களிலுள்ள குடைவரைக் கோயில்கள் ஆகும். அதற்கடுத்தவை, இராசசிம்ம பல்லவன் பெரும் பாறைகளைச் சதுரப்படுத்தி ஒன்றன்மேலொன்ருகப் படியவைத்துக் கட்டிய காஞ்சிக் கயிலாயநாதர் கோயில் போன்றவை. இவர் காலத்துக்குப் பின்பு சோழர்கள் அமைத்த நார்த்தாமலை, தஞ்சை, கங்கைகொண்ட சோழபுரம், தாராசுரம், திரிபுவனம், சிதம்பரம், சீகாழிக் கோயில்களும், பாண்டியர் காலத்துத் தென்காசி, திருநெல்வேலிக் கோயில்களும், விசயநகர அரசர்கள் அமைத்த திருவண்ணுமலை, காஞ்சி ஏகாம்பரர் கோயில் களும் உலகோர் மெச்சும் சிற்பக் களஞ்சியங்களாகும்.

இவைகள் எல்லாவற்றையும் மீறியவை, இவற்றில் கோயில் கொண்டுள்ள தெய்வத் திருமேனிகளாகும். அவை செம்பு முதலிய ஐம்பொன்களாலாகியவை; வெறும் கருங்கல்லாலும் ஆகியவை. அவற்றில் கடவுள ரின் திருமேனிகள் அவரவர்களின் இறை உண்மைப் பொருள்களுக்கிணங்கத் தோற்றத்தையும் உறுப்புக்களை யும் நிறத்தையும், மிக நுணுக்கமான அணிகளையும் ஊர்தி களையும் பெற்றன. சிற்பி நோன்பிருந்து, இறைவன் திருவருட்டுணை கொண்டே இப்பெரும் பொருள்களை உருவாக்கினன். இவைதாம் உலகம் போற்றும் தில்லைச் சிற்றம்பலவனது நடராசச் சிற்பம், தென்முகப் பரமா சிரியனை தட்சிணுமூர்த்தி, சண்டேசுவர அனுக்கிரக மூர்த்தி, கலியாண சுந்தரமூர்த்தி, கூற்றம் குமைத்த மூர்த்தி, பிச்சதேவர், வீரச்சுவை ததும்பும் வீரபத்திரர் முதலியோர் சிற்பங்களாகும். இவை உலகம் நிற்குமளவும் தம் அழகாலும் சிற்பத்திறனுலும் நிற்பவையாகும்.

இவ்வாறு வளர்ந்த சிற்பங்கள், நம் நாட்டு மக்களின் வெளிநாட்டுக் குடியேற்ற முயற்சியால் நடு ஆசியா, ஆப் கானித்தானம், திபெத்து, சீனம், கொரியா, சப்பான், பாலித்தீவு, சுமத்திரா, போர்னியோ, இலங்கை முதலிய தீவுகளிலும் பரவின. தென்னாட்டினர், திரைகடலோடி யும் பொருள் தேடியது மாத்திரமின்றித் தமது சமயக் கருத்துக்களையும் அங்குப் புகுத்தினர். அச்சமயத் துடன், இந்தியக்கலையும் உடன்சென்று செல்வாக்கைப் பெற்றது. அதன் காரணமாகப் பேரா புதூரிலும், இலங்கை-பொலநருவையிலும், கம்போடியாவில் அங் கோர்வாட்டு என்ற உலகப் புகழ்பெற்ற வைணவக் கோயிலிலும் இந்தியச் சிற்பக் கலையின் பெருஞ்சிறப்பை இன்றும் காண்கிறோம்.

### அருஞ்சொற்பொருள்

ஏய - பொருந்துமாறு. கால்கோள் - கல்லைத் தேர்ந்தெடுத்தல். நீர்ப்படை - நீராட்டுதல். பெரும்படை - பெரிய படைப்பு. பீடு - பெருமை. அதர் - வழி. பீலி - மயில்தோகை. சுரம் - பாலை. மலிபு - பெருமை. ஆயம் - சுற்றம். ஈடு - பெருமை. பண்டாரம் - கருவூலம் (Treasury). குட முழுக்கு - கும்பாபிடேகம். வாலியோன் - பல ராமன். நெடியோன் - திருமால்.

### பயிற்சி

I. விடை தருக:

1. கிரேக்க நாட்டுச் சிற்பக் கலைக்கும் நம் நாட்டுச் சிற்பக் கலைக்கும் உள்ள வேறுபாடு யாது?
2. சிற்பக் கலையின் வரலாறாக நாம் அறிவது யாது?
3. நடுகல், மகாசதிக்கல்—இவற்றைப் பற்றி யாது அறிவாய்?
4. தமிழ் நாட்டுக் கோயிற் சிற்பத்தின் வரலாறு யாது?
5. சிறந்த சிற்பங்கள் எங்கெங்கு உள்ளன?
6. இந்தியச் சிற்பக்கலையின் பெருஞ்சிறப்பை நாம் எங்கெங்குக் காண்கின்றோம்?
7. உலகோர் மெச்சும் சிற்பக்களஞ்சியங்கள் யாவை?

II. 1. கலையின் சிறப்பைத் தொகுத்துப் பதினைந்து வரிகள் எழுதுக.
2. நீ பார்த்த சிற்பங்கள் அல்லது ஓவியங்கள் பற்றி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 9. காவியத் தோற்றம்

**டாக்டர் மா. இராசமாணிக்கனுர் அவர்கள்**
எம். ஏ., எல்.டி., எம். ஓ. எல்., பிஎச். டி.

[இக்கட்டுரையாசிரியர் தமிழ்ப் பேராசிரியர்; சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பணியாற்றுபவர்; பாட நூல்களை யும் ஆராய்ச்சி நூல்களையும் பலதுறைக் கட்டுரைகளையும் கடந்த நாற் பது ஆண்டுகளாக எழுதிவருபவர்; சிறந்த பேச்சாளர்.]

## இலக்கியம்

'இலக்கியம் என்பது மக்களுக்கெல்லாம் பொது வாகப் பயன்படும் பொருளை உடையதாய் இருத்தல் வேண்டும்; அத்துடன் இனிய வகையில் சொல்லப்படுவ தாய் இருத்தல் வேண்டும்; சொற்கட்டுச் சிறந்து, இன்பம் பயத்தலைக் குறிக்கோளாகப் பெற்றிருத்தல் வேண்டும். மக்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறும் செய்யுட்களோ, நூல்களோ படிப் போரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு, அவரது வாழ்க்கையையும் வழிப்படுத்தவல்லன. இவையே இலக் கியம் எனப்படும்,' என்று அறிஞர் கூறுகின்றனர். அபிமன்யு கொல்லப்பட்ட அன்றிரவு அவனை நினைந்து அவன் தந்தையான அருச்சுனன் புலம்பும் பகுதியைப் படிப்பவர், தாமும் கண்ணீர்விட்டு அழுதலைப் பார்க்கி ரோம். இறப்பு எல்லோருக்கும் பொது; இறந்தது குறித் துப் புலம்புதலும் பொது. இத்துடன் புலவரது சொற் கட்டும் கற்பனைத் திறனும் சேர்ந்துள்ள இப்பகுதி அனைவரையும் ஈர்க்கின்றது.

வாழ்க்கை நிகழ்ச்சிகளை எவரும் கூறலாம். ஆயின், அவற்றைச் சாதாரண மனிதன் கூறுவதற்கும் இலக்கிய இலக்கணம் கற்றுள்ள புலவன் கூறுதலுக்கும் நிறைந்த வேறுபாடு உண்டு. சாதாரண மனிதன் கூறுவது 'எலும்புக் கூடு' போன்றது. கற்று வல்ல புலவன் கூறுவது 'உயிருள்ள உடல்' போன்றது. நாவன்மை வாய்ந்த புலவர் கலைத்திறம் பொருந்தப் பொருளைப்

புகட்டுவதால்மட்டுமே நம் உணர்வு கவரப்படுகின்றது. இன்ன பொருளை இன்னின்ன சொற்களால் இன்னின்ன வாறு இன்னின்ன காலத்தில் சொல்ல வேண்டும் என்பதை அப்பெருமக்கள் நன்கறிவார்கள். அவர்கள் செய்யும் செய்யுட்களோ, நூல்களோ கற்பவர் உள்ளத்தைப் பிணிக்க வல்லவை. இவ்வாறு சிறந்த முறையில் ஆக்கப்பெற்ற நூல்கள் 'தலையாய இலக்கியங்கள்' என்று அறிஞரால் கருதப்பெறும். கம்பர் பெருமான் அப்பெருமக்களது செய்யுட் சிறப்பினைப் பின்வருமாறு பாராட்டுதல் காண்க :

" புவியினுக் கணியாய் ஆன்ற பொருடந்து புலத்திற் ருகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா விரியினை வீரர் கண்டார்."

## இலக்கியத் தோற்றம்

ஒரு சமுதாயத்தில் இலக்கியம் வெளிப்படுவதற்குக் காரணங்கள் யாவை? ஒருவருடன் ஒருவர் கலந்து வாழுதல் மக்கள் இயல்பு. அங்ஙனம் மக்கள் ஒன்றுகூடி வாழ்ந்தால்தான் பொருள் உணர்ச்சியும் அறிவு வளர்ச்சியும் உண்டாகும். மக்கள் தம் உணச்சிகளையும் எண்ணங்களையும் பிறர்க்கு எடுத்துக்காட்ட விழைதல் இயல்பாகும்; இங்ஙனம் எடுத்துக் காட்டி, கேட்பவர் அவற்றை அறியும்பொழுது, தம்மைப்போலவே உணர்தலும் எண்ணுதலும் செய்து மகிழ்வதைப் பார்ப்பதில் சிறந்த இன்பம் தோன்றுகிறதன்றோ! இவ்வாறு மக்கள் தம்மை வெளிப்படுத்துவதற்கு விரும்பும் விருப்ப மிகுதி, இலக்கியத் தோற்றத்திற்கு ஒரு காரணமாகும். இம்முறையில் எழுந்தவையே அகப்பொருள், புறப்பொருள் பற்றிய பாடல்கள் என்னலாம்.

மக்கள், துன்புறும் இவ்வுலக வாழ்க்கையைக் கண்டு கண்டு, இன்பம் காணும் முறையில் ஈடுபடுதலும் இலக்கியத் தோற்றத்திற்கு ஒரு காரணமாகும். இதனால்தான், 'இல்லது, இனியது, நல்லது, புனைந்துரை' எனப் புலவ

ரால் நாட்டப்பெற்ற ஒழுக்கம் நான்கெனச் சான்ருேர் கூறியுள்ளனர். கோவை, கலம்பகம் போன்ற புனைந் துறை நூல்கள் இம்முறைபற்றி எழுந்தவையே யாகும்.

மக்கள் தம் கருத்துக்களைப் பிறருக்கு எடுத்துக் கூறுவதோடு, பிறர் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் அறிந்துகொள்வதில் விருப்பம் காட்டுகின்றனர்; அவரது வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கண்டு இன்புறுகின்றனர் அல்லது துன்புறுகின்றனர்; அவற்றைப் பிறருக்கு எடுத்துக் கூறி, அவற்றின் படிப்பினையை உணர்த்து கின்றனர். இவற்ருல் அவர்க்குத் தம்மை யொழிந்த பிறரிடத்திலுள்ள பற்றுக்கோடு நன்கு புலனுகும். இந்தப் பற்றுக்கோடே சிலப்பதிகாரம் முதலிய பெருங் காப்பியங்கள் எழுதக் காரணமாய் அமைந்தது.

**சிலப்பதிகார வரலாறு**

காவிரியாறு கடலொடு கலக்கும் இடத்தில் ஒரு பெரிய நகரம் அமைந்திருந்தது. **காவிரிப்பூம்பட்டினம்** என்பது அதன் பெயர். அது சங்க காலத்துச் சோழ நாட்டின் தலைநகராகவும், துறைமுகப் பட்டினமாகவும் இருந்துவந்தது. உள்நாட்டு வாணிகத்தைப் பெருக்கிய வாணிகரும் வெளிநாட்டு வாணிகத்தை வளப்படுத்திய வாணிகரும் அந்நகரில் வாழ்ந்தனர். அவர்களுள் மாசாத்துவான் ஒருவன்; மாநாய்கன் மற்ருெருவன். மாசாத்துவான் மகன் கோவலன்; மாநாய்கன் மகள் கண்ணகி. இவ்விருவருக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. இருவரும் சிறிது காலம் இன்பமாக வாழ்ந்துவந்தனர்.

கோவலன் இசைக்கலையில் வல்லவன்; இசை, நடனம் முதலிய நுண்கலைகளைச் சுவைப்பதில் நுட்ப அறிவுடையவன். அவன் ஒருநாள் மாதவி என்னும் நாடகக் கணிகையின் நடன அரங்கேற்றத்தைக் காணச் சென்ருன்; அவளுடைய பேரழகிலும் நடனத்திலும் ஈடுபட்டு அவளோடு வாழத் தலைப்பட்டான்; சிறிது சிறிதாகத் தன் செல்வம் அனைத்தையும் அவள்

பொருட்டே செலவிட்டான் ; இறுதியில் அவள்பால் மனம் வேறுபட்டு அவளைத் தவறுடையவள் என்று கருதிக் கண்ணகியிடம் மீண்டான்.

கணவனைப் பிரிந்த மனைவி மிக்க வருத்தத்தோடு தனி வாழ்க்கை நடத்திவந்தாள் ; தன் மாமியார் மாமனர் முன்பு தன் மனவருத்தத்தை மறைத்துவந்தாள். ஒரு நாள் இரவு அவள் தீய கனவு ஒன்று கண்டாள் ; தானும் தன் கணவனும் வெளியூர் செல்வதுபோலவும், அங்குத் தன் கணவனுக்குத் துன்பம் நேருவதுபோலவும், தான் அவ்வூர் அரசனிடம் சென்று அதுபற்றிப் பேசுவது போலவும் கனவு கண்டாள். இதுபற்றி அவள் தன் தோழியான தேவந்தியிடம் கூறிக்கொண்டிருந்த பொழுது, மாதவியைப் பிரிந்த கோவலன் அங்கு வந்தான்.

கோவலன், தான் அதுவரையில் செய்த தவற்றைக் கூறி வருந்தினன். மாதவியிடம் செல்லப் பொருள் இல்லை போலும் என்று எண்ணிய கண்ணகி, "என் சிலம்புகள் இருக்கின்றன. எடுத்துக்கொள்ளுங்கள்," என்றாள். கோவலன், "உன் சிலம்பை விற்றுவரும் பணத்தைக் கொண்டு மதுரையில் வாணிகம் செய்ய விரும்புகிறேன் ; நீயும் உடன் வருக," என்றான். அன்று இரவு ஒரு வருக்கும் தெரிவியாமல் கோவலனும் கண்ணகியும் தாம் பிறந்து வளர்ந்த சோழர் தலைநகரை விட்டுப் பாண்டியர் தலைநகராகிய மதுரையை நோக்கி நடக்கலாயினர்.

இருவரும், வழியில் கவுந்தி அடிகள் என்ற சமணப் பெண் துறவியார் நட்பைப் பெற்றனர். அவ்வடிகள் அவர்களுக்கு உதவியாக மதுரை செல்லத் தொடங்கினர். அடிகள் வழியில் கோவலனுக்குப் பல அறிவுரைகள் வழங்கினர் ; ஆறுதல் மொழிகள் கூறினர் ; கண்ணகியின் நற்பண்புகளைப் பாராட்டினர். மூவரும் மதுரையை அடைந்தனர்.

கோவலனும் கண்ணகியும் மாதரி என்னும் இடைக் குல மடந்தையின் ஆதரவில் தங்கினர். கோவலன் தன் மனைவியின் நற்பண்புகளைப் பாராட்டினன் ; தான் செய்த தவறுகளை எண்ணி வருந்தினன் ; இறுதியில்

கண்ணகியின் சிலம்பு ஒன்றை எடுத்துக்கொண்டு, கடைத்தெருவினுள் நுழைந்தான். அரண்மனைப் பொற் கொல்லன் பாண்டிமாதேவியின் சிலம்பொன்றைக் கவர்ந்தவன். கோவலன் காட்டிய சிலம்பைக் கண்ட வுடன், அவனுக்கு ஒரு யோசனை உண்டாயிற்று. அச் சிலம்பு பாண்டிமாதேவியின் காணமற்போன சிலம்பு என்று கூறித் தான் தப்பவேண்டும் என்பதுவே அந்த யோசனை.

பொற்கொல்லன் நேரே பாண்டியன் நெடுஞ்செழிய னிடம் சென்று, ''ஒருவன் நமது மாதேவியின் சிலம்பை விற்க நம் நகருக்கே வந்துள்ளான்,'' என்று கூறினன். பாண்டியன் அவன் கூற்றை நம்பி, ஏவலரை அழைத்து, ''அக்கள்வனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருக,'' என்று ஆணையிட்டான். கொலைச் செய்தியை அறிந்த கண்ணகி கடுஞ்சீற்றம் கொண்டாள். அவள் மதுரை மாநகரில் தெருத்தெருவாகச் சென்று அழுது புலம்பினுள்; பாண்டியன் தவற்றை எடுத்து உணர்த்தினுள். உண்மை உணர்ந்த பாண்டியன் மயக்கமுற்று வீழ்ந்து மடிந்தான். பாண்டி மாதேவியும் உயிர்விட்டாள். கண்ணகி தன் கற்பின் திறமையால் மதுரையை எரித்தாள்.

மதுரையைக் காத்துவந்த மதுராபதி என்னும் பெண் தெய்வம் கண்ணகியின் பழைய பிறப்பை உணர்த்தியது; பழம் பிறப்பில் கோவலன், குற்றமற்ற தன் பகைவனைப் பகையரசனது ஒற்றன் என்று கூறிக் கொல்வித்தான். கொல்லப்பட்டவன் மனைவி அழுது புலம்பி, ''எமக்கு இக்கேடு செய்தவர் அடுத்த பிறவியில் இக்கேட்டினை நுகர்வோர் ஆகுக,'' என்று சபித்து இறந்தாள். அச் சாபம் இப்பொழுது பலித்தது. இதனை அறிந்த கண்ணகி மிக்க வருத்தத்தோடு வையையாற்று வடகரை வழியே சென்று சேரநாட்டை அடைந்தாள்; அங்கு ஒரு வேங்கை மரநிழலில் நின்றுள். அப்பொழுது கோவலன் விண்ணக விமானத்தில் வந்து அவளை அழைத்துச் சென்றுன்.

சேரநாட்டு அரசனுன செங்குட்டுவன் இச்

செய்தியை அறிந்தான். அவன் மனைவியான இளங்கோ வேண்மாள், "நம் நாட்டிற்கு வந்த வீர பத்தினியைக் கோவிலில் வைத்து வழிபடவேண்டும்," என்று கூறினாள். செங்குட்டுவன் தன் மனைவி விரும்பியவாறு கோவில் கட்டிக் கண்ணகியை வழிபட்டான். அப்பொழுது அங்கு வந்திருந்த மாளுவவேந்தர், இலங்கைக் கயவாகு முதலிய அரசர்களும் தத்தம் நாடுகளில் கோவில் கட்டிப் பத்தினியை வழிபட்டனர்.

## இலக்கிய நோக்கம்

இளங்கோவடிகள் கண்ணகியின் வரலாற்றை நன்கு ஆராய்ந்தார்; அவ்வரலாற்றில் மூன்று உண்மைகளைக் கண்டறிந்தார். அவை : (1) பாண்டியன் முறை தவறியதால் அறமே அவனுக்கு யமனாய் அமைந்தது, (2) கண்ணகி சிறந்த பத்தினி ஆதலால் பாராண்ட வேந்தர், கோவில் கட்டி அவளை வழிபட்டனர், (3) இப்பிறப்பில் தவறு செய்யாத கோவலனும் கண்ணகியும் பொறுத்தற்கரிய துன்பத்தை அடைந்ததற்கு, அவர் முன் செய்த தீவினையே காரணம், அத்தீவினை இப்பிறப்பில் வந்து தன் பயனை வழங்கியது என்பன. இளங்கோ அடிகள், கண்ணகி வரலாற்றால் அறியப்பட்ட இம்மூன்று உண்மைகளையும் நாட்டு மக்களுக்கு அறிவுறுத்த விரும்பினார். இதனை, அவர் செய்த "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" என்னும் பெருங்காவியத்தின் பதிக அடிகளைக் கொண்டு அறியலாம் :

"அரைசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றுவதூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி காரம் என்னும் பெயரால்
நாட்டுது மியாமோர் பாட்டுடைச் செய்யுள்."

### அருஞ்சொற்பொருள்

அணி - அழகு. ஆன்ற - சிறந்த. புலம் - அறிவு. அவி - அமைந்த. ஐந்திணை - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை. சவியுற - செவ்வையாக. அரைசியல் - அரசியல். உரைசால் - புகழுரை பெற்ற. பாட்டுடைச் செய்யுள் - உரைப்பாட்டு இடையிடையே விரவப்பெற்ற செய்யுள் நூல்.

### பயிற்சி

I. விடை தருக :

1. அறிஞர் எதனை இலக்கியம் என்று கூறுகின்றனர் ?
2. சாதாரண மனிதன் ஒன்றைக் கூறுவதற்கும் புலவன் கூறுவதற்கும் வேறுபாடு என்ன ?
3. எவை தலையாய இலக்கியங்கள் எனப்படும் ?
4. பெரும்புலவரது செய்யுள் சிறப்பினைக் கம்பர் எங்ஙனம் பாராட்டியுள்ளார் ?
5. இலக்கியம் தோன்றுவதற்குரிய காரணங்கள் எவை ?
6. சிலப்பதிகாரத்தினுல் அறியப்படும் மூன்று உண்மைகள் யாவை ?

II. 1. நூல்கள் எவ்வெக் காரணங்களால் தோன்றுகின்றன என்பதை விளக்கி.ஒரு கட்டுரை எழுதுக.

2. கீழ் வருவனவற்றைச் சேர்த்துக் கூறுக :

சேர்ந்து + உள்ள, எலும்பு + கூடு, இன்ன + இன்ன, இ + பகுதி, பற்று + கோடு, வளம் + படுத்திய, நெடுமை + செழியன், தவறு + ஐ, உண்மைகளை + கண்டார், கண்டு + அறிந்தார்.

# 10. மகனுக்குக் கடிதம்

**பேராசிரியர் மயிலை. சிவ. முத்து அவர்கள்**

[இவர் சென்னை முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியராயிருந்து ஓய்வு பெற்றவர்; சென்னை மாணவர் மன்றத்தின் தலைவர்; அம்மன்றத்தின் வாயிலாகத் தாய் நாட்டிற்கும் தாய் மொழிக்கும் அரும்பணி ஆற்றிவருபவர்; பல நூல்களின் ஆசிரியர்; சிறந்த பாவலர்; பேச்சாளர்.]

17, இரத்தின முதலி தெரு,
சென்னை–1
9—9—1957

திருவளர் செல்வன் மணவழகனுக்கு வாழ்த்துக் கூறி எழுதுவது :

அருங்குணச் செல்வ,

இங்கே அனைவரும் நலம். நின் நலத்தினையும், நின் பேராசிரியர்கள், அருமை நண்பர்கள் முதலியவர் நலத்தினையும் அடிக்கடி அறிய ஆவலுடையவனாய் இருக்கிறேன். 7–9–1957ஆம் நாளன்று நீ எழுதிய கடிதம் இன்று காலைதான் என் கைக்கு வந்தது. அண்ணாமலைப் பல்கலைக் கழகக் கல்லூரியில் படிக்கும் நீ அந்த அரசர் அண்ணாமலையைப் போன்று செட்டாகவும் இருக்க வேண்டும். அவர் பொருளில் மட்டும் செட்டாக இல்லை; பேச்சில், எழுத்தில் எல்லாவற்றிலும் செட்டாகவே இருந்திருக்கின்றார். நீ நான்கு பக்கங்கள் கடிதம் எழுதி இருபத்தெட்டுப் புதுக் காசுகள் செலவழித்திருக்கின்றாய். அதனை அனுப்ப அந்தச் செய்தியை ஐந்து காசுகள் கொண்ட ஓர் அஞ்சல் அட்டையில் எழுதி அனுப்பியிருக்கலாம்.

கடிதம் எழுதுவதும் ஒரு சிறந்த கலையே. மதிப்பு மிக்க நேரு அவர்களைப் போல் அரிய செய்திகளை அமைத்து எழுதுவதாக இருந்தால் கடிதம் சிறிது நீண்டிருந்தாலும் கவலையில்லை. நான் உனக்கு இன்று எழுதும்

கடிதமும் சிறிது நீண்டதாகத்தான் இருக்கும். நம் இல்லத்தின்கண் திகழும் அரசர் அண்ணுமலைச் செட்டியாரின் திருவுருவப் படத்தைச் சுட்டிக் காட்டி நின் தமையனுக்கு நல்லுரை வழங்கினேன். அவன் செட்டியார்தம் வரலாற்றைக் கேட்டுத் தானும் அவ்விதமே முன்னேற்றமுற முயல்வதாக எனக்கு வாக்குறுதி தந்தான். அந்த அரசர் பெருமானுரால் அமைக்கப்பெற்ற பல்கலைக் கழகக் கல்லூரியில் கல்வி பயிலும் உனக்கும் அந்தக் கவலை இருக்கவேண்டுமன்ருே? அதற்காகவே இந்த நீண்ட கடிதத்தினை நான் உனக்கு எழுதுகின்றேன்.

அண்ணுமலைச் செட்டியார் 1881ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30ஆம் நாள் செட்டி நாட்டிலே கானுடுகாத்தான் நகரத்திலே முத்தைய செட்டியாரின் அருந்தவத் திருமகஞராகப் பிறந்தார். அவர், தம் தந்தையாரைப் போலவே வணிகத் தொழில் புரிந்து வாழ்ந்தார். மிக்க இளவயதிலேயே அவர் சீதை ஆச்சி அவர்களைத் திருமணம் செய்துகொண்டார். அவருடைய தந்தையார் மூலம் அவர் கற்ற திருக்குறளும் தேவாரமும் அவருக்கு வாழ்க்கையிலே வழி காட்டிகளாக இருந்திருக்கின்றன.

“ அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின் ”

என்னும் குறளின் கொள்கையை அவர் கடைப்பிடித்து வாழ்ந்துவந்தார்.

“ இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு ”

என்று வள்ளுவர் அரசியலில் கூறியுள்ளதைச் செட்டி நாட்டு மன்னர், தம் வாழ்க்கையின் சிறந்த குறிக்கோளாகக் கொண்டு ஒழுகிவந்தார். கற்றலும் கற்றபடி நிற்றலும் அவருடைய சிறந்த கொள்கைகளாக இருந்திருக்கின்றன.

அண்ணுமலை அரசரை நான் நேரில் கண்டிருக்கிறேன்; அவரிடம் உரையாடியிருக்கிறேன்; இரண்டொரு விருந்துகளிலும் கலந்துகொண்டதாக எனக்கு நினை

விருக்கிறது. அவருடைய தோற்றப் பொலிவு, பெருந் தன்மை, அனைவரிடத்திலும் அளவளாவி அவரவர்க்கு ஆவன புரிய முயலும் சிறந்த குணநலம் முதலியன இன்றும் என் கண்முன்னே நின்று காட்சியளிக்கின்றன.

"தோன்றிற் புகழொடு தோன்றுக"

என்னும் வள்ளுவர் அறிவுரையை அறிந்துள்ள நீ, இந்த வயதிலிருந்தே அத்தகைய புகழைப் பெற முயலுதல் வேண்டும். நம் செட்டிநாட்டு மன்னருக்கு அவர் தந்தை யார் சில நூறுயிரங்களே வைத்துச் சென்றுர். அவற் றைக் கண்ணும் கருத்துமாகக் கொண்டு காத்து வணிகத் தொழில் மூலம் வளர்த்துப் பத்து ஆண்டுகளுக்குள் அவர் கோடிக்கணக்கில் பெருக்கினுர். அவர் எந்தச் சிறு செயலையும் ஆராயாமல் செய்யமாட்டார்; நன்கு சிந்தித்துப் பெரும்பயன் விளையும் வகையிலேயே எதனை யும் செய்ய முயல்வார். அவருடைய வணிகத் தொழில் நம் நாட்டில் மட்டும் இன்றிப் பர்மா, மலாயா முதலிய இடங்களிலும் பரவியிருந்தது.

நம் செட்டியார் இளம் பருவத்திலிருந்தே தம் தகுதிக் கேற்ற வகையில் அறம்பல புரிந்து வந்திருக்கின்றுர்; 1910ஆம் ஆண்டில் காரைக்குடி நகரசபைத் தலைவராக இருந்தார். அப்போது அவர், தாம் தலைவர் என்னும் எண்ணத்தோடு இராமல் ஓர் ஊழியரைப் போல் ஒவ்வோர் இடமும் சென்று அவரவர்கட்கு வேண்டிய நலன்களை யெல்லாம் செய்தார் என்று அவருடைய சரிதம் கூறு கிறது. நம் நாட்டில் எத்துணையோ செல்வர்கள் தோன்றி யிருக்கிறுர்கள். நம் செட்டிநாட்டு மன்னரோ, சிக்கன மாகப் பொருள் தொகுத்து அந்தந்தக் காலத்துக்கு ஏற்ற வகையில் அறச் செயல்களைப் புரிந்துவந்திருக்கிறுர்.

அரசர் அண்ணுமலைச் செட்டியார் ஒருமுறை இங்கி லாந்துக்குச் சென்றுர்; அங்குள்ள பல்கலைக் கழகங்களைக் கண்டார்; நம் நாட்டிலே நமது அருமைத் தமிழ் மொழிக் காக ஒரு பல்கலைக் கழகமேனும் இல்லையே என்று எண் ணினுர். அந்த எண்ணமே நாளடைவில் வளர்ந்து உருப் பெற்று அண்ணுமலைப் பல்கலைக்கழகமாகத் திகழ்கின்றது.

ஏறத்தாழ ஐம்பது நூருயிரம் உரூபாய்கள் வழங்கி ஒரு பல்கலைக்கழகத்தை ஒருவரே நிறுவுதல் எளிதில் நடக்கக் கூடிய செயலன்று. இத்தகைய பெரிய அறச் செயலுக்கு அவருடைய இடையரு முயற்சியும் பரந்த நோக்கமும் வள்ளல்தன்மையுமே காரணங்களாகும். முதலில் அவர் மீனுட்சிக் கல்லூரியைத் துவக்கிய போதும், பின்பு தமிழ்க்கல்லூரியைத் துவக்கியபோதும், இசைக்கல்லூரியைத் துவக்கியபோதும் ஒவ்வொன்றை யும் நன்கு சிந்தித்துச் சிறந்த முறையிலேயே அமைத்திருக்கிருர்.

"இதனை இதனுல் இவன்முடிக்கு மென்ருய்ந்
ததனை யவன்கண் விடல்"

என்னும் திருக்குறளுக்கு, அவர், தம் வாழ்க்கையில் நமக்கு விளக்கவுரை தந்திருக்கிருர். அவர் அமைத்த பல்கலைக் கழகத்தில் அன்றுதொட்டு இன்று வரையில் மிகப் பேரறிஞர்களே தொண்டாற்றிவந்திருக்கின்றனர். செட்டியாரின் வள்ளற்றன்மையைப் பாராட்டி அவருக்குப் பரம்பரை 'அரசர்' பட்டத்தை இங்கிலாந்து அரசர் அளித்தபோது அவரைப் பாராட்டாதவர் இல்லை. அவர் பிறந்த ஊரிலும் பிற இடங்களிலும் ஆயிரக்கணக் கான மக்கள் ஒன்று சேர்ந்து பெரிய விழாவாகவே அதனைக் கொண்டாடினர்.

நம் செட்டிநாட்டு அரசர் தமிழ் இசைக்காகப் பாடு பட்ட செய்தியை நீ அறிந்தே இருக்கிருய்; எத்துணையோ எதிர்ப்புக்களுக்கிடையே பழங்காலத் தமிழ் இசையைப் போற்றி வளர்த்தல் வேண்டும் என்ற எண்ணத்துடன் மாநாடுகள் கூட்டியும் இசையரங்குகள் அமைத்தும் வளர்த்துவந்திருக்கிருர். தமிழிசைக்காக எட்டு நூரு யிரம் ரூபாய்கள் செலவில் அமைத்த 'இராசா அண்ணு மலை மன்றம்' இன்று சென்னையின் நடுவில் அவர் புகழ் பரப்பி நிமிர்ந்தோங்கி நிற்கிறது. இங்ஙனம் பல அறச் செயல்களைச் செய்து அழியாப் புகழுடம்பைப் பெற்ற நம் அண்ணுமலை அரசர் 15-6-1948இல் இம்மண் ணுலகை நீத்தார். அவர் ஆருயிர், பிரியும் போதும்

அறச் செயலிலேயே நிலைத்து நின்றது; இசை வளர்ச்சிக்காக நன்கொடை வழங்க ஆவன புரியும் தறுவாயில் தான் அவர்தம் இன்னுயிர் நீங்கியது. அவர் பிரிவுக்காக வருந்தாத அறிஞர்கள் இல்லை; 'தமிழ்நாட்டு ராஃபெல்லர்' மறைந்தார் எனச் செய்தித் தாள்கள் வெளியிட்டன.

நம் செட்டியார், தாம் ஆற்றிவந்த அறச்செயல்கள் தம்மோடு நின்றுவிடாமல் மேன்மேலும் வளர்ந்து வருதல் வேண்டும் என்னும் எண்ணத்தோடு அவர்தம் மூத்த திருமகனுராய டாக்டர் இராசா சர் முத்தைய செட்டியார் அவர்களையும் அதே வழியில் பண்படுத்தியிருப்பது பெரிதும் பாராட்டத்தக்கது. அண்ணுமலை அரசருக்குப் பின் இராசா முத்தைய செட்டியார் அவர்கள் அவ்வப்போது ஆற்றிவரும் அரிய பெரிய அறச்செயல்கள் நீ அறிந்தனவே. அவர், தம் தந்தையாரைப் போன்றே அனைவரிடத்திலும் அளவளாவும் தன்மை, எடுத்த செயலினை வெற்றிபெற முடிக்கும் திறமை, தாராள மனப்பான்மை முதலிய நற்குணங்களைப் பெற்றிருக்கிருர். பச்சையப்பன் அறநிலையத்தையும் பிற பொதுநலப் பணிகளையும் வளர்த்துப் பேரும் புகழும் பெற்றுவரும் இராசா முத்தைய செட்டியாரின் குணநலன்களைக் குறித்து நான் உனக்கு அதிகமாகச் சொல்ல வேண்டுவதில்லை. அண்ணுமலை அரசரின் குடும்பம் ஆல்போல் தழைத்து அழியாத அறச் செயல்கள் பலவும் செய்துவரும் என்பதில் ஐயமே இல்லை.

அன்புடைச் செல்வ, அவர்கள் நடத்தும் பல்கலைக் கழகக் கல்லூரியிலே படிக்கும் நீயும் இப்போதே உயர்ந்த குறிக்கோளை உன் வாழ்க்கையில் கொண்டுவர முயற்சி செய்.

"தெய்வத்தா னுகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்."

நம் செட்டி நாட்டு அரசரைப் போன்று அல்லும் பகலும் முயற்சியில் எண்ணமாக இரு. நம் நாட்டின் நிலையை நினைந்து, "பிற நாடுகளைப் போல் நம் நாடும் சிறந்து விளங்குவதற்காக நான் பாடுபடுவேன்," என்று

உன் உள்ளத்தில் உறுதிகொள். செட்டிநாட்டு வள்ளலின் உருவப்படத்தைக் காலையும் மாலையும் பார்த்துப் பார்த்து, "அவருடைய உயரிய எடுத்த தோற்றம், குண நலன்கள் எல்லாம் எனக்கு வரவேண்டும்," என்று சூளுரை செய்துகொள்; செட்டியாரைப் போலவே அனைத்திலும் செட்டாக இரு; அனைவரிடத்திலும் பணிவு காட்டி நடந்துகொள்; ஒற்றுமைக்காகப் பாடுபடு; அவருடைய குடும்பத்தைப் போல் நம்முடைய குடும்பமும் நாட்டுக்கு வேண்டும் அறச்செயல்களைப் புரிந்து பேரும் புகழும் பெறவேண்டும் என்று இறைவனை வேண்டிக் கொள்; கருத்தூன்றிப் படி. பேராசிரியர்கள் பாடம் சொல்லும்போது நெஞ்சு களனாக, செவி வாயாகக் கொண்டு, அவர்கள் கூறுவனவற்றைப் பயன்படுத்திக் கொள். உனக்கு எல்லா நலன்களும் விளைவதாக!

இங்ஙனம்
நின் அருமைத் தந்தை,
மயிலைநாதன்.

### அருஞ்சொற்பொருள்

செட்டு - சிக்கனம். திகழும் - விளங்கும். அருவினை - அரிய செயல்கள். இயற்றல் - பொருள் வரும் வழிகளை மேன்மேலும் உண்டாக்குதல். ஈட்டல் - வந்த பொருள்களைச் செம்மையாகச் சேர்த்தல். நூறாயிரம் - இலட்சம்.

### பயிற்சி

I. விடை கூறுக :

1. அரசர் அண்ணாமலை எதனைத் தம் வாழ்க்கையின் சிறந்த குறிக்கோளாகக் கொண்டார்?
2. அரசர் அண்ணாமலை எந்தக் குறளுக்கு விளக்கவுரை தந்துள்ளார்? எவ்வாறு?
3. அரசர் தமிழிசை வளர்ச்சிக்குச் செய்த அரும்பணிகளைத் தொகுத்து எழுதுக.

II. 1. மயிலைநாதர் மணவழகனுக்குக் கூறிய அறிவுரைகளைத் தொகுத்துப் பதினைந்து வரிகளுள் எழுதுக.

2. 'அண்ணாமலை அரசர்' என்னும் தலைப்பில் இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 11. கடமை உணர்ச்சி

வித்துவான் அன்பு கணபதி அவர்கள்

[இக்கட்டுரையாசிரியர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் துணைத் தமிழ்ப் பேராசிரியர்; சொல்வன்மையும் எழுத்துவன்மையும் பெற்றவர்.]

'விதியையும் மதியால் வெல்லலாம்' என்பது பொருள் பொதிந்த பழமொழி. 'உம்'மை உயர்வு சிறப்பு. கடக்க இயலாது எனப் பொதுவாக உலக மக்களால் கருதப்படும் விதியினை அறிவால் வெல்லலாம்; அமைதியாக அறிவாகத் தொடர்ந்து முயன்றால் முடிவில் வெற்றி பெறலாம்; நன்மை அடையலாம். இஃது இப் பழமொழியின் பொருள் ஆகும். மனித முயற்சியால் ஆகாததென உலகில் எதுவுமில்லை என்பதே இப்பழமொழியின் சுருங்கிய கருத்தாகும். 'அன்று எழுதியதை அழித்து எழுத இயலுமா?' என்பது ஆள்வினை அறியாதார் கூற்று.

" அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்."
" தெய்வத்தானாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும் "

இவை வள்ளுவர் வரையறுத்துக் கூறிய வாய்மொழிகள்.

தாம் இயற்றிய அருமைத் திருக்குறளில் அறத்துப் பாலின் இறுதியில் வள்ளுவரும் ஊழின் வலியினை வலியுறுத்திக் கூறுகிறார். ஊழைவிட வன்மை படைத்தது இவ்வுலகில் எதுவுமில்லை. அதைத் தடுப்பதற்குரிய காரணங்கள் பல ஏற்பட்டாலும், அவற்றை எல்லாம் தடுத்து அழித்துத் தானே முற்பட்டு ஊழ் தன் செயலைச் செய்துவிடும். அதனையே,

" ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்"

என வள்ளுவர் குறிக்கின்றார். ஊழின் வன்மையைக் கூறவந்த காரணத்தால் வள்ளுவர் இங்ஙனம் கூறுகின்

ருர். ஆயின், அவ்வாசிரியரே பின்னர் ஆள்வினையைப் பற்றிச் சொல்லுமிடத்தில் அவ்வளவு வன்மையான—தடுக்க முடியாத—ஊழையும் வெல்ல முடியும். ஓய்வு இல்லாது தளராது தம் கருமமே கண்ணுயிருந்து தொடர்ந்து உழைப்பவர் அவ்வூழையும் தோல்வியடையச் செய்வர் என்று கூறுகின்ருர்.

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்."

இதனுல், முயன்ருல் முடியாதன இல்லை; முயற்சி வேண்டும்; அம்முயற்சியும் தக்க வழியில், கடமை உணர்ச்சியோடு கலந்ததாயிருத்தல் வேண்டும் என்பது நாம் அறிதல் நலம். நாடு, மொழி, வாழ்க்கை ஆகிய இவற்றுள் மக்களுக்குப் பற்றுணர்ச்சி இருத்தல் வேண்டும். 'நடப்பது நடக்கட்டும், நமக்கு என்ன!' என்னும் எண்ணம் எதிலும் எவருக்கும் கூடாது. அப்போது தான் நாடு, மொழி, வாழ்க்கை முதலியன வளர்ந்து உயரும்.

உலகில் வாழும்—வாழ விரும்பும்—மக்களுக்குப் பற்றுள்ளம் வேண்டும். அப்பற்று என்பது நேரிய நெறியில் செல்வதே; பரந்த மனத்தை அடிப்படையாகக் கொண்டதே; நேர்மையற்ற வழியில் குறுகிய நோக்கம் கொண்டதன்று. இதற்குப் பிறரை அழித்த இடத்தில் தான் பெருக வாழவேண்டுமென்பது பொருளன்று; தன்னலம் நீக்கிப் பொது நலம் வளர்ப்பது என்பதே பொருள். தன் மதிப்பு இழந்து பிறர்புகழ் பாடுவதன்று; தன் மதிப்புக் காத்துப் பிறருக்கும் மதிப்பு நல்குவதே. இதற்கு அடிப்படையாக வேண்டுவது **கடமை உணர்ச்சி.**

இக்கடமை உணர்ச்சி செயல்திறம் படைத்தோரிடத்தேதான் சிறந்து நிற்கும். அப்போது செயலுக்கு முதற்காரணங்களான உள்ளமும் உரையும் ஒத்து நிற்க வேண்டும். உள்ளமும் செயலும் இல்லாத உரை வெற்றுரையே. உரைப்பது யார்க்கும் எளிது; உரைத்த வண்ணம் செய்தலே அரிது.

" சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்."

எனவே, இம்மூன்றும் ஒன்ற நின்று உழைப்பவரே கடமை உணர்ச்சியை உள்ளபடி உணர்ந்தவராவார்.

"நாட்டை யார் ஆண்டால் என்ன? 'அ' உம் சரி, 'ஆ' உம் சரியே; எல்லாம் ஒன்றே" என்னும் எண்ணமோ, 'தீங்கு அவனுக்குத்தானே வந்தது, நமக்கு என்ன?' என்னும் நச்சு மனமோ நாட்டு மக்களிடம் கூடாது. ஏன்? அவை யாருக்கும் நன்மை பயவா ஆகலான்; எனவே, நாட்டு மக்கள் தம்முடைய தனித்த வாழ்வில் மட்டுமின்றி, நாட்டு வாழ்விலும் அனைத்துத் துறைகளிலும் பங்குகொண்டு பாடுபடல் வேண்டும். இதுவே பண்டைத் தமிழ்ச் சான்றோர் நமக்குக் காட்டிச் சென்ற பயன் தருநெறி.

பழைய தமிழகத்தில் கோன் ஆட்சியே நிலவியது. குடிமக்கள் அவனுக்கு அடங்கி அவன்வழி நின்று ஒழுகினர்.

எனினும் குடிகட்கும் ஆட்சியில் உரிமை இல்லாமல் போகவில்லை. குடிகளின் கருத்தறிந்தே மன்னவன் நாட்டை ஆண்டான். ஆகவே, பண்டு குடியாட்சியும் ஓரளவு தமிழகத்தில் நிலவியது என்று கூறலாம்; அல்லது குடியும் கோனும் சேர்ந்த குடிக்கோன் ஆட்சி அன்று நடைபெற்றது என்றும் கொள்ளலாம்.

இந்நாளில் நம் நாட்டில் குடியாட்சி நிலவுகிறது; கோன் ஆட்சி மறைந்தது. பல ஆண்டுகட்கு முன்பே பாரதியார்,

" எல்லாரும் இந்நாட்டு மன்னர் "

என்று கூறினர். எதிர்காலத்தை நோக்கி அவர் அங்ஙனம் நுட்பமாகக் கூறிச் சென்றார். இதில் வியப்பு ஒன்றுமில்லை. ஆயின், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே—மன்னர் ஆட்சி தமிழகத்தில் சிறந்திருந்த அந்தக் காலத்திலேயே—ஒரு புலவர் நாட்டு மக்களை மன்னர்களாக மதித்தார் என்பதை எண்ணும்போது நமக்கு மகிழ்வு பிறக்கின்றது.

குடிமக்கள் தங்கள் கடமையை உணரவேண்டும் என அவர் வலியுறுத்தினர். குடிமக்களாகிய இந்நாட்டு மன்னர்களைப் பொதுவாக்கி அவர்தம் கடமையை உணர்த்தினுர்; நாட்டில் வாழும் அனைவரும் தங்கள் கடமையை உணரவேண்டும்; 'நமக்கு என்ன' என்ன இருத்தலாகாது எனக் குறித்துள்ளார்; அப்போதுதான் நாடு முன்னேறும் என நவின்ருர்; இன்னின்னுர், இன்னின்ன கடமைகளைச் செய்ய வேண்டுமென ஒவ்வொருவரையும் தனித்தனியாக அழைத்து அவரவர்கட்கு உரிய கடமைகளை அழகுற உணர்த்தினுர். அவர் தமக்கு மட்டும் விலக்கு விரும்பினுரில்லை; தம் கடமை என்ன என்பதையும் புலப்படுத்தியுள்ளார்.

"நல்ல பிள்ளையைப் பெற்றுச் செவ்வனே வளர்த்துக் காத்து உலகுக்கு அளித்தல் எனது தலைசிறந்த கடமை. அவனுக்கு உயர்ந்த கல்வியும் பிறவும் தந்து அவனைக் குணங்களில் சிறந்தவனுக, சான்ருேனுக ஆக்குதல் தந்தையின் கடமை. அவ்வாறு கல்வி கேள்விகளாலும் வீரத்தாலும் சிறந்த மகனுக்கு வேல் முதலிய கருவிகளை உறுதியுடையனவாகச் செய்து கொடுத்துச் செயல் வீரனுக அவனை விளங்கச் செய்வது கொல்லனின்—தொழிலாளியின்—கடமை. உலக நெறி, வாழ்வு நெறி ஆகிய இவற்றிலிருந்து விலகாது நேரிய நெறியில் செல்லும் நல்ல குடிமகனுக அவனை விளங்கச் செய்வது நாட்டு வேந்தனது கடமை". இத்துணைப் பயனும் பெற்ற அம்மகனுக்கு எதுவும் கடமை இல்லையோ எனில், உண்டு. அதையும் புலவர் அழகுறக் கூறியுள்ளார். "தன்னைச் சிறந்த மகனுகவும், சான்றவனுகவும், வீரனுகவும், நல்ல குடிமகனுகவும் ஒழுகச் செய்த அன்னையும் அப்பனும் கூடிய குடும்பத்திற்கும், தொழிலாளரும் நிறைந்துள்ள தன் தாய் நாட்டிற்கும் நன்மை தேடுகின்ற முறையில்—நாட்டிற்கு வருகின்ற தீங்கைப் போக்குகின்ற வகையில்—எதிரிகளை வென்று வாகை சூடுவதன் வாயிலாகத் தன் தாய்த் திருநாட்டைக் காக்க

வேண்டும் ; காத்து உயர்த்த வேண்டும். இது காளைக்கு—மகனுக்கு—உரிய கடமையாகும் ".

இந்நாட்டு மன்னர்களை நோக்கி அவர்க்கும் தமக்கும் உரிய கடமைகளாக அரிய கருத்தைக் கூறியவர் சங்க காலத்து வாழ்ந்த தமிழ்ச் சான்றோராம் அன்னை பொன் முடியார் என்பவர் ஆவர். பழந்தமிழ்த் தாயுள்ளம் நாட்டுப் பற்றில்—அதன் அடிப்படையான கடமை உணர்ச்சியில் எவ்வளவு உறைந்து நின்றது, பாருங்கள் ! மிகச்சில வரிகளில் மிகப்பலவான கருத்துக்களை அணி பெற வைத்துச்சென்ற அன்னை பொன்முடியாரின் நுண்மாண் நுழைபுலம் என்னே !

### அருஞ்சொற்பொருள்

ஆள்வினை - முயற்சி. கூற்று - கொள்கை. அசாவாமை - தளர்ச்சி யடையாமை. உப்பக்கம் - பின்புறம். உஞற்றுபவர் - முயற்சி செய் பவர். நுண் மாண் நுழைபுலம் - நுட்பமான சிறந்த அறிவு. வாகை சூடுதல் - வெற்றிமாலை அணிதல்.

### பயிற்சி

I. விடை கூறுக :

1. 'விதியையும் மதியால் வெல்லலாம்' என்னும் பழமொழியின் பொருள் யாது?
2. 'ஊழ்வினையை வெல்லலாம்.'—இதற்கு வள்ளுவர் கூறும் வழி யாது ?
3. உலகில் வாழ விரும்பும் மக்கள் வேண்டுவன யாவை? அவை எங்ஙனம் அமைந்திருத்தல் வேண்டும் ?
4. யார் யாருக்கு என்னென்ன கடமை உரியது? பொன்முடியார் இதை எவ்வாறு கூறியுள்ளார் ?

II. 1. கீழ்வருந் தொடர்களைப் பிரித்துக் காட்டுக :

கருத்தறிந்து, பழமொழி, வரையறுத்து, தடுப்பதற்குரிய, தோல்வியடைய, பாடுவதன்று, போகவில்லை, நிறைந்துள்ள.

2. 'கடமை உணர்ச்சி' என்னும் தலைப்பில் இப்பாடப் பொருளைச் சுருக்கி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 12. சமுதாயநலத் திட்டம்

புலவர் சா. மருதவாணன் அவர்கள்

[இக்கட்டுரை ஆசிரியர் கோவை - தூய மைக்கேல் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர், பள்ளிப் பாட நூல்கள் பலவற்றை எழுதிவருப வர்; திறமை மிகுந்த எழுத்தாளர்; பேச்சாளர்.]

இயற்கை வளமும் மக்கள் வலிமையும் அறிவும் ஆற்றலும் எத்துணைப் பெருக்கமாக இருப்பினும், அவை திட்டமிட்ட ஒழுங்கான வகையில் பயன்படுத்தப்பட்டா லன்றி நாடு நலிவு நீங்கிப் பொலிவுபெறவியலாது; வளங் கொழித்து வறுமை அகற்றவியலாது; தம் தேவையை நிறைவேற்றித் திருத்தம் பெறவியலாது. இவ்வுண்மை உணர்ந்தே நமது அரசினர் ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்துள்ளனர். சமுதாய நலத்திட்டமும் அவற்றின் ஒரு பகுதியேயாகும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சமுதாய நலத் திட்டம் ஒரு செயல் முறையாகவும் நாட்டு நலப்பரப்புப் பணித்திட்டம் ஒரு கருவியாகவும் ஒன்றேடொன்று பொருந்துமாறு பொற்புறு வகையில் அமைக்கப்பட்டன. இத்திட்டங்களின் முதல் நோக்கம், நாட்டுப்புறத்தின் உளவியல் வாழ்க்கையையும் பொருளியல் வாழ்க்கை யையும் உயரிய வளர்ச்சி முறையில் ஒழுங்குற மாற்றி யமைப்பதேயாகும். இந்த இரண்டு திட்டங்களின் செயல்முறைப் பங்காக எடுத்துக்கொள்ளப்படுவது சமுதாய நல வளர்ச்சித் திட்டம்.

அரசினர், பொதுவாக நாட்டுநலத் திட்டங்களை வகுக் கும்போது நிகழ்கால வருங்கால நோக்குடன் வகுத்தல் வேண்டும்; பலதரப்பட்ட மக்களின் நிலையான பொருளா தார வாழ்விற்கும் உறுதி தரவேண்டும்; சிறப்பாகப் பெரும்பான்மையினரான ஏழை மக்களின் ஏற்றத்திற்குத் துணை நல்குவதாய் அமையவேண்டும்; மக்களிடத்தில் ‘முன்னேறுவோம், முன்னேறவேண்டும்’ என்னும் தன் னம்பிக்கை வளரவேண்டும்; அதை வளர்க்கும் வகையில்

திட்டங்கள் தீட்டப்படவேண்டும். சமுதாய மறுமலர்ச்சிக் கான எழுச்சிகளையும் திறமைகளையும் செயல்முறைகளை யும் மக்கள் செம்மையாக வளர்த்துக்கொள்ள வேண்டும்; புதிய உற்பத்தி முறைகளை ஊறுபாடின்றி ஓங்கச் செய்ய வேண்டும்; அறிவியலை வாழ்க்கையில் பயன்படுத்தக் கற்றுக்கொள்ளவேண்டும். இவற்றிற்கான அடிப்படையே நமது சமுதாயநலத் திட்டமாகும். சமுதாயம் சால் போடு அமைய அரசு அரும்பணி ஆற்றவேண்டும் என்பதை மறவாது நினைவிற் கொள்ளவேண்டும்.

சமுதாயநல வளர்ச்சித் திட்டத்தின்கண், ஒவ்வொரு சமுதாயநல வளர்ச்சி வட்டாரமும் அறுபதினாயிரம் முதல் எழுபதினாயிரம் வரையுள்ள மக்கள் தொகையைக் கொண்டது; அளவில் பரந்துகிடக்கும் பல சிற்றூர்களைத் தன்னகத்தே கொண்டது.

இன்றைய நிலையில் நமது தாய்நாட்டின் பொரு ளியல் வாழ்க்கைக்கு வேளாண்மையே அச்சாணியாக அமைந்துகிடப்பது. ஆதலின், சமுதாயநலத் திட்டம் பயிர்த்தொழில் முன்னேற்றத்தையே சிறந்த கூறாகக் கொண்டுள்ளது. அரசினர் ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒவ்வொரு பயிர்த்தொழில் செயல்முறையாளரை அமைத் துள்ளனர். அவர்கள் பயிர்த்தொழிலுக்குத் தேவை யான கருவிகளைக் காலத்தில் கொடுத்துதவுகின்றனர்; புதுமுறைக் கருவிகளைப் பயன்படுத்தும் பொன்னான முறையை நடைமுறையில் செய்துகாட்டி நல்லுதவி புரிகின்றனர்; நல்ல எருக்களையும் உரங்களையும் நயமாகச் சேகரித்து நன்கு வழங்குகின்றனர்; சிற்றூர் விதைப் பண்ணைகளின் வாயிலாகப் பொறுக்கு விதை களைப் பெருக்கி உழவர்களுக்கு உறுதுணை செய் கின்றனர்; தரிசு நிலங்களைப் பண்படுத்திப் பயிரிட வழி செய்கின்றனர். பலவிடங்களில் கனி மரங்களும் காய் கறிச் செடிகளும் பயிராக்கப்படுகின்றன.

விலங்கு மருத்துவர் வேளாண்மைக்கு இன்றி யமையாத கால்நடைகளை நல்ல முறையில் பாதுகாத்தல், இனப்பெருக்கம் செய்தல், பிணி தடுத்தல் முதலியவற்

றைச் செய்து பயனுறு பணியாற்றுகின்றனர் ; கோழிப் பண்ணைகளைத் தோற்றுவித்து நாட்டின் பொருளாதாரத்தைப் பெருக்குகின்றனர். மக்கள் நோய்நொடியின்றி வாழச் சாக்கடைக்குழி வெட்டுதல், மலவறை கட்டுதல், கழிநீர் வடிகால் அமைத்தல் முதலிய வேலைகள் மேற் கொள்ளப்படுகின்றன.

வளர்ச்சித் திட்டங்கள் வாகை பெறுவதற்கு நம் நாட்டு மக்களுடைய உடல்நலமும் அறிவுநலமும் ஒழுங்கு பெறல் வேண்டும். இவற்றைக் கருத்துட்கொண்டே ஒவ்வொரு வட்டாரத்திலும் பயிற்சிபெற்ற மருத்துவரும், சமுதாயக் கல்வி அமைப்பாளரும், திரைப்படம் காட்டு பவரும், பொறியியலாரும் அமர்த்தப்பட்டுள்ளனர். மருத்துவர் சிற்றூர் மக்களின் பிணி களைய மருந்துகளை வழங்குகின்றார். கல்வியமைப்பாளர் கண்ணளிக்கும் தொடக்கப் பள்ளிகளை நிறுவுகின்றார் ; அத்துடன் ஊர் மக்களின் அறிவாற்றல் வளரவும், ஓய்வு நேரத்தை ஒழுங்கான முறையிலே பயன்படுத்தவும் பயிற்சியளிக் கின்றனர். மகளிர் நலங்கருதி மகளிர் மன்றங்கள் அமைக்கப்பட்டு, அவைகளின் வாயிலாக மகளிர்க்கு இல்லற வாழ்வியற் கல்வி, குணம் நல்கும் குடும்பத் திட்டம், மணம் பரப்பும் மகளிர் முன்னேற்றத் திட்டம் முதலியன முறையாகக் கற்பிக்கப்படுகின்றன. பொறி யியலார் சிற்றூர்களுக்கிடையே போக்குவரவு செம்மை யுறச் சாலைகளையும் பாலங்களையும் அமைக்கின்றனர் ; குடிநீர் வசதி இல்லாத ஊர்களில் பெரிய பெரிய பொதுக் கிணறுகளை வெட்டுகின்றனர். திரைப்படம் காட்டுபவர் சமூகம், உழவு, துப்புரவு, கல்வி வளர்ச்சி, அறிவியல் வளர்ச்சி போன்ற படங்களைக் காட்டுகின்றனர். ‘கூட்டுறவே நாட்டுயர்வு’ என்பதை உணர்ந்து கூட் டுறவு அலுவலர் கூட்டுறவுப் பண்ணைகளை அமைத்துத் தொழில்களை வளர்க்க ஆவன செய்கின்றனர் ; சமுதாயத் தில் இடைத்தரகர்களை ஒழித்துத் தேவையான பொருள் களை எளிதில் பெறவும், மிகுதியான பொருள்களை நல்ல விலைக்கு விற்கவும் துணைசெய்கின்றனர்.

இப்பொழுது நாட்டுநலத் திட்டங்கள் நற்பயனை அளித்துவருகின்றன. காரிருளில் மூழ்கிக் கிடந்த சிற்றூர்கள் மின்விளக்குக்களால் கவின் பெற்று இலங்கு கின்றன; பயன்தரும் படிப்பகங்களையும் பள்ளிகளையும் நூல் நிலையங்களையும் பாங்குறப் பெற்றுப் பளிச்செனத் திகழ்கின்றன; பருகுவதற்குப் பளிங்கன்ன நீரையும் உலவுவதற்கு உயரிய பூங்காக்களையும் பெற்றுப் பொலி வுடன் விளங்குகின்றன; சாலைகளையும் சோலைகளையும் பெற்றுக்காட்சியளிக்கின்றன. எல்லாரும் கற்று இன்புறு கின்றனர்; உலகியலை ஓரளவு உணர்ந்து ஒற்றுமை யோடும் நல்ல உணர்வோடும் வாழ்கின்றனர். ஆதலின், அரசினரின் சமுதாயநலத் திட்டம் வெற்றியுற நம்மாலிய லும் நற்பணிகளைச் செய்வோமாக! நாட்டைக் கேட்டி னின்றும் மீட்போமாக! நல்வாழ்வு பெறுவோமாக!

### அருஞ்சொற்பொருள்

பொலிவு - அழகு. சீர் - சிறப்பு, உயர்வு. ஏற்றத்திற்கு - உயர் விற்கு. செம்மையாக - ஒழுங்காக. ஊறுபாடு - துன்பம், இடையூறு. வேளாண்மை - உழவு. கூறு - பகுதி. பொன்னனை - சிறந்த, உயர்ந்த. கனிமரம் - பழம்தரும்மரம். வாகை - வெற்றி. பொறியியலார் - இன் சினியர். துப்புரவு - சுத்தம்.

### பயிற்சி

I. விடை கூறுக:

1. அரசினர் ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்த நோக்கத்தை விளக்குக.
2. சமுதாயநலத் திட்டம் எவ்வாறு அமைக்கப்பட்டது? அஃது ஏன் அமைக்கப்பட்டது?
3. நாட்டுநலத் திட்டங்கள் எவ்வாறு வகுக்கப்படல் வேண்டும்?
4. சமுதாயநலத் திட்டத்தில் மக்கள் பங்கினைக் குறிப்பிடுக.
5. சமுதாயநலத் திட்டத்தின் அளவைக் கூறுக.

II. 1. சமுதாயநலத் திட்டத்தில் பங்குபெறும் அலுவலர் பணிகளைப் பதினைந்து வரிகளில் தொகுத்தெழுதுக.

2. சேர்த்துக் கூறுக:
எத்துணை + பெருக்கம், ஐந்து + ஆண்டு, ஐந்தாண்டு + திட் டம், அழகு + உற, மாற்றி + அமைப்பது, தன் + நம்பிக்கை, ஊறுபாடு + இன்றி, நூறு + ஐம்பது, காய்கறி + செடிகள்.

3. நாட்டுநலத் திட்டங்களால் ஏற்பட்ட பயன்களை எழுதுக.

# 13. பயிர்வண்டும் படர்கொடியும்

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள், பி.ஏ., பி.எல்., டி.லிட்.

[இப்பேராசிரியர் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராயிருந்தவர்; சொல்லின் செல்வர்; சிறந்த ஆராய்ச்சியாளர்; இனிய எளிய செந்தமிழ் நடை எழுதுவதில் சிறப்புற்றவர்.]

"வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கை
கொம்பார் சோலைக் கோலவண் டியாழ்செய் குற்றாலம்"

என்று பிள்ளைப் பெருமான் போற்றும் பெருமை வாய்ந்த திரிகூட மலையின் ஒருசார் ஓங்கி வளர்ந்த ஒரு வேங்கை மரம் விண்ணளாவி விளங்கிற்று. அதன் மருங்கே முளைந்தெழுந்த ஒரு மெல்லிய பூங்கொடி அவ் வேங்கையின் அழகிய கொம்புகளில் பின்னிப் படர்ந்து செழித்து வளர்வதாயிற்று. மஞ்சு தோய வளர்ந்து மாண்புற்று இலங்கிய வேங்கையின்மீது அவ்விளங்கொடி வரிவரியாய்ச் சுற்றி விளங்கிய கோலம் கண்டோர் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் தன்மை வாய்ந்து விளங்கிற்று. அவ்வேங்கையின் பூங்கொம்பு களில் தீங்குயில்கள் மணந்து மகிழ்ந்தன. வண்டினங் கள் பண்ணமைந்த இசைபாடி மலர்களின் மதுவை மாந்திக் களித்தன.

"தீங்குயில் மணந்தேன் துஞ்சவண்டு பாண்செய
வேங்கை நின்று பொன்உகுக்கும்."

என்று சிந்தாமணி ஆசிரியர் வியந்துரைத்த இயற்கை அழகு அளவிலா உவகையளித்தது.

அவ்வேங்கை மரத்தின் அடிப்புறத்தில் ஆழ்ந்து அகன்ற ஓர் ஆறு அணிபெறச் சென்றது; மலையிடைப் பிறந்து, சவியுறத் தெளிந்து, ஆழ்ந்து அமைந்து ஆன்றோர் மனம்போல் அவ்வாறு அழகுற நடந்து சென்றது. அம்மலையில் வீசிய மெல்லிய இளங்காற்றில் வேங்கையின் பூங்கொம்புகள் அசைந்து பொன்மலர் சொரிந்தன. இளங்கொடி வேங்கையின் கிளைகளில் இனிதாய்த் துவண்டது. இளந்திரைகள், ஆற்றில்

அலைந்து இன்புற்று இலங்கின. அப்போது சேய்மையில் ஒல்லென ஓர் ஒலி கிளம்பியது. அதன் தன்மையை மனத்தாற் கருதுமுன்னரே கடுங்காற்று வேகமாய்ச் சுழன்று வீசத் தலைப்பட்டது. விண்ணுக்கடங்காமல் வெற்புக்கடங்காமல் வீசிய புயல் காற்றின் வெம்மையால் மலைப் பொருள்கள் எல்லாம் மயங்கிச் சுழன்றன. அச் சமயம் புயலின் வேகத்திற்கு ஆற்றுது மலையே நிலை குலைந்தது. வெறி கொண்ட புயலில் வேங்கை மரம் வேரொடு அற்று அருகே சென்ற ஆற்றில் விழுந்தது. வானுற ஓங்கி வளம்பெற வளர்ந்து பூத்துச் செழித்து விளங்கிய வேங்கை விழுவதைக் கண்ட எமது உள்ளம் வெதும்பியது. உலகப் பொருள்களின் நிலையாமையை நினைந்து நெஞ்சம் குழைந்தது.

இவ்வாறு வேங்கை சாய்ந்து வேகமாய்ச் செல்லும் ஆற்றில் விழுந்தபோது, அதனைச் சுற்றிப் படர்ந்திருந்த மெல்லிய கொடியும் வேரற்று அம்மரத்தோடு சாய்ந்தது. மது உண்ண வந்திருந்த வண்டுகள் நிலையழிந்த வேங்கையை நீத்து ஆர்த்தெழுந்து அயல் நின்ற மற்றோர் மலரில் சென்று சேர்ந்தன. இதனை நோக்கியபோது, மதுவுண்டு மயங்கும் வண்டின் இழிகுணம் மனத்தை வாட்டி வருத்தியது.

> “ காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து
> மேலாடு மீனில் பலராவர்—ஏலா
> இடர்ஒருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட
> தொடர்யுடையேம் என்பார் சிலர்.”

என்னும் பெரியார் மொழிகளின் பொருளைத் தெள்ளிதில் தெரிந்தோம். கெடுமிடத்துக் கைவிடும் கருவண்டு போவாது பெருந்துயர் நேர்ந்தபோதும் பிரியாத பெருந் தன்மைவாய்ந்து திகழ்ந்த பூங்கொடி அருங்குல மங்கையர் போல் அமைந்து விளங்கிற்று. வேரூன்றி முளைத்த இடத்தினின்று படர்ந்து 'போந்து வேங்கையைப் பற்றித் தளிர்ந்து வளர்ந்த கொடியின் தன்மை, மணப்பருவம் வாய்ந்த மங்கை பிறந்த மனையினின்றும் போந்து தலை மகனைச் சேர்ந்து வாழும் தகைமையில் அமைந்திருந்தது.

பூங்கொடி படர்வதற்கு ஏற்ற கொழுகொம்பாய் அமைந்த பெருமைசால் வேங்கையின் தோற்றம், ஆண்மையும் பெருமையும் பொருந்தித் திகழும் தலைமகனது விழுமிய கோலம்போல் விளங்கிற்று. அவ்வேங்கையில் நன்குயப் படர்ந்த அதன் கிளைகளுக்குப் புதியதோர் அழகளித்த கொடியின் கோலம், தலைமகனுடன் ஒன்றி வாழ்ந்து இல் வாழ்க்கைக்கு அழகளிக்கும் குலமங்கையின் குணத்தை விளக்கி நின்றது. இன்னும் வேங்கை துயர் உற்று ஆற்றில் விழும் நிலையில் அதனோடு தானும் வீழ்ந்து துயர் உற்ற கொடியின் தன்மை, தலைவன் துயருறும் போது தான் துயருறும் நிறை அமைந்த மங்கையின் மனப்பான்மையை விளக்கி நின்றது. இத்தகைய பெருமை, கற்பமைந்த மாதர் வாழ்க்கையில் கவின்பெற விளங்கக் காணலாம்.

தேனடைந்த சோலைத் திருநாடு துறந்து கானகம் செல்ல இசைந்த கமலக் கண்ணன், தலைமகளாகிய சீதை யிடம் விடை பெறுமாறு அவள் மாளிகைக்குச் சென்றான். அங்கு அறமே உருவாயமைந்த திருமகளைக் கண்டு, "மாதே, இணையற்ற என் தம்பி இந்நாட்டை அரசாள் வான். நான் தாய் தந்தையரது ஆணையைத் தலைமேற் கொண்டு வெளியே போந்து மலைவளங்கண்டு வருவேன். நான் வரும் அளவில் நீ வருந்தாதிரு," என்று மொழிந் தான். அம்மாற்றம் கேட்ட மங்கை நாயகன் வனம் நண்ணலுற்றான் என்றேனும், நாடாளும் நற்பதத்தை இழந்தான் என்றேனும் வருந்தினாள் அல்லள். ஆயினும், "நீ வருந்தாதே; நான் உன்னை விட்டுப் பிரிவேன்," என்று நாயகன் உரைத்த சொல் நஞ்சுபோல் மங்கையின் நெஞ்சை நலிவுறச் செய்தது.

"நாய கன்வனம் நண்ணலுற் றானென்றும்
மேய மண்ணிழந் தானென்றும் விம்மலள்
நீவ ருந்தலை நீங்குவன் யானென்ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள்"

என்று கவியரசராகிய கம்பர் மங்கையின் மனப் பான்மையை மாண்புற விளக்கிப் போந்தார். இவ்வாறு

மயங்கித் தளர்ந்த மங்கையை நோக்கி இராமன், "மாதே, பஞ்சிலும் மெல்லிய உன் கமல பாதம் வெம்மை நிறைந்த கானகத்தில் தோய்ந்து வருந்தும்; கதிரவன் கொடுமையால் கானக் கற்களெல்லாம் கனல் உமிழும்; அக்கொடிய சூடு உன்னுல் தாங்குதற்கரிதாகும்," என்று வனத்தின் வெம்மையை மங்கை அறியுமாறு எடுத்துரைத்தான். அப்போது மையறு மனத்தாளாய மங்கை, "ஐய, நின் பிரிவினும் சுடுமோ அப்பெருங்காடு?" என்றும், "அத் துன்பத்திற்கு இணையாய துன்பம் வேறில்லை" என்றும் கூறினுள். தலைவனைப் பிரிவதே பெருந்துன்பம் என்று நிறை அமைந்த மாதர் கருதுவர் என்பதற்குச் சீதை ஒரு சிறந்த சான்றாய் அமைகின்ருள்.

இவ்வாறே கலியின் கொடுமையால் நாடும் வீடும் இழந்து, கல்லும் முள்ளும் நிறைந்த கானகம் நோக்கிச் சென்ற நளன், தன்னேடு போந்த தமயந்தியின் மென்மை நோக்கி மனம் நொந்து விதர்ப்ப நாட்டிற்குச் செல்லும் வழியைக் கண்டபோது, "மாதே, உன் தந்தையின் ஊருக்குச் செல்லும் வழி இதுவே" என்று எடுத்துரைத்தான். அது கேட்ட மங்கை மனம் பொருது அழுது,

"ஆங்கது கேட்டலும் அழுது மாழ்கிநொந்
தீங்குநின் அடியனேன் பிழைத்த தியாதுகொல்
பூங்கழற் குரிசிலோய் பொறியி லேந்தனை
நீங்கவோ இவ்வுரை நிகழ்த்தினுய் என்ருள்"

என்று கவி கூறுமாறு, தயங்கித் தலைவனைப் பிரியாது பின் தொடர்ந்து சென்ருள் என்பது இனிது அறியப்படுகின்றது.

இன்னும் பெற்ருேர் சேர்த்துவைத்த பெருஞ் செல்வம் எல்லாம் பொது மாதிடம் இழந்து வறியனுய், மாடமதுரையில் மனையாளது மணிச்சிலம்பை விற்று வாணிகம் செய்யுமாறு புகார் நகரினின்றும் போந்த கோவலனைப் பிரியாது பின்னே சென்று, கடுமையார் கானகத்தில் கமலபாதமும் மெல்லிய மேனியும் தளர்ந்து

வருந்த, அத்துயரைப் பொறுத்துத் தலைவனது துயரைக் கண்டு தளர்ந்த கண்ணகியின் பெருமையை,

“ கடுங்கதிர் வெம்மையில் காதலன் தனக்கு
நடுங்குதுயர் எய்தி நாப்புலர வாடித்
தன்துயர் காணுத் தகைசால் பூங்கொடி ”

என்று சிலப்பதிகாரம் இனிது எடுத்துரைக்கின்றது. இவ்வாறு மண்மகளும் அறியாத வண்ணச் சீறடிகள் வருந்தக் கானகத்தில் நடந்து கணவன் துயர்களைந்த கண்ணகியின் பெருமையைக் கோவலன் கண்டு மனங் குழைந்தான் ;

“ நாணமும் மடனும் நல்லோர் ஏத்தும்
பேணிய கற்பும் பெருந்துணை யாக
என்னெடு போந்தீங் கென்றுயர் களைந்த
பொன்னே கொடியே புனைபூங் கோதாய் ”

என்று புகழ்ந்து போற்றினுன்.

இவ்வாறு கணவனைப் பிரியாத பெருவாழ்வு வேண்டி இறைவனை வாழ்த்துவதே நிறை அமைந்த மாதர் நெறி யாகும். இத்தகைய மாதர் கணவரோடு இன்பமும் துன்ப மும் ஒருங்கே நுகர்ந்து, அவர் ஆவி துறப்பின் அந் நிலையே உயிர் நீப்பர் என்பதும் அறியப்படுகின்றது. நீரில் அமைந்து வாழும் நீலமலர், அந்நீர் வற்றியபோது அவ்விடத்தே வற்றி உலரும் தன்மைபோல், கற்பமைந்த மங்கையர் கணவன் வாழுங் காலத்து அவனுடன் இனிது வாழ்ந்து, அவன் அழியும் காலத்துத் தாமும் அக மகிழ்ந்து அழிவர். இத்தன்மை வாய்ந்த குலமாதர் நெறி யைக் கொடியின் தன்மையோடு ஒப்பு நோக்கிக் கம்பர் அமைத்துள்ள கற்பனை, தேன் எனத் தித்திக்கும் தகைய தாகும்.

“ நிலம ரங்கிய வேரோடு நேர்பறித்
தலமலருந்துயர் எய்திய வாயினும்
வலம ரங்களை விட்டில மாசிலாக்
குலம டந்தையர் என்னக் கொடிகளே ”

என்னும் கம்பர் கவியில் அமைந்துள்ள சொல் நயமும்

பொருள் நயமும் ஆயுந்தோறும் அளவிறந்த இன்பம் பயப்பனவாகும்.

ஆகவே, அற்ற குளத்து அறுநீர்ப் பறவை போல், இடருற்ற போது நீங்கும் வண்டனையாரோடு இணங்காது இணைபிரியா இயல்பு அமைந்த கொடியனாரைத் துணையாகக் கோடலே இருமையும் இன்பம் தருவதாகும் என்னும் உண்மை இனிதறியப்படும்.

### அருஞ்சொற்பொருள்

வம்பு - நறுமணம். சவி - அழகு. மருங்கு - பக்கம். மஞ்சு - மேகம். மாந்துதல் - அருந்துதல். காலாடு போழ்து - செல்வம் மிகுந்த பொழுது. கழிகிளைஞர் - மிகுந்த உறவினர். ஈர்ங்குன்றம் - குளிர்ந்த மலை. தலைமகன் - கணவன். கவின் - அழகு. மை - குற்றம். ஏத்து - புகழ்.

### பயிற்சி

I. விடை கூறுக :

1. ஆசிரியர் சோலையில் கண்ட காட்சிகள் யாவை ?
2. மதுவுண்டு மயங்கும் வண்டும் மரத்தை விடாமற் பற்றிப் படர்ந்திருக்கும் பைங்கொடியும் நமக்குக் காட்டும் உண்மைகள் யாவை ?
3. சீதையின் மனத்தை நலிவுறுத்தியது யாது ?
4. தமயந்தி, கண்ணகி ஆகிய இவர்களின் உயர் பண்புகள் யாவை ?

II. 1. கீழ் வருவனவற்றைப் பிரித்துக் காட்டுக :
செந்தமிழ், பூங்கொடி, வியந்துரைத்த, அழகுற, அம்மரம், வேரூன்றி, இந்நாடு, கமலபாதம், இவ்வுரை.

2. இப்பாடப் பொருளைச் சுருக்கி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை எழுதுக.

# 14. எங்கள் சொற்பயிற்சி மன்றம்

திரு. சுப. அண்ணாமலை அவர்கள், எம்.ஏ., எம்.லிட்.

[இக்கட்டுரை ஆசிரியர் மதுரைத் தியாகராசர் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராய் இருப்பவர்; நல்ல எழுத்தாளர்; சிறந்த பேச்சாளர்.]

நான் நல்லூரில் இருக்கும் வள்ளலார் உயர்நிலைப் பள்ளியில் பத்தாம் வகுப்பிற் படிக்கும் மாணவன். என் பெயர் அமுதன். என் சொந்த ஊர் நல்லூரிலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள திருவருட்பட்டி. அங்கிருந்து நான் நாள்தோறும் நடந்தே பள்ளிக்கு வந்து மீளுவேன். நடப்புக் கல்வியாண்டு முடியப் போகிறது. இறுதித் தேர்வு நெருங்கிக்கொண்டிருக்கிறது. ஆதலால் நான் நன்கு படித்துவருகிறேன்.

எங்கள் வகுப்புச் சொற்பயிற்சி மன்றத்தில் நானும் ஓர் உறுப்பினனாக இருந்தேன். அந்த மன்றம் நடப்புக் கல்வியாண்டின் தொடக்கமாகிய சூன் மாதத்திலிருந்து சென்ற வாரம் வரையில் வெற்றியுடன் நடைபெற்று இனிது முடிந்தது. சூன் மாதம் 20ஆம் நாள் வகுப்புக்கள் முடிந்தவுடன், எங்கள் வகுப்பாசிரியர் திரு. தாமரைக் கண்ணனார் தலைமையில் அம்மன்றத்தின் தேர்தல் நடைபெற்றது. எங்கள் வகுப்பு மாணவர்களில் உயரமானவரும் இனிமையாகப் பேசுபவருமான திரு. வளவன் தலைவராகவும், எறும்புபோல் சுறுசுறுப்பாக இருக்கும் திரு. நாவலன் செயலாளராகவும் தேர்ந்கெடுக்கப் பட்டனர். மற்ற மாணவர்கள் அனைவரும் மன்ற உறுப் பினராளேம். எங்கள் வகுப்பாசிரியரே மன்றத்தின் பொறுப்பாசிரியராக அமைந்தார்.

எங்கள் சொற்பயிற்சி மன்றத்தின் பெயர் 'செந்நாப்போதார் சொற்பயிற்சி மன்றம்' என்பது. மன்றத்தின் முதற்கூட்டம் சூன் மாதம் 28ஆம் நாள் மாலை ஐந்து மணி அளவில் தொடங்கி நடைபெற்றது. திரு. வளவன் தலைமையேற்றார். 'நாட்டுப் பற்று'

என்னும் பொருள்பற்றி மாணவர் நால்வர் பேசினர். அவர்களில் ஒருவர் நன்ருகப் பேசினுர். ஆயின், அவர் அடிக்கடி கைகளை ஆட்டியதையும் ஒரு நிலையில் நில்லாமல் அசைந்து ஆடியதையும் நெற்றியை அடிக்கடி துடைத்துக்கொண்டதையும் பார்த்து மாணவர்கள் சிரித்தனர். மற்ருெரு மாணவர் என்ன பேசினுர் என்பதே பலருக்குத் தெரியாது. ஏன் எனில், அவர் பேச்சுப் பலருக்குக் கேட்கவில்லை. இன்னுமொரு மாணவர் தலை குனிந்துகொண்டே பேசினுர். அவர் பேசியது தமிழ் மொழிதான என்பதே பலருக்கு ஐயமாக இருந்தது. பொதுவாக அந்த நால்வரின் பேச்சினின்று நாம் நமது நாட்டைத் தாயாக நினைத்து வணங்கவேண்டும் என்று தெரிந்துகொண்டோம்.

பேச்சு நடைபெற்ற பொழுது அவையினரில் ஒருவராக அமர்ந்திருந்த பொறுப்பாசிரியர் மேடையை நோக்கி நடந்தார். நாங்கள் ஆவலுடன் நிமிர்ந்திருந்து செவிகளைக் கூர்மையாக்கிக்கொண்டோம். அவர் பேச்சின் சுருக்கம் வருமாறு :

"அன்புள்ள மாணவர்களே, இன்று பேசிய நால்வரும் நாட்டுப்பற்றைக் குறித்தே பேசினர். அவர்கள் பேச்சால் உங்களுக்குப் புதிய உணர்ச்சி உண்டாகவில்லை. நாட்டுப்பற்றை அறியாத மாணவர்கட்கு இப்பேச்சைக் கேட்டவுடன் புதிய பற்று உண்டாகவில்லை. இதுவரையில் நீங்கள் அறியாத புதிய கருத்து எதையும் பேச்சாளர்கள் கூறவில்லை. 'ஆசிரியர் பேசச் சொல்கிருர் ; ஏதேனும் பேச வேண்டுவது நம் கடமை' என்று கருதிப் பேசியதுபோல் அவர்கள் பேச்சுக்கள் இருந்தன. மேடையில் பேசுவது கடமைக்காக அன்று; அவையிற் கூடியிருக்கும் மக்களுக்குத் தெரியாத செய்திகளை அவர்கள் மனங் கொள்ளுமாறு எடுத்துரைத்து, அவர்கள் கொண்டுள்ள தவருன எண்ணங்களை நயமாக மாற்றித் தன் கருத்தை ஏற்றுக்கொள்ளச் செய்வதே பேச்சாளனின் வேலை. அவையினர் அவன் கருத்தை உடனே ஏற்றுக்கொள்ளாவிடினும் அதைப்பற்றி எண்ணிப்பார்க்

கும் ஆவலையேனும் அவர்கள் மனத்தில் அவன் உண்டாக்கவேண்டும். அதற்கு அவன் செய்ய வேண்டுவது என்ன?

"மேடையிற் பேசவிருக்கும் செய்திகளைப் பற்றிப் பேச்சாளன் இரண்டு மூன்று நாட்களேனும் சிந்திக்க வேண்டும். உயர்நிலைப்பள்ளிச் சிறுவர்க்குச் சொந்தமாக எண்ணிப்பார்க்கும் திறமை இன்னும் வளரவில்லை. அவ்வாறு எதிர்பார்க்கவும் இயலாது. ஆதலால் நீங்கள் பள்ளி நூலகத்திற்குச் சென்று, குறிப்பிட்ட ஒரு பொருளைப்பற்றி, உதாரணமாக, 'நாட்டுப் பற்று' என்னும் பொருளைப்பற்றி, அண்ணல் காந்தியடிகள், திரு. வி. க., பண்டித நேரு போன்ற அறிஞர்கள் என்ன எழுதியுள்ளார்கள் என்பதைத் தெரிந்து குறிப்பு எழுதிக் கொள்ளவேண்டும்; அக்குறிப்பை வைத்து, மக்கள் எவ்வாறு நடந்துகொண்டால் நாடு நலமடையும் என்பதைப் பற்றி நீங்கள் ஒரு முடிவிற்கு வரவேண்டும். அதன் பிறகு நீங்கள் பேச வேண்டும் செய்திகளை முறைப்படுத்திப் 'பேச்சுக் குறிப்பு' எழுத வேண்டும். 'நாட்டுப்பற்று' என்னும் பொருளைப்பற்றிய குறிப்புப் பின்வருமாறு அமையலாம்:—

1. தாய்நாடு என்பதன் விளக்கம்: தாய் தந்தையர் பிறந்து வாழ்ந்த நாடு—தாய் தந்தையர் கையாளும் மொழியைப் பேசும் பல மக்கள் வாழும் நாடு—உணவு, உடை, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றில் தாய் தந்தையரை ஒத்த மக்கள் வாழும் நாடு.

2. நாட்டுப் பற்றின் இன்றியமையாமை: தாய் போலச் சிறந்தது தாய்நாடு. இந்த மண்ணில் ஊறிய பண்பாடும் அறிவுமே நம்மிடம் அமைகின்றன—நாட்டின் வளமும் தாழ்வும் அதன் மக்களைப் பொறுத்தவை—பகைவரிடம் சிக்கி நாடு அடிமைப்படாமல் காத்தல்—படைப் பயிற்சி—கொடி வணக்கம்—நாட்டைப் பிறர் பழித்தால் அவர்க்குத் தக்க படிப்பினை கற்பித்தல்.

3. நாட்டுப்பற்றுக் கொண்டு வாழ்ந்த பெரியார்கள்: காந்தியடிகள், வ. உ. சி., திலகர், பாரதியார், ஆபிர

காம் லிங்கன்—அவர்கள் அடைந்த புகழுக்குக் காரணம் நாட்டுப் பற்றே.

4. நாட்டுப் பற்றினுல் விளையும் நன்மைகள்: உரிமை நல்லாட்சி—எண்ணவும் பேசவும் எழுதவும் உரிமை—மக்களின் நல்வாழ்வு—தொழில் வளம் பெருகுதல்—'எங்கள் நாடு' என எண்ணுவதால் உண்டாகும் ஊக்கம் நாட்டின் நல்வாழ்வுப் பயிருக்குப் பாய்ச்சும் நீராகும்.

இவ்வாறு எழுதிய குறிப்பைக் கையில் வைத்துக் கொண்டு குறிப்புக்களை விளக்கிக் குறித்த நேரத்தில் பேசி முடிக்க வேண்டும். பேச்சுக்கு அழகு சுருக்கமே. சில சொற்களில் கருத்தை விளக்கத் தெரியாதவர் பேச்சாளர் அல்லர். பொருளுக்குத் தொடர்பில்லாதவற்றைப் பேசுவதையும், குறித்த நேரத்தில் முடிக்காமல் அரை குறையாக விட நேருவதையும் 'பேச்சுக் குறிப்பு' வைத்துக்கொள்ளும் பழக்கத்தால் தடுக்கலாம். பேச்சை எழுதி வைத்துப் படிக்கலாகாது. பேச்சாளன் தான் சொல்லும் சொற்களைத் தெளிவாக ஒலிக்க வேண்டும். மொழியின் பயன் ஒலியில்தான் அமைந்திருக்கிறது. 'நாட்டுக்கு உழைக்க வேண்டும் நல்லவர்களைக் கண்டு கொள்ள வேண்டும்' என்பதைச் சொல்லும் ஒருவன், 'கொள்ள என்ற சொல்லைக்' 'கொல்ல' என ஒலித்தால் எவ்வளவு தவறு நேரிடும்? சொற்களைச் செவ்வையாக ஒலிக்க அறியாதவன் மேடையில் வாய் திறவாமல் இருப்பதே நலம். பேச்சாளன் அவையினரைப் பார்த்து மலர்ந்த முகத்துடன் நின்று பேசவேண்டும்; தலை குனிந்து தரையைப் பார்ப்பதோ, கூரையையும் வானத்தையும் கூர்ந்து பார்ப்பதோ, பரக்க விழிப்பதோ கூடாது; ஒரு நிலையில் நின்று கண்களை மட்டும் அவை முழுவதும் செலுத்துவது முறையே தவிர, உடலை நான்கு புறமும் திருப்பி நடனம் ஆடுவது அழகன்று. கையையும் ஆட்டாமல் 'எழுது சித்திரம் போல' நின்று, குரலில் ஏற்ற இறக்கம் காட்டிப் பேசுவதே சிறந்த பேச்சாளனின் பண்பு. பேச்சினிடையே அவையினரைச்

சிரிக்க வைக்கலாம்; ஆயின், பேசுபவன் சிரித்தலாகாது. குறுநகை தவிரப் பெருநகை அவனிடம் தோன்றலாகாது. அவன் பேச்சு அவையினர் அனைவருக்கும் கேட்க வேண்டும்; அவர்கள் அவன் முகத்தையன்றி வேறு எங்கும் நோக்காதவாறு சொல்லென்னும் கயிற்றால் கட்டுப்படுத்த வேண்டும். கிணற்றினுள் இருந்து பேசுவதுபோல் சொற்பொழிவு செய்வதில் பயனில்லை. தெளிவான கரகரப்பில்லாத குரல் பேச்சாளனின் வெற்றிக்குச் சிறப்பான காரணமாகும். உணர்ச்சிக்குத் தக்க வேகம் பேச்சு நடையில் அமையவேண்டும். சிறு பிள்ளை பாடம் படிப்பதுபோல் மிக மெதுவாகப் பேசுவதும், மூன்றும் வகுப்பு மாணவி பெருக்கல் வாய்பாடு ஒப்பிப்பதுபோல விரைவாகப் பேசுவதும் கூடா.''

ஆசிரியரின் அறிவுரை முடிந்தது. செயலாளர் நன்றியுரையோடு கூட்டம் முடிந்தது. அடுத்து, வாரமொருமுறை எங்கள் சொற்பயிற்சி மன்றம் கூடியது. 'உடல் நலம் காத்தல்,' 'திரைப்படங்கள்,' 'தமிழ் மொழிவழிக் கல்வி,' 'பெண்கள் கல்வி,' 'விஞ்ஞானத்தின் விளைவுகள்' முதலிய பொருள்களைப் பற்றிப் பேச்சுக்கள் நிகழ்ந்தன. வாரத்திற்கு வாரம் உறுப்பினரின் பேச்சில் முன்னேற்றம் காணப்பட்டது. 'செந்தமிழும் நாப்பழக்கமே' யன்றோ? இவ்வாறு இவ்வாண்டில் பத்தொன்பது கூட்டங்கள் நடைபெற்றன. மாணவர் தலைவரே பெரும்பாலானவற்றிற்குத் தலைவராய் அமர்ந்தார். சிலவற்றிற்கு உறுப்பினர் அவ்வப்போது தெரிந்தெடுக்கும் மாணவரும் பொறுப்பாசிரியரும் தலைமை தாங்கினர்.

நவம்பர் மாதம் 26ஆம் நாள் கூடிய சொற்பயிற்சி மன்றக் கூட்டத்தில் நானும் மற்றும் மூன்று மாணவரும் "சமுதாயமும் மாணவர்களும்" என்ற பொருள் பற்றிப் பேசினோம். பொறுப்பாசிரியரும் உறுப்பினர்களும் என் பேச்சை மிகவும் பாராட்டினர். என் பேச்சின் சுருக்கம் வருமாறு:—

"சமுதாயம் என்பது மக்கள் சாதி மதங்களின்

அடிப்படையிலன்றி இன அடிப்படையிலோ மொழி அடிப் படையிலோ ஒன்றுபட்டு, ஒருவர்க்கு ஒருவர் உதவியாக வாழ்ந்துவரும் கூட்டமைப்பு ஆகும். இந்தக் கூட்டமைப் பில் உள்ள ஒவ்வொரு சிறு பிரிவினரும் தாம் செய்யும் தொழிலின் வாயிலாக மற்றப் பிரிவினர்க்கு உதவி, அவர்கட்கு இன்றியமையாதவராக உள்ளார்கள். சமு தாயம் ஓர் உடலைப் போன்றது. கை, கால், தலை முதலிய உறுப்புக்களைத் தனித்தனியே பிரித்துவிட்டால் உடல் இல்லை. அதுபோல் மக்கட் பிரிவு ஒவ்வொன்றும் தனித்தனியே பிரிந்தால் சமுதாயம் இல்லை. கையும் காலும் போன்ற எல்லா உறுப்புக்களும் தனித்தனி வகை யாக உழைப்பதால் உடல் முழுவதும் வளர்ச்சி பெறுவது போலச் சமுதாய உட்பிரிவினரின் தனித்தனி உழைப் பால் சமுதாயம் முழுதும் நன்மையடைகிறது. ஒரு பிரிவினர் தமது தொழிலைச் செய்யாமல் நிறுத்திவிடின், மற்றப் பிரிவினர் வாழ்க்கைத் தேவைகள் நிரம்பாமல் அல்லற்பட நேரிடும்.

"மனிதன் காட்டிலும் குகையிலும் இருந்த நிலையி னின்று வளர்ந்து நாகரிகமாக வாழக் கற்றுக்கொள்ளத் தொடங்கிய நாள் முதல் மற்ற மக்களோடு சேர்ந்து சமுதாயம் அமைத்தே வாழ்கிறான். அவனது முன்னைய நிலையை வாழ்க்கையென்று கூறல் பொருந்தாது. சமு தாயக் கூட்டமைப்பில் ஓர் உறுப்பினனாக இருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும்போதே, அதன் மற்ற உறுப்பினருக்கு உதவியாக வாழ்வதையே வாழ்க்கை என்னலாம். சமுதாயத்திலிருந்து விலகி வாழ எந்த மனிதனாலும் முடியாது. அதில் வாழும் மனிதனின் செயல்களை இரண்டு வகையில் அடக்கலாம். அவன் சிலவற்றைச் சமுதாயத்திற்குக் கொடுக்கிறான்; சில வற்றை அதனிடமிருந்து எடுத்துக்கொள்கிறான். வேறு வகையாகக் கூறினால், அவன் சமுதாயத்தை வளர்க் கிறான் என்னலாம். யார் யார் தமது உழைப்பையோ அறிவையோ செயல் திறனையோ தம் சமுதாயத்திற்குப் பயன்படுத்தவில்லையோ, அவர்கள் அதற்குச் சுமையாக

—விரலுக்கு வேண்டாத வீக்கமாக—மரத்தை உண்ணும் புல்லுருவியாக—இருக்கிறார்கள். அவர்கள் ஒன்றும் கொடுக்கவில்லை; நிறைய எடுத்துக்கொள்கிறார்கள். கொடுக்காமல் எடுத்துக்கொள்பவரை மக்கள் என்ன பெயரிட்டு அழைக்கிறார்கள்? அதை யான் சொல்ல வேண்டா.

"ஒரு சமுதாயத்தில் ஆசிரியர், இரும்புத் தொழிலாளர், கணக்கர், நகர சுத்தியாளர், மர வேலையாளர், கொத்தர், உழவர், சலவைத் தொழிலாளர், பொறியியக்குவோர், வணிகர், முடி திருத்துவோர், நகரக் காவலர், உடை தைப்போர், தோட்ட வேலையாளர், அமைச்சர், மாணவர் முதலிய பல துறையினர் உள்ளனர். இவர்களில் மாணவர் தவிர ஒவ்வொரு துறையினரும் மற்றவருக்குத் தேவையானவரே. ஆதலால் யாரை உயர்ந்தவர் என்பது? யாரைத் தாழ்ந்தவர் என்பது? திருவள்ளுவர் 'சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையால்' என்று கூறியது, மேலே சொன்ன பலவகைத் தொழில்களைப் பற்றியதன்று; நற்செய்கை, தீய செய்கை என இருவகைப்படும் செய்கைகளைக் குறித்ததேயாகும்.

"மாணவர்கள், சமுதாயம் தரும் நன்மைகளைப் பெற்றுக்கொண்டு கல்வி கற்கிறார்கள். மாணவ நிலையில் அவர்கள் சமுதாயத்திற்கு ஒன்றும் கொடுப்பதில்லை. இதற்குச் சமுதாயம் உரிமையளிக்கிறது. ஏன்? அவர்கள் கல்வியால் தொழிலறிவும், செயல் திறனும் மிகுதியாகப் பெற்றுப் புதிய நல்ல முறைகளைக் கையாண்டு சமுதாயத்திற்கு எதிர்காலத்தில் உதவ வேண்டும், அதை மேன்மேல் முன்னேற்ற வேண்டும் என்னும் எண்ணமே காரணம். விளக்கை ஏற்றி வைத்தால் அழகாக இருக்கும்; அதைத் துலக்கிவிட்டு ஏற்றிவைத்தால் மேலும் அழகாக இருக்கும். மாணவர் பள்ளியில் தொழிலைமட்டும் கற்கவில்லை; இலக்கியமும், பிற கலைகளும் கற்கின்றனர்; ஆசிரியரைப் பல கேள்விகள் கேட்டு ஐயத்தைப் போக்கிக்கொள்கின்றனர். சமுதாயத்திற்கு மகிழ்ச்சி நல்கவும் உணர்ச்சியூட்டவும் நல்லறிவு

புகட்டவும் அன்பால் ஒன்றுபட்டு வாழச் செய்யவும் இவை பயன்படுகின்றன. வெறும் தொழில் முன்னேற்றம் உயிரற்றது ; கொடுமையானது.

" இன்றைய மாணவர்கள் நாளைய சமுதாய உறுப்பினர்கள். அந்நிலையில் நன்கு வாழ்வதற்காகப் பெற்றுக்கொள்ளும் பயிற்சியே பள்ளிக்கல்வி. ஆதலால் மாணவர்கள் கருத்தோடு கல்வி பயிலவேண்டும் ; அறிவையும் ஆற்றலையும் ஒழுக்கத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும் ; சுறுசுறுப்பாக விளையாடியும், சத்துணவு உண்டும் உடலை வளர்த்துக்கொள்ள வேண்டும் ; நாளை இவையெல்லாவற்றையும் சமுதாய நல்வாழ்விற்காக அர்ப்பணிக்க வேண்டும். அதுவே படைப்பின் நோக்கம். நண்பர்களே, எடுத்தே வாழ எண்ணுமல் கொடுத்தும் வாழக் கற்றுக்கொள்ளுங்கள். நாம் வாழ்வது சமுதாயத்தால் ; ஆகவே, நம் உழைப்புச் சமுதாயத்திற்கே !—இதை மறை மந்திரமாக கொள்ளுங்கள்."

என் பேச்சு முடிந்தவுடன் பொறுப்பாசிரியர் எழுந்துவந்து என் முதுகைத் தட்டி மிகவும் பாராட்டினுர். மாணவர்கள் கைத்தட்டி ஆரவாரம் செய்தனர். ஆசிரியர் தமது கருத்துரையில், என் பேச்சைப் பற்றிக் குறிப்பிட்டு, " அமுதன் பேச்சுச் செவிக்கமுதாக அமைந்தது. அவர் தம் கருத்துக்களை ஒழுங்காக வகைப்படுத்தித் தெளிவாகப் பேசினுர். சிந்தனைத் தெளிவும், அதிக உணர்ச்சிக்கு ஆளாகாமல் அமைதியாகப் பேசியமையுமே, அவரது பேச்சின் வெற்றிக்குக் காரணம்," என்று கூறினுர்.

பெப்ருவரி மாதம் 25ஆம் நாள் எங்கள் சொற் பயிற்சி மன்றத்தின் இறுதி விழா நடைபெற்றது. நகரமன்ற ஆணையாளர் தலைமையில், நகர அறிஞர், 'சொல்லின் செல்வி' திரு. மணிமேகலை அம்மையார் அவர்கள் உறுப்பினர்களை வாழ்த்தியதோடு, " குடியரசில் பேச்சாளரின் தொண்டு " என்னும் பொருள் பற்றிச் சொன்மாரி பொழிந்தார்கள் ; மன்றக் கூட்டங்

களில் பேசிய உறுப்பினர்கட்கு நற்சான்றிதழ்களும் நன்கு பேசியவர்கட்குப் பரிசுகளும் வழங்கினுர்கள்.

“செந்நாப் போதார் சொற்பயிற்சி மன்றத்”தால் நானும் மற்ற மாணவரும் நாநலம் பெற்ருேம்; அவையில் அஞ்சாமல் முறைப்படி பேசும் திறமை பெற்ருேம்; எல்லாவற்றிற்கும் மேலாக நல்லறிவு பெற்ருேம்; இந்தியக் குடியரசில் வாழும் தகுதியும், ஆளும் தகுதியும் பெற்ருேம்.

### அருஞ்சொற்பொருள்

தொலேவில் - தூரத்தில். செந்நாப்போதார் - திருவள்ளுவர்க்குரிய பல பெயர்களுள் ஒன்று. மாரி - மழை.

### பயிற்சி

I. விடை கூறுக:

1. சிறந்த பேச்சாளனின் பண்புகள் யாவை?
2. சமுதாயம் என்பதன் பொருள் யாது?
3. சமுதாய உறுப்பினர்களின் கடமைகள் யாவை?
4. ‘சமுதாயம் ஓர் உடலேப்போன்றது.’—இதன் பொருத்தத்தை விளக்குக.
5. மாணவர்கட்குச் சமுதாயம் அளித்துள்ள உரிமை யாது?
6. மாணவர்கள் சமுதாயத்திற்குச் செய்யவேண்டும் கடமைகள் யாவை?
7. ‘சமுதாயமும் மாணவர்களும்’ என்னும் தலேப்பில் அமுதன் பேசியவை யாவை?

II. 1. கீழ் வருவனவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக:
சுறுசுறுப்பு, இனிமையாக, ஏற்றுக்கொள்ள, நாட்டுப்பற்று, அண்ணல், அவ்வப்போது, கரகரப்பு, செவிக்கமுது, அடிக்கடி.

2. எதிர்ச்சொல் கூறுக:
பலர், புதிய, தெரியாத, இல்லே, வேண்டும், பின், பெருகுதல், அறியாதவன், தக்க, முன்னேற்றம்.

# 15. தமிழ் இலக்கியத்தில் மனையியல்

திருவாட்டி. நா. சக்திவேல் அவர்கள், எம்.ஏ.

[இக்கட்டுரை ஆசிரியர் மதுரை—பாத்திமா கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவர்; சிறந்த பேச்சாளர்; உயர்ந்த எழுத்தாளர்.]

மனையறம் நடத்தும் இயல்பினை விளக்கும் கலையானது இன்று கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் புகுந்துவிட்டது. உண்ணுவதில், உடையணிவதில், மனையமைப்பதில், மகவினை வளர்ப்பதில் எவ்வாறு கலையுணர்வினை வெளிப்படுத்தமுடியும் என்று இக்கலை கற்பிக்கிறது. மேலை நாடுகளில் ஆடவர்களும் இக்கலையைக் கற்றுவருகின்றனர். ஆய்ந்தறிந்த வல்லுநர்கள் விளக்கம் கூறியும், செயல் முறையில் காட்டியும் இக்கலையைக் கற்பிக்கின்றனர். நமது நாட்டிலும் சில இடங்களில் இக்கலை கற்பிக்கப்படுகிறது.

பண்டைத் தமிழ் மகளிர் மனையியற் கல்வியினைக் கல்லூரிகளிலோ பல்கலைக் கழகங்களிலோ பயிலவில்லை. ஆயின், அவர்கள் மனைக்கேற்ற மாண்புடையவர்களாய் இல்லறத்தை நல்லறமாக நடத்திவந்தனர். அவர்கள் வதிந்த இல்லம் கலைக்கூடமாகத் திகழ்ந்தது. மகளிரின் இயற்கையறிவும், பெற்றோர் ஊட்டிய உணர்வும் கலந்து மனையறத்தில் சிறந்த மகளிரை உருவாக்கின. இளமையிலிருந்தே இல்லத்தில் இக்கலையைப் பயின்ற மகளிர் தகுந்த காலத்தில் தனி மனை புகுந்து, மக்களைக் காத்து மனையறம் நடத்தினர். இவர்களது வாழ்க்கையில் கலையுணர்வு எவ்வாறு மிளிர்ந்தது என்பதை அறிய நான் ஆவல் கொண்டேன்; ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுந்த இலக்கியங்களின் வாயிலாகப் பண்டைத் தமிழகத்துள் நுழைந்து கூர்ந்து நோக்கலாமென நினைத்தேன்.

முதன் முதலாக நான் ஒரு சிற்றூரை நோக்கிச் சென்றேன்; அங்கு மண்ணினால் சுவர்கள் எழுப்பப் பட்டிருந்த பல வீடுகளைக் கண்டேன். கூரைகளில்

புல்லும் இலையும் வேயப்பட்டிருந்தன. அந்த, 'இலை வேய் குரம்பைகள்' வறியவர்களின் இல்லங்கள் எனப் பறைசாற்றிக்கொண்டிருந்தன. ஆயின், வறுமை அவர்களது அழகுணர்ச்சிக்கு அணைபோடவில்லை. ஏழைமையில் உழன்ற மகளிரும் தாம் வாழ்ந்த இல்லங்களில் தமது கைவண்ணக் கலைத்திறமையைக் காட்டியிருந்தனர். களிமண்ணால் செய்யப்பட்ட சுவர்கள் சிவப்பு நிறம் ஊட்டப்பெற்றிருந்தன. கண்ணைக் கவர்ந்த செந்நிறம் காந்தம்போல் என்னை இழுத்தது. சுவருக்கருகே சென்று உற்று நோக்கிய பின்புதான் அது மேலை நாட்டினின்றும் இறக்குமதியான வண்ணம் அன்று, இயற்கைச் செல்வத்தினின்றும் அவர்கள் தேர்ந்தெடுத்த வண்ணம் என்பதை நான் உணர்ந்தேன். அவர்கள் செம்மண்ணை நன்றாகக் குழைத்து வழுவழுப்பாகப் பூசியிருந்தனர். வீட்டின் தரை பசும்போர்வை விரித்தது போல் இருந்தது. அவர்கள், ஆட்டுச் சாணத்துடன் அடுப்புக் கரியும் ஊமத்தைச் சாறும் கலந்தமையால் ஏற்படும் புதிய பசுமையினைத் தரைக்கு ஊட்டியிருந்தனர்.

இவ்வாறு செம்மையும் பசுமையும் கொண்ட அவ்வில்லத்தைக் கண்ட பின்னர்த் தலைவாயில் என்று அவர்கள் சுட்டிக் காட்டிய இடத்தை நான் நோக்கினேன். அங்குப் பந்தர் அமைக்கப்பட்டிருந்தது. அதன்கீழ் ஆற்று வெண்மணல் பரப்பப்பட்டிருந்தது. கோடையின் வெம்மையினை மாற்றிக் குளிர்மை ஊட்டிய அப் 'புல்வேய் குரம்பை'யினை விட்டுச் செல்ல மனமில்லை. எனினும், சற்றுத் தொலைவில் இறுமாந்து நின்ற உயர்ந்த மாளிகை ஒன்று என்னை அழைத்தது. ஆதலின் 'அவ்வண்காற் பந்தரிட்ட மனைகளை' நீங்கி நடந்தேன்; வழியில் மேலும் சில குடிசைகளைக் கண்டேன். அவை, ஈந்தின் ஓலையினால் வேயப்பட்டு முள்ளம் பன்றியின் முதுகுபோல் காட்சியளித்தன.

உயர்ந்து நின்ற மாளிகை செங்கல்லினாலும் சுண்ணாம்பாலும் கட்டப்பட்டிருந்தது; ஓடுகளால் வேயப்பட்டிருந்தது. அந்த வீட்டின் சுவர்களில் ஓவியங்கள்

தீட்டப்பட்டிருந்தன. நான் அவ் 'வினை புனை நல் இல்லின்' உள்ளே சென்றேன். ஒளியும் காற்றும் என்னை வரவேற்றன. நான் காற்றோட்டத்தின் மிகுதி கண்டு வியப்புடன் நோக்கினேன். ஆங்காங்கே பலகணிகள் இருந்தன. அவை மானின் கண்போன்ற உருவில் அமைந்திருந்தன. 'மான்கட் காலதர்களி'லும் மகளிரின் கைத்திறமை காட்டப்பட்டிருக்கிறது. திரைகள் தொங்க விடுவது போன்று பலகணிகள் முத்துக்கள் கோக்கப்பட்டிருந்தன. காலதர்களில் காணப்பட்ட முத்துத்திரையும், சுவர்களில் தீட்டப்பட்ட எழில் ஓவியங்களும் அழகுக்கு அழகு செய்து, அவ்வில்லத்து மகளிரின் கலையுணர்வை வெளிப்படுத்தின.

" சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்
மையறு படிவத்து வானவர் முதலா
எவ்வகை யுயிர்களும் உவமங் காட்டி
வெண்சுதை விளக்கத்து வித்தக ரியற்றிய
கண்கவ ரோவியம் கண்டுநிற் குநரும் "

என்ற மணிமேகலை அடிகள் அப்பொழுது எனது நினைவுக்கு வந்தன. நான் அந்த இல்லத்தின் உள்ளே சென்றேன். இரண்டு மூன்று பெண்கள் கையில் எவற்றையோ ஏந்தி நின்றார்கள். புனையா ஓவியம் போல அசையாது நின்ற அவர்கள் பொற்சிலைகளோ என்று நான் எண்ணினேன். அருகில் நெருங்கிச் சென்று பார்த்தபொழுதுதான் அவை யவனப் பாவை விளக்குகள் என்பதை அறிந்தேன் ;

" பாவை விளக்கிற் பரூஉச்சுடர் அழல "

என்ற முல்லைப் பாட்டில் குறிக்கப்பட்ட விளக்குக்கள் அவையே என்பதை உணர்ந்தேன்.

அந்த வீட்டினுள் ஒருவரும் எதிர்பட்டிலர். நான் மீண்டும் உள்ளே சென்றேன். இக்காலத்தில் மேலை நாடுகளில் ஒழுங்குற அழகு பெற அமைக்கப்பட்டிருக்கும் படுக்கை அறை போன்ற அறை ஒன்று காணப்பட்டது. நான் அவ்வறையுள் நுழைந்தேன். படுக்கை

கள் ஒழுங்காகப் பரப்பப்பட்டு, மடிப்புக்கள் விரிக்கப்பட்டிருந்தன. சிங்கக்கால்மேல் தைத்த கட்டிலின்மேல் அன்னத்தூவியால் செய்த மெல்லிய படுக்கை விரிக்கப்பட்டிருந்தது. மற்ருெரு கட்டில் ஒரு புறத்தே கிடந்தது. யானைக் கொம்புகளைக் கடைந்தெடுத்த கால்களையுடைய கட்டில் நாடாவினுல் பின்னப்பட்டு, மெத்தைகள் போடப்பட்டுப் பூவிதழ்கள் பரப்பப்பட்டிருந்தது. புலிவடிவம் அமைந்த காலையுடைய கட்டில் ஒன்றும் இருந்தது. அதன்மேல் எலிமயிரால் செய்யப்பட்ட போர்வை ஒன்று விரிக்கப்பட்டிருந்தது. அப்போர்வை பூத்தொழில் செய்யப்பட்டிருந்தது.

நாம் இவ்வாறு துணிச்சலுடன் முன்னரே அறியாத ஒருவரின் வீட்டினுள் நுழைந்துவிட்டோமே என்ற எண்ணம் எனக்கு எழுந்தது. வெளியே சென்றுவிடலாம் என்று நினைத்துக்கொண்டு இருந்தபொழுது காற்சிலம்பு ஒலியும், கைவளை குலுங்கும் ஒலியும் என்னை நெருங்கி வந்தன. "வாருங்கள் அம்மா, உள்ளே வாருங்கள்" என்ற குரல் ஒலி என் காதில் விழுந்தது. நான் அக்குரல் கேட்ட திசையினை நோக்கினேன். ஒரு பெண்மணி என்னை அழைத்துக்கொண்டே கொல்லைப் புறத்தினின்றும் வீட்டிற்குள் வந்துகொண்டிருந்தாள். அவள் என் அருகில் வந்ததும், கைகூப்பி வணக்கம் தெரிவித்தாள். யானும் வணக்கம் செலுத்திய பின்னர்க் "கோவையிலிருந்து வருகிறேன். தங்களைப் பார்த்துச் செல்லலாம் என்று வந்தேன்," என்றேன். அப்பெண் மணி, "மிக்க மகிழ்ச்சி. உள்ளே வாருங்கள், அமருங்கள்" என்ருள்;

> "தாலப் புல்லின் வால்வெண் தோட்டுக்
> கைவண் மகடூஉக் கவினுறப் புனைந்த
> செய்வினைத் தவிசு"

ஒன்றினை விரித்தாள். அது பனையின் ஓலையினுல் ஆக்கப்பட்ட பாயாகும். ஆயின், அதிலும் கைவேலைப் பாடுகள் மிகுந்து இருந்தன. நான் அப்பெண்மணியை நோக்கி, "இதனை யாரம்மா பின்னினுர்கள்?" என்று

கேட்டேன். அவள் முகம் மலர்ந்தாள்; "பெண்களே இவ்வேலைகளைச் செய்வது வழக்கம். ஓலைகளுக்கு நிறம் ஊட்டிப் பல நுட்பமான வேலைப்பாடுகளுடன் ஆக்கியது நான்தான் அம்மா," என்ருள். நான் அவளது திறமையைப் பாராட்டினேன்.

அவளது தோற்றம் என் உள்ளத்தைக் கவர்வதாக இருந்தது. அவள் வாயில் மென்றிருந்த வெற்றிலை அவள் உதடுகளைக் கொவ்வைச் செவ்விதழ்கள் ஆக்கிக் கொண்டிருந்தன. கன்னத்திலும், நகத்திலும் செம்பஞ்சு குழைத்து எழுதப்பட்டிருந்தது. அவள் தலையை வாரி முடித்து மலர்களுடன் நெற்கதிரையும் சேர்த்துச் சூடியிருந்தாள்; இக்காலத்து நைலான் ஆடையைவிட மெல்லிய ஆடையை அணிந்திருந்தாள். அது பாலாவியோ, புகையோ, பாம்பின் உரிக்கப்பட்ட தோலோ என்று ஐயுறும் வண்ணம் அமைந்திருந்தது; கஞ்சி போடப்பட்டுச் சுருக்கங்கள் இன்றி இருந்தது. அந்த ஆவியன்ன அவிர்நுண் கலிங்கத்தில் பூக்கனிந்த நுண்ணிய கரை இருந்தது; அமைதியாக ஓடிக்கொண்டிருக்கும் ஆற்று நீரில் மிதந்துவரும் மலர்க்குவியல் போன்று அருமையான வேலைப்பாடுகள் அவ்வாடையில் காணப்பட்டன. அம்மங்கை நல்லாள் புட்டகம் பொருந்த உடுத்திருந்தாள். அப்பெண்மணி தன் தோற்றத்திற்கு ஏற்ற நிறத்தினைத் தேர்ந்து எடுத்திருந்தாள்.

மனை அமைப்பிலும் தன் தோற்றத்திலும் அழகு உணர்ச்சியை வெளிக்காட்டியிருந்த அம்மங்கையுடன் நான் சிறிது நேரம் உரையாடிக்கொண்டிருந்தேன். அவள் களைப்படைந்திருந்த எனக்கு முதலில் கருப்பஞ்சாறு அருந்துமாறு தந்தாள்; பின்னர்ச் சிறிது நேரம் கழித்து, நல்ல நெற்சோற்றுடன் கோழிச்சேவலின் பொரியலும் படைத்தாள். நான் சுவை மிக்க உணவினை மகிழ்ச்சியுடன் உண்டேன். அவள் இவற்றுடன் பண்ணியம் பலவும் படைத்தாள்.

நான் அவ்வில்லத்தை விட்டு உடனே புறப்படவில்லை எனின், வயிற்றுப் பொருமலுக்கு மருந்து தேடவேண்

டும் நிலை நேரும் என்று எண்ணிப் புறப்பட்டேன்; விடை பெற்றுச் செல்லும் நேரத்தில், "அம்மா, தங்கள் குழந்தைகள் எங்கே?" என்று வினவினேன். அவள் கொல்லைப்புறத்துக்கு என்னை அழைத்துச் சென்று, "அங்கே விளையாடுகிறார்கள்," என்று ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினாள். அவள் காட்டிய திசையில் உயர்ந்த வைக்கோர்ப் போர் இருந்தது. பனையளவு உயர்ந்த வைக்கோர்ப் போர்மேல் இரண்டு மூன்று குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. ஒரு குழந்தை பனம்பழத்தை வாயில் சுவைத்துக்கொண்டிருந்தது; மற்றொரு குழந்தை இளந் தெங்கினைப் பறித்துக்கொண்டிருந்தது. இயற்கைச் சூழலிலே தம்மை மறந்து இன்பத்துடன் துள்ளி விளையாடிக் கொண்டிருந்த அம்மக்கட் பிஞ்சுகளை வாழ்த்தி, நான் அந்த அம்மைக்கு வணக்கம் செலுத்தி நகர்ந்தேன்.

சிறிது தொலைவில் ஒரு மலைத்தொடர் காணப்பட்டது. அக்குறிஞ்சி நிலத்தில் சிறு குடிசைகள் அமைந்திருந்தன. நான் அங்குச் சென்று பார்த்தேன். முற்றத்தில் ஒரு பெண் வைர உலக்கையால் புல்லரிசி குற்றிக் கொண்டிருந்தாள். அவள் என்னை அன்புடன் வரவேற்றுக் குடிலுக்குள் அழைத்துச் சென்றாள். உள்ளே மான் தோலில் ஒரு பெண் படுத்திருந்தாள். அவள் எனக்குப் புல்லரிசிச் சோறும் உப்புக் கண்டமும் அளித்தாள். நான் அங்கிருந்து இறங்கி முல்லை நிலத்தை அடைந்தேன். அங்கு ஒரு வீட்டில் வறுமையற்ற வாழ்வின் செழிப்புக் காணப்பட்டது. அங்கிருந்த மக்கள் பாலில் பெய்து அட்ட தினையரிசிச் சோற்றுடன், நெய்யிற் பொரித்து வதக்கிய இறைச்சியை எனக்குப் படைத்தார்கள். அவ்வுணவு தெவிட்டாத் தீஞ்சுவையுடன் அமைந்திருந்தது கண்டு, அவ்வில்லத்து அரசியைப் பாராட்டினேன்; "இப் புலால் உணவை எவ்வாறு சமைத்தீர்கள்?" என்று வினவினேன். "நாங்கள் சமைத்ததில் புதுச்சுவை வரவில்லை. அருகம்புல் தின்னும் செம்மறிக் குட்டியின் இளங்கன்றின் தசை அது; ஆதலால்தான் சுவையாய்

உள்ளது,'' என்று அவ்வில்லத்தரசி அடக்கத்துடன் விடையிறுத்தாள்.

நான் அனைத்தையும் என் வயிற்றுள் நிரப்பிய பின்பு கடற்கரையை நோக்கி, நடக்கமுடியாமல் நடந்து சென்றேன்; வலைஞர் குடியிருப்பை அடைந்தேன்; அங்குக் காஞ்சி, வஞ்சி ஆகிய மரங்களின் கொம்புகளைத் தூணாக நட்டு, மூங்கில் தடிகளை வரிச்சாக நிரைத்து, தாழை நாரால் கட்டித் தருப்பைப் புல்லால் வேயப்பெற்ற வீடுகளைக் கண்டேன். தலைவாயிற் பந்தரில் சுரைக் காய்கள் காய்த்துத் தொங்கிக்கொண்டிருந்தன. பந்தரின் அருகில் சென்றவுடனேயே வலைஞர் என்னை அன்புடன் வரவேற்றனர். நான் ஒரு வீட்டுத் திண்ணைமீது அமர்ந்தேன். சிறிது நேரத்தில் இளஞ்சிறுவர்கள், நீர்நிலைகளில் விளையாடிப் பிடித்த இருலும் கயலும் கொண்டு வந்தனர். அந்த வீட்டார் குற்றாத கொழியலரிசியைக் கழியாகத் துழாவி அட்ட கூழை அகன்ற வாயையுடைய தட்டுப்பிழாவில் ஊற்றி ஆற்றினர்; அத்துடன் முளையரிசியை இடித்துக் கலந்தனர்; சுட்ட மீனும் வெம்மையான கள்ளும் துணையாகக் கொண்டு கூழை உண்டு களிக்க அழைத்தனர். அவர்களது மனநிறைவிற்காகச் சிறிது வயிற்றை நிரப்பிவிட்டு, நான் விடைபெற்று நடந்தேன்.

சிறிது தொலைவு நகர்ந்த பின்பு, தென்னங்கீற்றுக்களினால் வேயப்பட்ட கூரைகளையுடைய வீடுகள் காணப்பட்டன. இவ்வகையான வீடுகளில் சிறிதுநேரம் தங்கலாம் என்று நான் நினைத்தேன். நான் ஒரு வீட்டின் அருகில் சென்றவுடனே பன்றித்தசை பொரிக்கப்படும் மணம் என்னை வரவேற்றது. வீட்டின் முற்றத்தின் ஒரு புறத்தே குழியில் ஒரு பன்றி கட்டப்பட்டிருந்தது. ஒரு பெண் அப்பன்றிக்கு நெல்லை இடித்த மாவாகிய உணவை ஊட்டிக்கொண்டிருந்தாள். அவள் என்னைக் கண்டவுடன் அளவு கடந்த ஆவலுடன் வந்து வரவேற்றாள்; முற்றத்தில் கிடந்த ஒரு மணைமீது உட்காருமாறு கூறினாள்; அன்புடன் உரையாடிக்கொண்டிருந்து பின்னர்ப் பலாப்

பழம், இளநீர், வாழைப்பழம், பனையின் நுங்கு, வள்ளிக்கிழங்கு ஆகியவற்றை வழங்கினாள்; உண்ணுமாறு வற்புறுத்தினாள். அவள் வெற்றிலை மென்று கொண்டிருந்தாள். கயல் வடிவாகச் செய்த வெற்றிலைப் பை ஒன்று அவளிடம் காணப்பட்டது. தானே தைத்த வெற்றிலைப் பை என்று அதை அவள் என்னிடம் காட்டினாள். அவள் உண்ணுமாறு வைத்த பொருள்களைக் கூடியவரையில் நான் சுவைத்து விழுங்கிவிட்டு, மலைப்பாம்புபோல் நகர்ந்தேன்.

நான் நேராகத் திரும்பிவிட வேண்டும் என்று நினைத்துக் கால்களைத் தூக்கி வைத்துக்கொண்டிருந்தேன். முற்றத்தில் கோலம் இடப்பட்ட ஒரு புதுவகை மனை வழியில் காணப்பட்டது. கன்றுகள் பந்தரின் கால்களில் கட்டப்பட்டிருந்தன. கிளி ஒன்று திண்ணையில் உட்கார்ந்து மறைமொழி குளறிக்கொண்டிருந்தது. நான் அந்த வீட்டிற்குள் எட்டிப்பார்த்தேன்; அழைப்பு வந்தது; நுழைந்தேன். வீடு தூய்மையாக இருந்தது. அஃது அந்தணரது இல்லம். சிறிது நேரம் உரையாடிய பின்னர், என் வயிற்றில் இடமில்லாக் குறையை அந்த இல்லத்து அம்மையாரிடம் எடுத்துரைத்தேன்; அந்த அம்மையார் அஞ்சவேண்டா என்றார்; எத்தகைய வயிற்றுக் கோளாற்றினையும் நீக்கும் மாதுளங்காய்ப் பொரியல் சமைத்துள்ளேன், உண்ணுங்கள்,'' என்றார். நான் தலையசைத்தேன். நல்ல வாழையிலையில் நெற் சோறு படைக்கப்பட்டது. அவர் மாதுளங் காயை வில்லைகளாக அரிந்து மிளகுத்தூள் பெய்து, கறிவேப்பிலை கூட்டி நறுநெய்யில் வெதும்பிய பொரியலும், மாங்காய் ஊறுகாயும் படைத்தார். எளிய உணவைச் சுவைமிக்க முறையில் சமைத்துப் படைத்த அந்த அம்மையாரைப் பாராட்டி விடைபெற்று நடந்தேன்.

நடந்து செல்லுகையில் எனது உள்ளத்தில் ஒருவிதப் பெருமித உணர்வு எழுந்தது. மனையியற்கலை தமிழ் மகளிருக்கு உடன் பிறந்தகலை, கற்றுத் தெரியவேண்டும் கலை அன்று என்ற எண்ணம் மேலோங்கியது. வாழ்க்கை

யின் தேவைகளைத் தம் நிலைமைக்கு மீறிய அளவில் பெருக்கிக்கொண்டே சென்று, அத்தேவைகளை நிறை வேற்ற முடியாமல் தடுமாறும் இக்கால நாகரிக மக்களுக் கும் பண்டைத் தமிழ் மக்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு விளங்கியது. பண்டைத் தமிழ் மகளிர் எளிய வாழ்க்கையை இனிய வாழ்க்கையாக்கினர்; பண்புடன் வாழ்ந்தனர்; மனையினை அமைக்கும் முறை யினையும், உடல்நலத்துக்கும் உள்ள வளர்ச்சிக்கும் ஏற்ற நல்லுணவினைச் சுவையுடன் சமைத்து, அழகுடன் படைக்கும் முறையினையும் அறிந்திருந்தனர்; மக்களை அடித்து, அச்சுறுத்தி, கட்டுப்பாடுகள் இட்டு, அடக்கி வைத்து அவர்களது இளமை ஊக்கத்தை அழிக்கவில்லை; அவர்கள் இயற்கையோடு இணைந்து எழுச்சியுடனும் உள்ளக்கிளர்ச்சியுடனும் வளர ஒத்துழைத்தனர். பண் டைத் தமிழரது மனையியல் பண்பட்ட கலையாக—பயனுடைய கலையாக—இயற்கையோடு இணைந்து நின்ற இறவாப் புகழுடைய கலையாக விளங்கியது.

### அருஞ்சொற்பொருள்

குரம்பை - குடிசை. மான்கண் காலதர் - மானினது கண்போன்று அமைக்கப்பட்ட கண்களையுடைய சாளரம். மையறு - குற்றமற்ற. படிவம் - உருவம். சுதை - சுண்ணும்பு. வித்தகர் - திறமையுடையவர். பரூஉ - பருத்த. மகடூஉ - பெண். தாலப்புல் - பனையோலை. புட்டகம் - சீலை. பண்ணியம் - சிற்றுண்டி. கண்டம் - கட்டி. தசை - ஊன்.

### பயிற்சி

I. விடை கூறுக:

1. சங்ககாலத்தில் குடிசைகள் எவ்வாறு வேயப்பட்டிருந்தன?
2. இக்கட்டுரையில் பண்டைத் தமிழ்நாட்டுச் செல்வரது படுக்கையறைக் காட்சி எங்ஙனம் விவரிக்கப்பட்டுள்ளது?
3. பழங்கால ஆடைகளின் சிறப்பைப் பற்றி யாது அறிவாய்?
4. பண்டைத் தமிழரது மனையியல் மாண்பு பற்றி யாது அறிவாய்?

5. சங்ககாலக் குறிஞ்சி நிலத்தாரது மனையியலைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது யாது?

6. ஆசிரியர், தாம் முதலாகச் சென்ற சிற்றூர்க் காட்சியினை எங்ஙனம் விளக்கியுள்ளார்?

II. 1. இக்கட்டுரையில் கூறப்படும் சமையற்கலைச் சிறப்பினைத் தொகுத்தெழுதுக.

2. கீழ்வருவனவற்றைச் சேர்த்துக் கூறுக:

பண்டை + தமிழ், கலை + உணர்வு, இயற்கை + அறிவு, மாண்பு + உடையவர், சிறுமை + ஊர், சுவருக்கு + அருகே, இ + காலம், தங்களை + பார்த்து, அ + மங்கை.

# 16. சிறையிருந்தாள் ஏற்றம்

வித்துவான். எஸ். நாகராசன் அவர்கள், எம்.ஏ., பி.டி.,

[இக்கட்டுரையின் ஆசிரியர் சேலம், புனித மரியாள் மகளிர் உயர் நிலைப்பள்ளியின் தமிழாசிரியர் ; பல நூல்களின் ஆசிரியர்.]

நம் தேசிய, தெய்விக, அமரகவி பாரதியார், உலகு புகழ் வள்ளுவர் வகுத்த பொதுமறை, நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம், புகழ்க் கம்பன் தீட்டிய காவியம் ஆகிய இம்மூன்றையுமே, செந்தமிழ் நூல்களுள் சிறந்தவை எனக்கொண்டார். காவியக் கண்கொண்டு காணும் கவிஞர்களே கவின்பெறு நூல்களைக் கண்டுணரவல்லார்.

இவற்றுள் தீந்தமிழில், அணுவில் ஏழ்கடலை அமைத் தாங்கு விளங்கும் வள்ளுவர் நூல், நீதி நூல்களுள் தலை சிறந்ததொன்றும். பொதுவாக எப்பாலவருக்கும் ஏற்ற நீதிகளை எக்காலத்திற்கும் பொருந்துவதாய்க் கூறிச் செல்லும் இந்நூல், இலக்கிய நயத்தைப் பெற்றிருப்பி னும், காவியச் சுவையைப் பெற்றதாகாது. நீதிகளை எடுத்துக்காட்டுக்களுடன் இயம்பும் நூல்கள் காவியங் களாகும். இவை நோயாளிகளுக்குக் கைப்பு மருந்தை இனிப்பின் மேற்பூச்சில் தருவதை ஒக்கும். இளங்கோவின் சிலப்பதிகாரமும், கம்பநாடரது இராம காதையும் திருக்குறளை இலக்கணமாகக் கொண்டு எழுந்த காவிய நூல்களாகும் என்பதைக் கற்றறிந்தோர் யாவரும் நன்குணர்வர். இதனை அவ்வந் நூல்களைத் திருக்குறள் கண்கொண்டு காண்போர் மறுக்க முற்படார்.

எடுத்துக்காட்டாக, வள்ளுவர் நூலில் பெண்ணின் பெருமை பேசும் சில குறள்களோடு, மேற்கூறிய காவி யங்கள் கூறும் பெண்ணின் சிறப்பை உற்று நோக்கு வோம். பெண்ணின் பெருமையை எண்ணி எண்ணி மனமார வாயார வழுத்தும் வள்ளுவர் வாக்குக்களில்,

" மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்."
" பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்."

"தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

என்பன சிலவாகும். இவற்றின் கருத்துக்களைப் பொதுவாகச் சிலப்பதிகாரத்திலும், சிறப்பாக இராம காதை என்னும் சிறை யிருந்தாள் ஏற்றம் செப்பும் செவ்விய நூலிலும் காணத்தகும் என்பதை நிறுவ முயல்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

அறன் எனப்பட்ட சீரிய இல்வாழ்க்கை, காதல் மனையாளும் காதலனும் சேர்ந்து உயிர் ஒன்றாய் இலங்கி நடத்தும் நல்வாழ்க்கையாகும். இல்லறமென்னும் நல்லறம், கொக்கை யொத்துக், கிடைப்பனவற்றைத் தாம் மட்டும் தனித்துண்ணாது, தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் என்போருடன் பகுத்துண்ணும் இயல் பினை உடையது. இவற்றுள் விருந்தினரைப் பேணல் சிறப்புடைத்தாகும். நோக்கக் குழையும் இயல்பினரான விருந்தினரை இல்லறத்தில் நின்ற இருவரும் உடனிருந்து பேணல் முறைமை. காதலனைப் பிரிந்த காதலியும், காதலியைப் பிரிந்த கணவனும் இல்வாழ்க்கையின் இதயம் அனைய விருந்தோம்பலைச் செய்ய உரிமையற்ற வர்களாவர். முன்னது சிலப்பதிகாரத்திலும், பின்னது இராமாயணத்திலும் இலங்குவதைக் காண்போம்.

கோவலனைப் பிரிந்து வாழ நேர்ந்த கண்ணகி, தன் நலனைப் பற்றி எண்ணாது, இல்லறம் இனிது நடத்த இயலாமற் போனதை,

"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் களித்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"

என்று கூறி வருந்துகின்றாள். சிறையிருந்த செல்வியாகிய சீதையும் அசோக வனத்திடையிருந்து துன்புற்றகாலை, தாங்கரும் பிரிவுத் துன்பத்தைவிட, இல்லறம் இனிது நடக்க இயலாதாதாயிற்றே என்று கலங்கி நைவதை,

"விருந்து கண்டபோ தென்னுறு மோவென்று விம்மும்"

என்று கூறியவற்றால் அறியலாகும். கண்ணகி, சீதை என்ற இவ்விரு கற்புக்கரசிகளும் தங்கள் நலனையே

பெரிதென்றெண்ணுமல், இல்லறமாகிய நல்லறம் நலிவுற நேர்ந்ததே என்று வருந்தியமை பாராட்டற்குரியதாகும்.

மனை மாட்சி பெற்ற மடக்கொடியார், கற்பென்னும் திண்மையிலும் சிறந்தவராயிருந்தனர். விரிவஞ்சி, ஈண்டுச் சிறையிருந்தாள் ஏற்றதை மட்டும் ஆராய்வோம்.

சீரும் சிறப்பும் மிக்குச், செவ்விய நலத்தோராய் வாழ்வோரது பண்பினை நன்கறிதல் முற்றும் சாலாது; ஆயின், அவற்றையிழந்து அல்லலுறுவோரிடம் காணப்பட்ட நல்லியல்புகளை நன்கறியலாகும். எனவே, இராமனைக் காதலித்து உடனுறைந்து வாழ்வு நடாத்திய காலத்தைவிட, நலிவு மிக்கு வாடும் சிறைச்சாலை வாழ்வில் நங்கையின் திண்மை, பொறை, மடமை ஆகிய பண்புகளை நனி உணரலாகும்.

தங்கையின் புன்மொழியால் அறிவு மயங்கிய இராவணன், சீதையை, மண்ணொடுங்கொண்டு சென்று, மனச்சிறையிலும், மரங்கள் செறிந்து மாண்பு பெற்ற அசோக வனச்சிறையிலும் வைத்தனன். அசோக வனத்தில் பிரிவு என்னும் பெருந்தீயில் பட்டு வெந்த சீதையின் நிலையைப் பலவாறு விரித்துக் கூறிய கம்பர், இறுதியாக,

" ஒவி யம்புகை உண்டதே ஒக்கின்ற உருவாள் "

என்று முடிக்கிருர். மேலும் சீதையை வியந்து போற்றும் கம்பர்,

" வெங்கனல் வீக்கியும் புனலின் மூழ்கியும்
நுங்குவ வருந்துவ நீக்கி நோற்பவர்
எங்குளர் குலனில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவம் நவிலற் பாலதோ "

என்றும்,

" பேணநோற் றதுமனைப் பிறவி பெண்மைபோல்
நாணநோற் றுயர்ந்தது நங்கை தோன்றலால் "

என்றும் பாராட்டுகின்ருர். இனி அநுமன் வாயிலாகச் சீதையின் கற்பின் திண்மையைக் காண்போம்.

வேலைசூழ் இலங்கை வேற்பில் காலையும் மாலையும் காணுக் கவின்பெறு அசோக வனத்திடை அல்லலுற்ற

சீதையை, அவள் காணுவாறு இருந்து கண்டனன் அநுமன்; சீதையின் நிலையை உள்ளபடி உணர்ந்து கள்ளமில்லாக் காரிகை என்பதைக் கருத்தால் தேர்ந்தான்; அவள் 'கமலச் செல்வியே' என்பதையும் கருத்துட் கொண்டான். இராவணனைப் பதரெனப் பழித்த பான்மையால், ஒரு சிறிது இருந்த சங்கையும் தகர்ந்தது. தற்கொலை எண்ணிய பொற்கொடி ஒரு பூங்கொடியைத் தன் கழுத்தில் சார்த்திய காலத்து, அவள் முன் தோன்றி, இராகவன் புகழினைச் சார்த்தி, அவள் சாதலைத் தவிர்த்தான். பின்னர், அரக்கன் அவளை வஞ்சித்துக் கொணர்ந்து சிறைப்படுத்திய வகையை நினைப்பூட்டி, அதுவே போன்று, தானும் அரக்கர் அறியாமல் அவளைச் சுமந்து இராகவனிடம் சேர்ப்பிப்பதாக இசைத்துச் சம்மதிக்க வேண்டினன்.

செம்மை சான்ற மனமும், தற்காத்துக்கொள்ளும் தன்மையும், மகளிர்க்கே உரிய மடமையும், கணவன் புகழினுக்குக் களங்கம் நேரலாகாதென்ற நேர்மையும் ஒருங்கே அமைந்த மங்கைநல்லாள் அதற்கு ஒருப்படுவளோ? ஒருப்பட்டாளில்லை; அநுமனை நோக்கி, "அது தக்கதன்று; வென்றி வெம்சிலை மாசுணும்" என்பன கூறி விளக்கினள், "வஞ்சித்த நாய்களின் வஞ்சனையை நீயும் நினைத்தியோ?" என்று கூறி, அநுமனது அளக்கலாகா ஆற்றலை அவனுக்குச் சொல்லாமல் சொல்லி, மெல்ல அவன் கருத்தை மாற்றினள்; மேலும் எவர் துணையுமின்றித் தானே அரக்கரை வெல்ல இயலுமென்பதையும், அதைத் தான் கருதாத காரணம் யாது என்பதையும் விளக்கலாயினள்:

"அல்லன் மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லி னற்சுடு வேனது தூயவன்
வில்லி னற்றற்கு மாசென்று வீசினேன்."

இத்தகு வீரக் கற்புடைய விழுமிய நங்கையின், கொழுநனைப் பேணித் தொழும் பெண்மையை, அவள் இராமனிடம் கேட்கும் வரமாகக் கூறும் கூற்றால் நன்கு

அறியலாகும். "யான் இப்பிறவியில் இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்" என்று இராமன் கூறியதை நினைவுபடுத்த வேண்டினள். இதனால் செல்வம், செல்வாக்கு ஆகியவற்றில் மிக்கு விளங்கும் இலங்கைச் சிறையில் இருந்து வருந்திய சீதையின் கற்பின் பொற்பை நன்கு அறியலாகும்.

இனி அநுமன் சீதையைப் பற்றி இராமனிடம் கூறும் கூற்றுக்களால் அவளது ஏற்றம் பற்றி அறியலாகும். இராமனிடம் அநுமன் முதன் முதலில் கூறிய

"கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்"

என்ற வாக்கு எண்ணி எண்ணி மகிழ்தற்குரியதொன்று. 'கண்களால் கண்டனென்' என்பதால், சீதையின் உருவெளித் தோற்றத்தை அநுமன் கண்டனன் என்பது தேற்றம். அஃதாவது, சீதையின் கண்களிலிருந்து பொழிந்த கார்நிகர் கண்ணீர், அவளது மாசற்ற கற்பின் நிலையைக் காணச் செய்தது என்பதாம்.

பெண்ணென்பாள் பிறந்த குலம், புகுந்த குலம் என்ற இரு குடிகளுக்கும் இசையை எய்துவிப்பவளாவாள். சீதையின் நிறைகாக்கும் கற்பு, பின்வரும் கம்பரது அடிகளில் கண்டுணரத் தகும்.

"உன்பெருந் தேவி என்னும் உரிமைக்கும் உன்னைப்பெற்ற
மன்பெரும் மருகி என்னும் வாய்மைக்கும் மிதிலை மன்னன்
தன்பெரும் தனயை யென்னும் தகைமைக்கும் தலைமை சான்றுன்
என்பெரும் தெய்வ மையா............"

என்றும்,

"உன்குலம் உன்ன'தாக்கி யுயர்புகழ்க் கொருத்தி யாய
தன்குலம் தன்ன தாக்கி............"

என்றும்,

சீதையின் கற்பினைச் செப்பலுற்ற அநுமன், இலங்கையில் சீதையைக் காணவில்லை யென்றும், அதற்குப் பதிலாக இற்பிறப்பு, பொறை, கற்பு என்ற

இனிய பண்புகள் ஒன்று சேர்ந்து நடமிடுவதைத் தான் கண்டதாகவும் பன்னுகின்றது, சீதையின் ஏற்றத்தைத் தெள்ளிதின் புலப்படுத்துவதொன்றும்.

இறிதியாக ஒன்று காண்போம். சீதையின் கற்பின் வலியால் தேவமாதரும் சிறப்புற்றனர் என்பதை,

“ சோகத்தா ளாய நங்கை கற்பினுல் தொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும் வான்சிறப் புற்றுர் மற்றைப்
பாகத்தாள் இப்போ தீசன் மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தாள் அல்லள் மாயன் ஆயிரம் மோலி மேலாள் ”

என்று இச்செய்யுளால் விளக்குகின்றுர் கவிஞர். இராவணன் கொல்லப்பட்டு வீடணன் ஆட்சி பெற்றுன். அநுமன் இராவணனது மனச்சிறையிலிருந்து விடுபட்ட நங்கையை அசோகவனச் சிறையிலிருந்தும் விடுவித்தான்; அன்னையாம் சீதயை, வண்ண மகளிரைக் கொண்டு அலங்கரித்து இராமனிடம் அழைத்துச் சென்றுன். இராமன் சீதையின் உருவைக் கண்டதும் சின மிக்கு, “பெண்மை, பெருமை, பிறப்பு, கற்பு, திண்மை, ஒழுக்கம், தெளிவு, சீர்மை, உண்மை ஆகிய இயல்புகள் உன்னுல் ஒழிந்தன,” என்று வசைமாரியை வாரி வழங்கலாயினன். கற்பினுக்கரசியும், பெண்மையின் தலைவியும், அழகுக்கு அழகியும், புகழின் வாழ்க்கையும் ஆகி விளங்கும் மங்கை இதனை எங்ஙனம் சகிப்பாள்! “கற்பினை எப்படி மெய்ப்பித்துக் காட்டுகேன்” என்று அன்று ஐயுற்ற அவள், இலக்குவனைத் தீமூட்டப் பணித்தாள்; தீயில் இறங்கிப் புடமிட்ட பொன்னேபோல் திகழ்ந்தாள். இமையவர் முதல் யாவரும் சீதையை ஏற்று அருளுமாறு இராமனை வேண்டினர். இமையவருடன் இராமனைக் காணவந்த தசரதன், சீதையைத் தேற்றிக் கீழ்வருமாறு கூறுவானுயினன் :

“ பொன்னைத் தீயிடைப் பெய்வதப் பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது மனக்கொளல் தகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென் றுலகில்
பின்னைக் காட்டுவ தரியதென் றெண்ணியிப் பெரியோன்.”

இதனாலும், இனியன கூறிய பிற தேவர்கள் மொழி களாலும், இராமன் சீதையை மீண்டும் ஏற்றனன். வானவர்கள் மலர்மாரி பொழிந்து வாழ்த்தினர்.

இத்தகு கருத்துமிக்க ஓவியங்கள் பல இராமாயணத் துள் பலவிடங்களில் பல்கியுள்ளன. அவற்றைக் கற்று இன்புறுவது கற்றோர் கடனாகும்.

## அருஞ்சொற்பொருள்

மறை - வேதம். கவின் - அழகு. அமைத்தாங்கு - அமைத்தாற் போல். நயம் - இனிமை. வழுத்தும் - துதிக்கும். திண்மை - உறுதி. சகடம் - வண்டி. ஒக்கல் - சுற்றத்தார். குழையும் - வருந்தும். இதயம் - உள்ளம். ஓம்பல் - பாதுகாத்தல். நைவதை - வருந்துவதை. மிக்கு - மிகுந்து. நலிவு - துன்பம். நனி - மிக. பொறை - பொறுமை. புன் மொழி - தீச்சொல். வீக்கி - மூட்டி. நவிலற் பாலதோ - சொல்லும் தன்மையதோ. அல்லல் - துன்பம். கமலச் செல்வி - திருமகள். சங்கை - ஐயம். இசைத்து - சொல்லி. களங்கம் - இழுக்கு. மாசுணும் - குற்றமடையும். பொற்பு - அழகு. ஏற்றம் - சிறப்பு. இசை - புகழ். எப்பரிசு - எவ்வகையில்.

## பயிற்சி

I. விடை கூறுக :

1. பாரதி, செந்தமிழ் நூல்களுள் சிறந்தனவாகக் கொண்ட மூன்று எவை ?
2. பெண்ணின் பெருமை பேசும் குறட்பாக்கள் யாவை ?
3. இல்லறத்தின் நலன்கள் யாவை ?
4. கணவரைப் பிரிந்த கண்ணகியும், சீதையும் யாது கூறி வருந்தினர் ?
5. அநுமன் சீதையை எவ்வாறு தெளிந்தான் ?
6. அநுமனோடு ஏகச் சீதை மறுத்ததேன் ?
7. அநுமன் சீதையைக் கண்ட திறத்தை இராமன்பால் எவ்வாறு செப்பினன் ?
8. 'கற்பினை எப்படி மெய்ப்பித்துக் காட்டுகேன் !'—இடஞ்சுட்டி விளக்குக.

II. 1. கீழ் வருவன இன்ன இன்ன வினைமுற்றுக்கள் என்பதைக் கூறுக:

கொண்டார், முற்படார், காண்போம், வைத்தனன், வேண்டினள், பன்னுகின்றது.

2. கீழ் வருவனவற்றைப் பிரித்துக் காட்டுக:

செந்தமிழ், எக்காலம், சிலப்பதிகாரம், மனமார, தனித்துண்ணுது, சிறப்புடைத்தாகும், மடக்கொடியார், அல்லலுறுவோர், பெருந்தீவு, இயலுமென்பது.

III. 1. இப்பாடப் பொருளைச் சுருக்கி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

2. நூலகத்து நூல்களின் துணையைக் கொண்டு, இராமாயணத்துள் உள்ள கருத்துமிக்க ஓவியங்களுள் ஒன்றனை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.

# 17. தமிழகத்துக் கோவில்கள்

**திரு. டாக்டர் மா. இராசமாணிக்கனுர் அவர்கள்,**
எம்.எ., எல்.டி., எம்.ஓ.எல்., பி.எச்.டி.

'தமிழகத்தில் இன்றுள்ள கோவில்கள் எப்போது தோன்றின? அவற்றிற்கு மூலம் என்ன? கோவிற் கலை உணர்வு தமிழர்க்கே உரியதா? பண்டைக் காலத்தில் கோவில்கள் எவற்றிற்குப் பயன்பட்டன? நமது கடமை என்ன?' என்பன போன்ற கேள்விகட்கு விடை காணலே இவ்வாராய்ச்சிக் கட்டுரையின் நோக்கமாகும்.

**கோவிலும் கல்வெட்டும் :** "செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் இவை இல்லாமல் மும்மூர்த்திகட்கு விசித்திர சித்தன் (மகேந்திர பல்லவன்-அப்பர் காலத்தவன்) அமைத்த கோவில் இது" என்னும் கல்வெட்டு, மண்டபப்பட்டு என்னும் இடத்துக் கோவிலிற் காணப்படுகிறது. இதன் காலம் கி. பி. 615–630 ஆகும். இக்கல்வெட்டால் அறியத்தக்க செய்திகளாவன :

(1) மகேந்திரன் காலத்திற்கு முன் தமிழகத்தில் கற்கோவில்கள் இல்லை. இருந்த கோவில்கள் செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் இவற்ருல் ஆனவை.

(2) மகேந்திரன் காலத்திற்கு முன்னரே தமிழர் கோவில் கட்டத் தெரிந்திருந்தனர். ஆயின், அவை மண், மரம் முதலியவற்ருலாகி அழியத்தக்கன.

(3) இங்ஙனம் அழியத்தக்க பொருள்களால் அமைத்த கோவில்களையே மகேந்திரன் கற்களில் செதுக்கி அமைத்தனன்.

தரையும் சுவர்களும் செங்கற்களால் ஆனவை. மேற்கூரை மரத்தால் ஆயது. அங்கங்கு இணைப்புக்காக ஆணிகள் முதலியன பயன்பட்டன. இங்ஙனம் இயன்ற கோவில்களை இன்று மலையாள நாட்டிற் காணலாம். இங்ஙனம் கோவில்களை அமைப்பதில் தமிழர் பண்பட்டிராவிடில், திடீரெனக் கி. பி. 7ஆம் நூற்ருண்டிலிருந்து பல கோவில்கள் தமிழ்நாட்டில் தோன்றிவிட்டன எனல் பொருள் அற்றதாய்விடும்.

விமானங்கள், 'தூயது, கலப்பு, பெருங்கலப்பு' என மூவகைப்படும். கல், செங்கல், மரம் முதலியவற்றில் ஒன்றைக் கொண்டே அமைக்கும் விமானம் 'தூய விமானம்' எனப்படும். பல பொருள்களால் அமைவது 'பெருங் கலப்பு விமானம்' ஆகும். இது கட்டடக் கலை நூற் கூற்ருகும். இதனுலும் பண்டைக் காலத்தில் கோவில்கள் இருந்தமையும், விமானங்கள் இருந்தமையும் அறியலாம்.

இனி, தமிழகத்தில் மகேந்திரனுக்கு முன்பே கோவில்கள் இருந்தமைக்குக் கல்வெட்டுக்களே சான்ருதல் காண்க. திருக்கழுக்குன்றத்துக் கோவிற் பெருமானுக்குக் கந்தசிஷ்ய பல்லவன் (கி. பி. 436-460) நிலம் விட்டதாகவும், அதனை நரசிம்மவர்மன் தொடர்ந்து நடத்தியதாகவும் ஆதித்த சோழன் கல்வெட்டுக் கூறுகிறது.

தென்னவனைய் உலகாண்ட கோச்செங்கணுன் (கி. பி. 450-500) திருவக்கரையில் பெருமானுக்கு ஒரு கோவில் கட்டியிருந்தான். அதிராசேந்திரன் அதனைக் கல்லாற் புதுப்பித்திருந்தான். செம்பியன் மாதேவியார் திருவக்கரைக் கோவிலைக் கல்லாற் புதுப்பித்தார்; திருக் கோடிக்காவில் இருந்த செங்கல் விமானத்தையும் கருங் கல் விமானமாக அமைத்தார்.

**சங்க காலத்துக் கோவில்கள்:** பண்டைத் தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திலே வீரர் வணக்கத் துக்குரிய கோவில்கள் இருந்தன. முருகன், திருமால், காடுகிழாள் முதலிய தெய்வங்கட்குக் கோவில்கள் இருந் தன. தொகை நூல்களில் சிவபெருமான், முருகன், திருமால், பலராமன் இவர்கள் சிறப்புடைக் கடவுளராகக் கூறப்படுவதை நோக்குக. ஆலமர் செல்வற்கு நீலநாகம் நல்கிய கலிங்கத்தை, ஆய்வேள் அளித்தனன் என்று புறநானூறு புகலல் காண்க. இதனுல் அக்காலத்தில் கோவிலும் கடவுள் உருவச் சிலையும் இருந்தமை நன் கறியலாம். கி. பி. 2ஆம் நூற்ருண்டில் இயற்றப்பெற்ற சிலப்பதிகாரத்தும் மணிமேகலையிலும் காணப்படும் கோவில்கள் பல. மணிமேகலையில்,

" காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்
அருந்தவர்க் காயினும் அரசர்க் காயினும்
ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினும்
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
இறந்தோர் மருங்கில் சிறந்தோர் செய்த
குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும் "

எனவரும் அடிகள் வீரர், அருந்தவர், அரசர், பத்தினிமார் ஆகிய இவர்க்குக்கோவில்கள் இருந்தமையை வலியுறுத்துகின்றன. சுடுமண் (செங்கல்) கோவில்கள் குன்றுகள் போல உயர்ந்திருந்தன என்பது அறியத்தக்கது.

அற்புத வேலைப்பாடு: இக்கோவில்களும் அரசர் மாளிகைகளும் மண்டபங்களும் சிற்ப நூல் வல்லுநரால் நாள் குறித்து, நாழிகை பார்த்து, நேரறி கயிறிட்டுத் திசைகளையும், அத்திசைகளில் நிற்கும் தெய்வங்களையும் நோக்கி வகுக்கப்பட்டன என்பது,

" ஒருதிறம் சாரா அரைநாள் அமையத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வம் நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து "

எனவரும் நெடுநல் வாடை அடிகளாலும்,

" அறக்களத் தந்தணர் ஆசான் பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடுஞ் சென்று
மேலோர் விழையும் நூல்நெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டம் "

என வரும் சிலப்பதிகார அடிகளாலும் நன்குணரக் கிடத்தல் காண்க.

அரசர் கோவில்களும் தெய்வங்களின் கோவில்களும் சுற்றுமதில் உடையன; உயர்ந்த வாயில்களைப் பெற்றன; அவ்வாயில்கள்மீது உயர்ந்த மண்ணீடுகள் (கோபுரங்கள்) உடையன; அம்மண்ணீடுகளில் வண்ணம் தீட்டப் பெற்ற வடிவங்கள் அமைந்திருந்தன என்பது மணிமேகலை, மதுரைக் காஞ்சி முதலிய நூல்கள் நுவலும் செய்தியாகும்.

இக்கோவில்கள் அனைத்தும் செங்கற்களால் அமைந்

தவை. மேலே உலோகத் தகடுகள் வேயப்பட்டிருந்தன; சாந்து பூசப்பட்டிருந்தது. இங்ஙனமே உயர்ந்த மாட மாளிகைகளும் இருந்தன.

" விண்பொர நிவந்த வேயா மாடம் "
" சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பு "
" நிறைநிலை மாடத் தரமியந் தோறும் "

இவ்வாறு அமைந்த பெரிய கட்டடங்களைச் சுற்றி யிருந்த சுவர்கட்கு உயர்ந்த கோபுரங்களையுடைய வாயில் களும், அவ்வாயில்கட்குத் துருப்பிடியாதபடி செந்நிறம் பூசப்பட்ட இரும்புக் கதவங்களும் பொருத்தப்பட்டிருந் தன என்பது நெடுநல்வாடை அடிகள் (76, 88) அறிவிக்கும் அரிய செய்தியாகும். சிதம்பரத்தில் பதஞ்சலி முனிவர்க்கு இறைவன் நடன கோலத்தைக் காட்டி அருளினன் என்பது புராணச் செய்தி. பதஞ்சலி முனிவர் காலம் கி. மு. 150 என்று ஆராய்ச்சியாளர் அறைவர். எனவே, 'கோவில்' எனச் சிறப்புப்பெயர் பெற்ற சிதம்பரத்தில் உள்ள திருக்கோவில் கி. மு. 150க்கு முற்பட்டதாதல் அறிக. அங்குள்ள நடராசர் மண்டபம் மரத்தால் கட்டப் பட்டிருத்தலும் அதன் பழைமைக்குச் சான்றாகும்.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் தமிழகத்தையாண்ட கோச்செங்கட் சோழன் 70 கோவில்கள் கட்டியதாகத் திருமங்கையாழ்வார் கூறியுள்ளார். அவர்க்கு முன்னரே அப்பரும் சம்பந்தரும் இதனைத் தம் பதிகங்களிற் குறித் துள்ளனர்.

**தேவார காலத்துக் கோவில்கள்:** தேவார காலத்தில் தமிழகத்தில் ஏறத்தாழ முந்நூறு கோவில்கள் இருந்தன. அவை அனைத்தும் மரம், செங்கல், மண், உலோகம் ஆகியவற்றால் ஆனவை. அவை (1) பெருங் கோவில், (2) இளங்கோவில், (3) மணிக்கோவில், (4) கரக் கோவில், (5) தூங்கானைமாடம் முதலிய பலவகைப்படும். இவற்றுள் தம் காலத்தில் பெருங்கோவில்கள் மிகப் பல இருந்தன என்று அப்பரே அறைந்துள்ளார். பெரிய கோவில்களைப் பழுது பார்க்குங்கால் மூர்த்தங்களை எழுந்தருளுவிக்கப் பயன்பட்ட (பெரிய கோவில்

திருச்சுற்றில் உள்ள) சிறிய கோவிலே 'இளங் கோவில்' எனப்படும். பெரிய கோவிலுக்கு அண் மையில் உள்ள சிறிய கோவிலும் 'இளங்கோவில்' எனப் பெயர் பெறும். எனவே, தேவார காலத்திற்கு முன்பே பல கோவில்கள் புதுப்பிக்கப்பட்டன என்பது தெளிவாகிறதன்றோ? தேவார காலத்தில் விமானம் கொண்ட கோவில்கள் இருந்தன என்பது, பெண்ணாகடம் தூங்கானை மாடம் கோவிலின் அமைப்பைக்கொண்டு நன்கறியலாம். விமானம் 'தூங்கும் யானை' வடிவில் அமைந்ததாகும். திரு இன்னம்பர், திருத்தணிகைக் கோவில் விமானங்கள் இம்முறையில் அமைந்தவை. திரு அதிகைக்கோவில், திருக்கடம்பூர் இவற்றின் உள்ளறை கள் (மூலத்தானம்) தேர்போன்ற அமைப்பு உடையவை; உருளைகளும் குதிரைகளும் பூட்டப்பெற்றவை. திருச் சாய்க்காட்டுக் கோவிலை ஒட்டித் தேர் போன்ற விமானம் ஒன்று உருளைகளுடன் உள்ளது.

**பழைய கோவில்கள் :** இந்த விமான அமைப்புடைய தேர்போன்ற கோவில்களே பழையவை. இன்று காணப் படும் கோவில்களை அடுத்துள்ள தேர்கள் மிகப் பழைய காலத்தில் மரக்கோவில்களாக இருந்தவை. மனிதன் மரக் கோவில்களைப் போலச் செங்கற்களைக் கொண்டு பிற் காலத்தில் கோவில்களை அமைத்தான். சான்றாக, நகரியில் உள்ள சில கோவில்களைக் காணலாம். அவை கி. மு. 250இல் ஆக்கப்பட்டவை. அவற்றைச் சுற்றிக் கற்சுவர் கள் உள்ளன. ஆயின், கோவில்கள் மரத்தால் கட்டப் பட்டவையாகும்.

"மாமல்லபுரத்தில் உள்ள ஒற்றைக்கல் கோவில்கள் எல்லாம், பல்லவர் காலத்தில் இருந்த தமிழ்நாட்டுக் கோவில்களைப் போன்றவையே என்பதைப் பார்த்தவுடன் கூறிவிடலாம்," என அறிஞர் லாங்ஹர்ஸ்டு என்பவர் குறித்தல் காண்க.

**திராவிடக் கலை :** கோவில் கட்டுதல் திராவிடரது பழக்கம் ஆகலாம். அதனைப் பிற்காலத்தில் ஆரியர் கைக் கொண்டனர். தூபி, சைத்தியம் என்பன திராவிட

ருடையன. இவற்றை ஆரியர் கடன் பெற்றனர். இவை பிற்காலத்தில் இந்து சமயக் கோவில்களிற் காணப் பட்டன. இவற்றையே பௌத்தர் மேற்கொண்டனர். விமான வகைகள் பல தென் இந்தியாவில் உண்டு. அவை யாவும் கல்லறைகளிலிருந்து தோன்றின என்பது தவரு காது. தென் கன்னடக் கோட்டத்திலுள்ள 'முதுபித்ரி' என்னும் இடத்திற் காணப்படும் குருமார் கல்லறைகளில் மூன்று முதல் ஏழு அடுக்குக்கள் கொண்ட விமானம் காணலாம். சதுரத்தின்மேல் சதுரம் வைத்துக் கட்டப் பட்ட ஏழு அடுக்குக்கள் கொண்ட சதுரக் கல்லறைகள் பல இந்நாட்டில் உண்டு. இவ்வமைப்புக்கள் நாளடைவில் பெரிய விமானங்களாக மாறிவிட்டன என்பதில் ஐயமில்லே.

தென்ஞட்டுக் கட்டடக் கலே தமிழகத்துக்கே உரியது. இன்றுள்ள வானளாவிய கோபுரங்கள், விமானங்கள், இவற்றிற் காணப்படும் வேலேப்பாடுகள் அனேத்தும் இந் நாட்டுப் பழைய வேலேப்பாடுகளிலிருந்து வளர்ச்சியுற் றனவேயாகும். இந்த வளர்ச்சி பல நூற்ருண்டுகளாக உண்டானவை. மனிதக் குரங்கின் மண்டை ஓட்டி லிருந்து இன்றைய மனிதனது மண்டை ஓடு வளர்ச்சியுற் ருற்போலவே, தமிழகக் கட்டடக் கலேயும் வளர்ச்சி பெற்றுவந்ததாகும். இதன் உண்மையை மாமல்லபுரத்துத் தேர்கலேக் கொண்டும், திருப்பாதிரிப் புலியூரில் உள்ள சிவஞர் கோவில் வேலேப்பாட்டைக் கொண்டும் செவ் வனே அறியலாம்.

**கோவில்கள் பயன்பட்ட வகை :**

(1) சங்ககாலத்துக் கோவில்கள் அழியக்கூடிய பொருள்களால் ஆனவை. ஆதலால் நமக்குக் 'கல்வெட் டுக்கள்' கிடைக்கவில்லே. பின் வந்த பல்லவர், கற்கோவில் கள் அமைத்தனர். ஆதலின் கல்வெட்டுக்கள் கிடைக் கின்றன. அவர்களுக்குப் பின் வந்த சோழர் பழைய கோவில்கலேக் கற்கோவில்களாக மாற்றினர்.

ஆதலின், அழியா நிலேயுடைய கல்வெட்டுக்கள்

தோன்றின. அவை கோவில் அறப்பணிகளைக் குறிக்க எழுந்தன. ஆயினும், அரசர் மரபு, போர்கள், அரிய செயல்கள் இன்ன பிறவும் முதலில் பொறிக்கப்பட்டிருந்தன. அக்குறிப்புக்களே இன்று தமிழக வரலாற்றிற்கு அடிப்படையாக இருந்து உதவுகின்றன.

(2) கோவிலை அடுத்துச் சமய வளர்ச்சிக்குரிய மடங்கள் இருந்தன. அவை சமயக் கல்வியைப் புகட்டின; விழாக்களைக் காணவந்த அடியார்க்கு உண்டியும் உறையுளும் உதவின. அம்மடங்களுக்குப் பலர் தானம் அளித்துப் பாதுகாத்துவந்தனர்.

(3) கோவிலை அடுத்து மருத்துவச்சாலை இருந்தது. இதனைப் பல கோவில்களில் உள்ள கல்வெட்டுக்களால் அறியலாம்.

(4) நடனம், இசை, நாடகம் முதலிய நாகரிகக் கலைகள் கோவில்களில் வளர்க்கப்பெற்றன. இவற்றில் பண்பட்ட பெண்மணிகள் இருந்தனர். அவர்கள் அடிகள்மார், மாணிக்கத்தார், கணிகையர், உருத்திர கணிகையர் எனப்பட்டனர். தஞ்சாவூர்ப் பெரிய கோவிலில் மட்டும் நானூற்றுவர் இருந்தனர். பெருங்கோவில்களில் எல்லாம் நடன அரங்கு, இசை அரங்கு, நாடக அரங்குகள் இருந்தன.

(5) கோவிலில் 'தருக்க மண்டபம்', 'இலக்கண மண்டபம்' என்பனவும் இருந்தன என்பதைத் திருவொற்றியூர்க் கோவில் கல்வெட்டுக் கொண்டு அறியலாம். பாரதம், புராணம் போன்ற நூல்களைப் பொதுமக்கட்குப் படித்துக் காட்டக் கோவில்களில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

### அருஞ்சொற்பொருள்

பெருங்கணி - தலைமை நிமித்திகன். கோட்டம் - கோவில். வண்ணம் - நிறம். நிவந்த - உயர்ந்த. நெடுநல்வாடை - பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று. மூர்த்தங்கள் - சிலைகள். ஆலமர் செல்வர் - கல்லாலமரத்தடியில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். கலிங்கம் - ஆடை. காடமர் செல்வி - காளி. மும்மூர்த்தி - சிவன், திருமால், பிரமன்.

## பயிற்சி

I. விடை கூறுக:

1. மண்டபப்பட்டுக் கல்வெட்டு அறிவிப்பது யாது?
2. விமானங்களின் வகைகளையும் அவற்றின் அமைப்புக்களையும் பற்றிக் கூறுக.
3. தமிழகத்தில் மகேந்திரனுக்கு முன்பே கோவில்கள் இருந்தன என்பதற்குச் சான்று யாது?
4. மகேந்திரனுக்கு முற்பட்ட காலத்துக் கோவில்கள் எவ்வாறு அமைந்திருந்தன?
5. தேவார காலத்துக் கோவில்களைப்பற்றி நீ அறிவன யாவை?
6. பண்டைக் கோவில்கள் எங்ஙனம் பயன்பட்டன?

II. 1. குறிப்பு வரைக:
மணிமேகலை, நெடுநல்வாடை, கோச்செங்கணன், பல்லவர், கல்வெட்டு.

2. பிரித்துக் காட்டுக:
தென்னாட்டுக்கலை, கட்டடக்கலை, கற்கோவில், இம்முறை, அவ்வாயில், அறைந்துள்ளார், திருச்சுற்று, சிவபெருமான், பெருங்கலப்பு.

III. 1. இப்பாடப் பொருளைச் சுருக்கி இரண்டு பக்க அளவில் ஒரு கட்டுரை எழுதுக.

2. நீ பார்த்த ஒரு கோவிலைப்பற்றி விளக்கி ஒரு கட்டுரை வரைக.

# 18. பாரதம் வென்றது

**புலவர் சி. இளங்கோவன் அவர்கள்**

[இந்நாடக ஆசிரியர் புலவர் இளங்கோவன் அவர்கள் கோவை—காணிக்கையன்னை மகளிர் உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றிவருகிறார்; நாட்டுப்பற்றையும் மொழிப் பற்றையும் நன்முறையில் வளர்க்கும் நாடகங்கள் பலவற்றையும், கருத்துச் செறிந்த கவினுறு புதினங்களையும் ஆக்கியளித்துள்ளார். இந்நாடகம் அவர் பணியாற்றும் பள்ளியின் வெள்ளி விழா மலரினின்று எடுக்கப் பெற்றுள்ளது.]

## முன்னுரை

அலெக்சாண்டர் மாசிடோனியா பெற்றெடுத்த மாவீரன்; இரண்டாம் பிலிப்பு ஈன்றெடுத்த இணையற்ற மாமகன்; ஆற்றல் சால் மறவன்; அறிவியலை வளர்த்தோன்; அறிஞர்களைப் போற்றியவன்.

அவன் கீரிஸ் நாடு முழுவதையும் தன்னகப் படுத்திய தளராத ஊக்கமுடையோன்; ஞாலமெங்கும் கிரேக்க நாகரிகம் நடமாட வழிவகுத்தோன்.

அவன் பாதம் பட்ட நாடுகள் அனைத்தும் பணிந்தன. அவன் பார்வை கண்ட மன்னரெல்லாம் அஞ்சி ஒதுங்கினர். எதிர்த்து வந்தோர் அவன் வாளுக்கு இரையாயினர். இணையடி பணிந்தோர் அவன் துணை பெற்று மகிழ்ந்தனர்.

பிணமலைகள், பெருங்குருதிப் பேராறு, பேய்க் கூட்டத்தின் அலறல் ஆகிய இவற்றிற்கெல்லாம் இடையே அவன் ஏற்றிவைத்த வெற்றிக் கொடிகள் விண்ணளாவிப் பறந்தன. ஆம். ஒன்றா, இரண்டா, அவன் வென்ற நாடுகள்?

அதோ! சிறிய ஆசியா! சீர்மிகுந்த சிரியா! பல்வளங்கொண்ட பாரசீகம்! அனைத்தும் அவன் அடி பணிந்தன.

பாரதம் அவன் பார்வையிலே பட்டது. பாரதம்...... பல்வேறு அங்கங்களாகப் பகுக்கப்பட்டு—சிதறி—சீரழிந்து—சின்ன பின்னப்பட்டு, சின்னஞ்சிறு நாடுகளாகச் சிதறிப் பரந்து கிடந்த நிலையோ......அவன் ஏற்றத்தை உயர்த்திக் காட்டியது. அவன் "எடுபடை, பிடி நாட்டை," என எக்காளமிட்டு வந்தான்.

சிந்துநதியும் அதன் செழிப்பான தோற்றமும் வந்தவனை வாவென்று அழைத்தன. கிரேக்க நாட்டுப் படை கிளர்ந்தெழுந்தது. தட்சசீலம் அவற்றிற்குத் தலைவாயிலாக அமைந்தது.

கிரேக்கர் படை அம்பியின் நாட்டில் புகுந்தது.

## காட்சி ஒன்று

**இடம் :** சிந்துநதிக்கரை

**இருப்போர் :** அலெக்சாண்டர், அம்பி, வீரர்கள்

**நிகழ்ச்சி :** அலெக்சாண்டர் வெற்றிச் செருக்கொடு இறுமாந்து நிற்கிறான். அம்பி அவனை அடிபணிகின்றான்.

**அலெக்சாண்டர் :** யார் நீ?

**அம்பி :** நான் இதுவரை இந்த நாட்டு மன்னன்.

**அலெக்சாண்டர் :** அதாவது......அலெக்சாண்டர் தட்சசீலத்திலே அடியெடுத்து வைக்கும் வரை...... இல்லையா?

**அம்பி :** ஆம். கிரேக்கத்தின் புகழ் கேட்காத நாடே இல்லை. கிரேக்க வீரரின் வெற்றி பற்றிப் பேசாத நாளே இல்லை.

**அலெக்சாண்டர் :** நீயும் அதனைக் கேட்டாய். அதனால் ......என்னை நேரடியாக......

**அம்பி :** காணவந்தேன்; கண்டு களிக்க வந்தேன்; வீரத்தைப் போற்றி உம்மை விருந்திற்கு அழைக்க வந்தேன்.

அலெக்சாண்டர்: விருந்து......! விருந்து......!! தட்ச சீலத்துத் தார்வேந்தன் கிரேக்கநாட்டு மாவீரனுக்கு விருந்தளிக்கப் போகிறுன்! அம்பி, அதோ பார். அணிவகுத்து நிற்கும் ஆயிரக் கணக்கான கிரேக்க வீரர்களை; தோள் வெறி காட்டத் துடித்து நிற்கும் ஆயிரக்கணக்கான வெற்றி வீரர்களைப் பார்! அத்துணை வீரர்களுக்குமா விருந்து?

அம்பி: தாங்கள் ஆணையிட்டால் சிந்து நதிக்கரையிலே விருந்தாக்கப்படும். அமுதம் போன்ற விருந்து; அதை அள்ளியள்ளி உண்ணும் கிரேக்க வீரர்களைக் காண்பீர்கள்.

அலெக்சாண்டர்: (ஏளனச்சிரிப்புடன்) ஆணையிட்டால் ......புள்ளிமான் கூட்டத்திற்குப் புலி ஆணையிடு வதில்லை.........போ! போ! உன் விருப்பப்படியே செய்வதற்குப் போ!

(வணங்கிப் புறப்படும் அம்பியை விளித்து)

அம்பி, அம்பி, (அம்பி திரும்புகிறுன்.) வம்புக்கு வருவாய் என்று வந்தேன்; நீயோ எனக்கு வரவேற்புக் கூற வந்துவிட்டாய்; நீ அறிவாய் என் படை வலிமையை; நிலைமை தெரிந்தவன்; நேசக் கரம் நீட்டிவிட்டாய். தெம்பு குறைந்தவனே, எம்மைச் சேர வேண்டும் கப்பத் தொகை;.........காணிக்கைப் பொருள்......! அடிமைக் கூட்டம்......அனைத்தும்.....

அம்பி: அனைத்தும் தயார், அனைத்தும் தயார். கிரேக்கத்துச் சிங்கமே! தட்சசீலம் தங்கள் தயவையே நாடுகிறது. எவர்க்கும் அடிபணியாதவன் இந்த அம்பி; ஆயினும், மாவீரன் அலெக்சாண்டரின் முன்னே மண்டியிட்டு நிற்கிறுன்.

ஆளப் பிறந்தவனே, நீ வாழ்க!

## காட்சி இரண்டு

இடம்: புருடோத்தமன் அவை

இருப்போர்: புருடோத்தமன், அவையோர்

நிகழ்ச்சி: நாட்டிய அரங்கம்

வாழ்க தாயகம்! வாழ்க தாயகம்! வாழ்க தாய்த்திரு நாடு!

(நடனமாது பாட்டிசைத்து நாட்டியமாடுகிருள். இடையே ஒற்றன் புகுகிருன்.)

ஒற்றன்: வாழ்க மாமன்னன்! வளர்க தாயகம்! வளம் பெறுக தாய்த்திருநாடு!

புருடோத்: ஒற்றனே, நீ பெற்று வந்த செய்தி யாது?

ஒற்றன்: மன்னர் மன்னவா, வாழ்க நின்புகழ்! வளர்க நின் செங்கோல்! சீர்பெற்ற சிந்துவெளி இன்று சிறுமை அடைந்துவிட்டது. பேர் பெற்ற மன்னன் அம்பி தன் பெருமையை இழந்து பேடியாகி விட்டான்.

புருடோத்: ஒற்றனே, உற்றதைச் சொல். என்ன நடந்தது?

ஒற்றன்: சிந்து நதிக் கரையிலே கிரேக்க வீரர் அடி யெடுத்து வைத்தனர். அலெக்சாண்டர் தன் படை களை அணி வகுத்து நின்ருன்.........தட்சசீலத்து மன்னன் அம்பி.........மன்னவா, நா எழவில்லை. என் உள்ளமே நாணமுறுகின்றது.

புருடோத்: படையெடுத்தான், பகைவனை ஓட ஓட விரட்டினன், பாரதத்தின் புகழ் பரப்பினன்......... என்றெல்லாம் கூறுவாய் என்று நான் எதிர்பார்க்க வில்லை.........அவன் பெரும்படை.........பேடிகைவா ளென்பது எனக்குத் தெரியும். பாரதமே, பகை வனைப் பணிய வைத்த நீ, அவன் பாதம் போற்றியும் வாழ்வாயா?

**ஒற்றன் :** அது மட்டுமன்று, அரசே, கிரேக்க வீரர்க்குப் பெருவிருந்திட்டான்.

**புருடோத் :** கப்பம் கொடுத்தான்; அவன் காலடி பணிந்தான்.........விவரம் கெட்டவன்........நமக்குள் பல இருக்கலாம்.........அதற்காக.........அயலானை இந்நாட்டில் அடியெடுத்து வைக்க விடுவதா? நமக்குள் இருப்பது பங்காளிப்பகை; அதை நாளைக்கே நாம் தீர்த்துக்கொள்ளலாம். அதற்காக......... வேற்று நாட்டானுக்கு நாட்டைக் காட்டிக்கொடுப்பதா? அம்பி, கயவனே, உன்னைக் கண்டு பாரதத் தாய் கண்ணீர் சிந்துவதைக் காணடா.

**காவலன் :** (உள்ளே வந்து) மன்னர் மன்னவா, வாழ்க நின் புகழ்! வளர்க நின் செங்கோல்! பல நாடுகளை வென்ற மன்னன் அலெக்சாண்டர் அனுப்பியுள்ள தூதுவன்.........வாயிலில் காத்திருக்கிறன்.

**புருடோத் :** வரச் சொல்.

**தூதுவன் :** மன்னர் மன்னவா, வாழ்க நின் புகழ்! வளர்க நின் செங்கோல்! ஆற்று வளம் பெருக்கும் அகன்ற நாட்டின் அரசே, நேற்றுவரை அமைதி காத்த உனது நாடு.........நாளையும் அதைக் காக்க வேண்டும்.

**புருடோத் :** ஆமாம். உங்கள் உயிரையும் நாங்கள் தான் காக்க வேண்டும்; அந்த உதவிக்காக நீங்கள் நன்றி சொல்லவும் வேண்டும்.

**தூதுவன் :** மன்னவா, மாவீரன் அலெக்சாண்டரின் தூதுவன் யான்.

**புருடோத் :** தெரியும்.

**தூதுவன் :** கிரேக்கம் எங்கள் தாயகம்.

**புருடோத் :** உண்மையைச் சொன்ன உன்னைப் பாராட்டுகிறேன்.

தூதுவன் : சிறிய ஆசியா எம்மைச் சிரந் தாழ்த்தி வணங்குகிறது. சீர் பெருக்கும் சிரியா நாட்டிலே எங்கள் வெற்றிக் கொடி வீறுகொண்டு பறக்கிறது. பாரசீகம் எங்கள் காலடியிலே பணிந்து கிடக்கிறது.

புருடோத் : ஆம். ஆம். உண்மையைத்தான் சொன்ஞய். அலெக்சாண்டராயிற்றே !

தூதுவன் : என்ன ?......... !

புருடோத் : இல்லை, இல்லை. நீ அலெக்சாண்டர் அனுப்பியுள்ள தூதுவன் ஆதலால் உண்மையைத் தான் சொல்வாய்.

தூதுவன் : அது மட்டுமன்று. வடமேற்குக் கணவாய் வழி காட்டியது ; வரவேற்றது தட்சசீலம்.

புருடோத் : அவ்வளவுதான ? அம்பி அளித்த விருந்து நும் மன்னர்க்குத் தெம்பையும் ஊட்டியிருக்கிறது.... அதனல்....ஜீலம் நதியும், சீனுப் நதியும் செழிப்பாக்கும் எங்கள் திருநாடும் உங்களை வரவேற்கிறது—வரவேற்கிறது—வாழ்த்துகின்றது.

தூதுவன் : என்ன....?

புருடோத் : ஆம். வந்த விருந்தினரை வரவேற்பது தான் எங்கள் மரபு; அடி பணிந்தாரை அணைத்துக் காப்பதுதான் எங்கள் நாகரிகம்; அதனல்தான் நும்மையும் வரவேற்கின்ருேம்; வருவிருந்து ஓம்புகின்ருேம்.

தூதுவன் : அலெக்சாண்டர் எம்மை அனுப்பியது அடி பணிவதற்கன்று; அமைதியைக் காப்பதற்காக......

புருடோத் : சிங்கத்தின் குகையிலே சிறு நரி அமைதி காப்பதுண்டா ? அமைதி காக்க வருவதாம் நரி; அதை அறிவிக்க வந்திருக்கிறது ஒரு குள்ள நரி......

தூதுவன் : பட்டம் சூடிப் பாராளும் வேந்தனே, பகைப் புலங்கள் எம் படைகளால் பட்ட பாட்டை நீ பார்த்திருக்கமாட்டாய். மாவீரன் அலெக்சாண்டர்

இந்த மண்ணிலே அடியெடுத்து வைத்தால்............ ஜீலம் நதியிலும், சீனுப் நதியிலும் நீர்ப் பெருக்கு ஓடாது; குருதி பெருக்கெடுத்து ஓடும்; கிரேக்க வீரர்களின் வலக்கரத்திலே வாளும் வேலும் மின்னத் தொடங்கினுல்......உன் நாட்டு வீரர்களின் முண்டங் கற் வெற்றுத்தரையிலே துள்ளிக் குதிக்கும்.

**புருடோத்:** புலிக்குப் பூனை பாய்ச்சல் காட்டியதாம். புல்லனே, தூதுவனுக வந்தவன் சொல்ல வேண்டுவ தைச் சொல்.

**தூதுவன்:** போரஸ்.........

**புருடோத்:** அலெக்சாண்டர், இந்த நாட்டிலே காக்கை பறந்தாலும் என் கட்டளையைப் பெற்றுத்தான் பறக்கவேண்டும். என்னை அறியாமல் இந்த நாட்டிலே ஈ எறும்பும் புகமுடியாது. அம்பி பணிந்தான் என்ற ஆணவத்தால் அகில பாரதத் தையே வென்றுவிடலாம் என்று கனவு கண்டாய்; அதன் விளைவு.........தூதுவனுக வேடமிட்டாய்.

**அலெக்:** என்ன.........?

**புருடோத்:** ஆம். அலெக்சாண்டர், உன்னை நான் நன்ருக அறிவேன்; நீ ஜீலம் நதியைக் கடந்த பொழுதே உன்னைத் தொடர்ந்தேன்; ஒற்றர்கள் உன்னைத் தொடர்ந்தபோது தடுத்து நிறுத்தினேன். தானைத் தலைவர் உன்னைத்தாக்க வந்தபோது வணிகக் கோலத்தோடு வந்து உன்னைக் காத்தவர் யார்? புரிகிறதா? அலெக்சாண்டர், இப்பொழுதே னும் புரிந்துகொள்.

**அலெக்:** புரிந்துகொள்வதற்காக மட்டும் அன்று; தெரிந்துகொள்வதற்காகவும் வந்திருக்கின்றேன்.

**புருடோத்:** என்னவென்று...........?

**அலெக்:** போரஸ் உயர்த்தப் போவது போர்க்கொடியா? அல்லது புகலிடம் தேடும் வெள்ளைக் கொடியா?

**புருடோத்:** அலெக்சாண்டர், உன் அறியாமையை இந்த அவையிலே காட்டாதே. தலை தரையிலே உருளுமுன்னே ஓடிப்போ. தூது மொழி சொல்ல வந்தவன் என்று நீ சொன்ன ஒரே சொல்லுக்காக .........உன்னை மன்னிக்கிறேன். மன்னிப்பது பாரதப் பண்பாடு. போர்க்களத்திலே சந்திப்போம். அங்கே புறங்காட்டியோடத் தயாராயிரு. போ! போ! போ!

ஒலி

போர்! போர்! போர்! ஒரு நாளா? இரு நாட்களா? மூன்று நாட்கள் இடைவிடாத போர்! ஜீலம் நதிக்கரை முழுமையும் செங்குருதிப் பெருக்கு; தோல்வியறியாத அலெக்சாண்டர் துவண்டு போனான். அவன் படைகளோ சிதறடிக்கப்பட்டன. பாரத வீரர்கள் ஏறென நிமிர்ந்தனர். வெற்றிப் பாதையிலே வீறுநடை போட்ட புருடோத்தமனின் போர் யானை, மத வெறி பிடித்து ஓடியது. வழுக்கி விழுந்தான் புருடோத்தமன். கிரேக்கப் படை அம்மாவீரனைக் கைது செய்தது. தலைவனை இழந்த பாரதப்படை தளர்ச்சி யடைந்தது. அதன் முடிவு.........

## காட்சி மூன்று

**இடம்:** ஜீலம் நதிக்கரை

**இருப்போர்:** அலெக்சாண்டர், புருடோத்தமன், வீரர்கள்

**நிகழ்ச்சி:** கைதியாகப் புருடோத்தமன், காவலனாக அலெக்சாண்டர்.

**அலெக்:** போரஸ், நீ பாய்ந்து வரும் பெரும்புலி; சீறி வரும் சிங்கம்; பகைக்கஞ்சாக் களிறு; உன்னை நான் பாராட்டுகிறேன்.

**புருடோத்:** நான் விரும்புவது உன் பாராட்டுதலை அன்று; என் தாயின் பாராட்டுதலை.

அலெக்: யார் அந்தத் தாய்? எங்கே அந்தத் தாய்? மாவீரனுகிய உன்னைப் பாராட்ட மறுக்கும் அந்தத் தாய் எங்கே? நான் பாராட்டச் சொல்லுகிறேன்.

புருடோத்: தாய் தன் மகனைப் பாராட்டத் தரகனுக வந்தவனு நீ? சீ......! என்னைப் பெற்றவள், எடுத்து வளர்த்தவள், சீராட்டியவள், பாராட்டியவள், பாரதத் தாய்.

அலெக்: பாரதத்தாய் உன்னைப் பாராட்டவேண்டும். அவ்வளவுதானே? அதற்காக நான் என்ன செய்ய வேண்டும்?

புருடோத்: இல்லை; நீ செய்ய வேண்டுவது ஒன்றுமே இல்லை. நான்தான் செய்யவேண்டும்; செய்திருக்க வேண்டும்.

அலெக்: என்ன செய்திருத்தல் வேண்டும்?

புருடோத்: பாரதத்தின் மண்ணிலே, பகைவர் காலடி பட்ட நேரத்திலே, அவர்கள் உடல்கள் இரண்டாகக் கிழிக்கப்பட்டு, நாயும் நரியும் தின்னும் பிணமாக்கப் பட்டிருக்க வேண்டும்; அதைக் கண்டு என் தாய் சிரித்திருப்பாள். பளபளக்கும் ஈட்டிகள் பகைவன் மார்பிலே பாய்ந்திருக்க வேண்டும்; அங்கிருந்து செங்குருதி பொங்கியெழ வேண்டும்; அதை என் தாய் பார்த்திருந்தால்...பூரித்திருப்பாள். அயலான் இந்த நாட்டிலே அடியெடுத்து வைத்த நேரத்திலே, அவன் கால்கள் துண்டிக்கப்பட்டிருக்கவேண்டும். என் தாய் அதைக் கண்டு மகிழ்ச்சி பூத்திருப்பாள்.

அலெக்: வேல் பாய்ந்த வெங்களிறு — அடிபட்ட சிறுத்தை—கதறத்தான் செய்யும்.

புருடோத்: ஆம். கதறத்தான் செய்யும். அயலான் படையெடுத்த நேரத்திலே, இந்தப் புண்ணிய பூமியிலே பிறந்த அம்பி போன்ற சிலர், நாட்டையே காட்டிக்கொடுக்கும் கயவர்களாக மாறிவிட்டார்களே என்பதால், என் தாயின் உள்ளம் கதறத்தான் செய்யும்.

தாயின் மானம் காக்காத தறுதலைகளும் தன் வயிற்றிலே பிறந்தார்களே என்பதற்காக அந்தத் தாயின் உள்ளம் கதறத்தான் செய்யும்; கண்கள் நீரை வடிக்கத்தான் செய்யும். நானும் கதறத்தான் செய்கின்றேன். கிரேக்க நாட்டான் தலையைத் தனியாக அறுத்து எடுத்து—குருதி சொட்டச் சொட்டப் பாரத அன்னையின் பாதத்திலே கிடத்திப் 'பார், தாயே, பார். உன் பகைவன் கதியைப் பார். அன்னையாம் உனக்கு விலங்கிட வந்த அறிவிலியைப் பார். பாரத நாட்டின்மீது படைகொண்டு வந்த பரதேசியின் கதியைப் பார்,' என்று கூறி, அவளுடைய இணையடிகளை வாழ்த்த இயலாமல் போனதே என்பதை நினைத்துத்தான் கதறுகின்றேன்; கனலிற் பட்ட புழுவெனத் துடிக்கின்றேன்.

அலெக்: போரஸ், பொறுமையைச் சோதிக்காதே. தோற்றவன் நீ; வென்றவன் நான்; வென்றவனுக்குத் தோற்றவன் அடிமை; இதுதான் போர்க்களத்து நீதி......!

புருடோத்: தோற்றவன்...! வென்றவன்...! போர்க்கள நீதியாம்...போர்க்கள நீதி! (பல்லை நெறுநெறென்று கடித்து) மதங்கொண்ட களிற்றிலிருந்து வழுக்கி விழுந்த நேரத்திலே நீ என்னைக் கைது செய்தாய். அதனுல் நீ வென்றவன்—இல்லாவிட்டால்...உன் படைகளிலே பாதி அழிந்ததைப்போல—மறுபாதியும் வானகம் சென்றிருக்கும். இந்த வையகம் என்னை வாழ்த்தியிருக்கும். இந்த நாட்டின் புகழ் கிரேக்கத்திலே எட்டியிருக்கும்......

அலெக்: எட்டவில்லையே! போரஸ், அதனுல்தான் சொல்லுகின்றேன். ஆண்ட பரம்பரையிலே வந்தவன் நான்; என் அடிமையாகிய நீ பாதம் பணிந்து—பல்லாண்டு பாடி—கப்பம் அளிக்க ஒப்புதல் கொடுத்தால்—நாடு உனக்குச் சொந்தம்—நான் உனக்கு உறவு.

புருடோத்: மறுத்தால்?

அலெக்: மறுத்தால்...! போரஸ் நல்லவன்; போர்க்கள நீதியை உணர்ந்தவன்; கப்பம் கட்ட மறுக்கமாட்டான்...ஆதலால்......

புருடோத்: அயலானே, கிரேக்கத்தின் ஆணவக் குரலே, உனக்குத்தான் கூறுகின்றேன். மானம் அல்லது மரணம்—பாரத வீரனின் பண்பு அதுதான்.

அலெக்: போரஸ், மாவீரன் அலெக்சாண்டர். அவனிடம் நீ மன்னிப்புக் கேட்டால்...!

புருடோத்: மன்னிப்பா? கொடுத்துத்தான் பழக்கம்; பெற்றுப் பழக்கம் இல்லை.

அலெக்: போரஸ், வேலேந்தி நிற்கும் வீரர்களைப்பார். அவர்தம் வேற்படை கூறும் வீரமொழி உனக்குப் புரியவில்லையா? என் வலக்கரம் அசைந்தால்...... அத்தனை வாள்களும் அசையும். போரஸ், புரிந்தவன் நீ; பொறுப்புடையவன் நீ; என் பொறுமையைச் சோதிக்காதே.

புருடோத்: பொறுமைக்கே இலக்கணம் வகுத்தது எங்கள் தாயகம். பொறுமைக்கே இலக்கியமாகத் திகழ்வது எங்கள் திருநாடு. நீ எங்களுக்கே பாடம் கற்பிக்கிறாய். அலெக்சாண்டர், நான் தோற்றேன்; தோல்வியை ஏற்றுக்கொள்கின்றேன்; கைதியாக்கப்பட்டிருக்கின்றேன். இது கனவன்று என்பதும் எனக்குத் தெரியும். உன் முடிவு எதுவோ அதைச்செய். வெற்றி—அல்லது வீர மரணம்; ஒன்றை இழந்துவிட்டேன்; மற்றொன்றையும்......

அலெக்: நான் விரும்பமாட்டேன்; போரஸ், நான் விரும்பமாட்டேன். போரஸ், புரியும்படியாகச் சொல்லுகிறேன். நீ போர் வீரன்—'பணிந்தேன்' என்ற ஒரு சொல் சொல். அதற்காக இந்தப் பாரையே உனக்களிக்கக் காத்திருக்கின்றேன்.

புருடோத் : வெற்றியை யாசித்துப் பெறுவது—வீரத்தை விலைகொடுத்து வாங்குவது—கிரேக்கர்களுக்கு வழக்கமாயிருக்கலாம்.

அலெக் : (சினத்துடன்) போரஸ், நீ என்னை இகழ்ந்தாய் ; நான் பொறுத்துக்கொள்ளுகின்றேன். என் நாட்டையே இகழத் துணிந்தாய் (கிரேக்க வீரர்கள் புருடோத்தமனை நெருங்கி வருதல்) பொறுங்கள் ; பொறுமையைக் கொள்ளுங்கள். போரஸ், இறுதியாக ஒரு சொல்.

புருடோத் : என்ன ?

அலெக் : உன்னை நான் எப்படி நடத்தவேண்டும் என்று நீ விரும்புகின்ருய் ?

புருடோத் : நான் நாட்டிற்கு மன்னனுக—நல்லவர்கட்கு நண்பனுக—உரிமைபெற்ற பாரதத்தின் ஒப்பற்ற வீரனுக நடத்தப்படல் வேண்டும் என்பதை விரும்புகின்றேன்.

அலெக் : போரஸ், (கட்டித் தழுவி) இறப்புக்கும் அஞ்சாத உன் மாவீரத்திற்கு நான் தலை வணங்குகின்றேன். நான் தூதுவனுக வந்தபோது நீ என் தலையைத் துணித்திருக்கலாம். ஆனுல் நீ என்னை மன்னித்தாய். மன்னிப்பவன் மன்னிக்கப்படுவான். இதுதான் நீதி. இதுதான் வேதம். படை பலம் என்னை வெற்றி வீரனுக்கியது. ஆயின், பாரதப் பண்பாடு உன்னை வெற்றி வீரனுக்கியது. படை வெல்லாது ; பண்பாடுதான் வெல்லும். ஆம். பாரதம் வென்றது !

## அருஞ்சொற்பொருள்

ஏற்றம் - பெருமை. தாயகம் - தாய்நாடு. குருதி - இரத்தம். களிறு - ஆண்யானை.

## பயிற்சி

I. விடை கூறுக:

1. அம்பி என்ற இந்திய மன்னன் அலெக்சாண்டரிடம் எம் முறையில் அடிபணிந்தான்?
2. புருடோத்தமனுக்கு ஒற்றன் கூறிய செய்தி யாது? அதனைக் கேட்ட புருடோத்தமன் யாது கூறினான்?
3. இடந்தோன்ற விளக்குக:
   (1) " புலிக்குப் பூனை பாய்ச்சல் காட்டியதாம்."
   (2) ".காக்கை பறந்தாலும் என் கட்டளையைப் பெற்றுத் தான் பறக்கவேண்டும்."

II. 1. கைதியாக நின்ற புருடோத்தமனுக்கும், வெற்றிவீரன் அலெக்சாண்டருக்கும் நடந்த உரையாடலைத் தொகுத்து வரைக.
2. இந்த நாடகத்தைக் கதையாக எழுதுக.
3. அலெக்சாண்டரே இந்நாடக நிகழ்ச்சியைக் கூறுவதுபோலக் கூறுக.
4. புருடோத்தமனே இந்நாடக நிகழ்ச்சியைச் சொல்வதுபோலச் சொல்லுக.
5. அம்பி என்ற அரசன் இந்நாடக நிகழ்ச்சியைக் கூறுவது போலக் கூறுக.


தமிழ்நாடு ஆவணக் காப்பக நூலகம். சென்னை-600 008.
146357
TB 031(10) N66

